திருத்தொண்டர் புராணம்
என்னும்

# பெரியபுராணம்

(மூலமும் - உரையும்)

**முதலாம் தொகுதி**




உரையாசிரியர்
**சூ. சுப்பராயநாயகரவர்கள்**

சேக்கிழார் அருளிய

# திருத்தொண்டர் புராணம்

என்னும்

# பெரியபுராணம்

(மூலமும் - உரையும்)

உரையாசிரியர்

கூ. சுப்பராயநாயகரவர்கள்

பதிப்பாசிரியர்

சு. இலம்போதரன்




முல்லை நிலையம்

9, பாரதி நகர் முதல் தெரு,

தி. நகர், சென்னை – 600 017.

முதல் பதிப்பு : 2010

## நூல் பற்றிய விவரங்கள்

நூற் பெயர் : பெரியபுராணம்

உரையாசிரியர் : சூ. சுப்பராயநாயகரவர்கள்

பதிப்பாசிரியர் : சு. இலம்போதரன்

பதிப்புரிமை : முல்லை நிலையம்

தாள் : வெள்ளைத்தாள் 18.1கி.கி.

நூலின் அளவு : டெம்மி

மொத்தப் பக்கங்கள் : 704

வெளியிடுவோர் : முல்லை நிலையம்
9, பாரதி நகர் முதல் தெரு,
தி. நகர், சென்னை – 17.
போன்: 28342249

விற்பனை உரிமை : பாரி நிலையம்,
184/88, பிராட்வே,
சென்னை – 600 108.

பொருள் : திருத்தொண்டர் வரலாறு

கணினி : லதா கம்ப்யூட்டர்,
சென்னை – 1. 9840405847.

---

**நூலின் விலை: ரூ. 400.00**

---

அச்சிட்டோர் : மோனார்க் கிராபிக்ஸ்
பெரியார் பாதை, சென்னை–94.
போன்: 23621086

# பதிப்புரை

'திருமுறை' என்ற சொல், முதன்முதலாக திருமந்திரத்தில்தான் 'பாடுந்திருமுறை' என்று வருவதாக ஆய்வறிஞர் கூறுவர். திருமுறை என்றால் தெய்வத்தன்மை, அழகு, அருள், செல்வம் போன்றவைகளைக் கொண்ட பனுவல் என்று பொருள். சைவத் திருமுறைகள் பன்னிரண்டு என்பது தெரியும். அதில் பன்னிரண்டவதாக வைத்தெண்ணப்படுவது பெரிய புராணம். இந்த நூலை திருத்தொண்டர் புராணம் என்றும் கூறுவர். அறுபத்து மூன்று தனி அடியார்களைப் பற்றியும், ஒன்பது தொகையடியார் களைப் பற்றியும் வரலாற்றுப் பாடல்களைக் காண்டங்களையும், பதின்மூன்று சருக்கங்களையும், 4286 பாடல்களையும் கொண்ட தெய்வப் பனுவல்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், நாயன்மார்களைப் பற்றி 'திருத்தொண்டத் தொகை' என்ற நூலைப் பாடியருளினார். திருநறையூர் நம்பியாண்டார் நம்பி என்ற மேலார் திருத்தொண்டர் திருவந்தாதி என்ற நூலைப் பாடினார். இவை பெரிய புராணத்திற்கு முதல் நூலாகவும், வழிநூலாகவும் வைத்து எண்ணப்படுகின்றன. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் போன்றவர்களின் தொண்டுகளையும், அவர்கள் இயற்றிய முதல் ஏழு திருமுறைகளின் சிறப்பையும் எடுத்து இயம்புகின்றது.

திருஞானசம்பந்தருக்கு 1256 பாடல்களையும், திருநாவுக்கரசருக்கு 429 பாடல்களையும், பெரியபுராணத்துள் தெய்வச் சேக்கிழார் பாடி வைத்துள்ளார். எனவே அறிஞர் பெருமக்கள் 'பிள்ளை பாதி', 'புராணம் பாதி' என்று கூறுவர். அதாவது, திருஞானசம்பந்தப் பிள்ளையாரைப் பற்றி பாதி புராணமும், மற்ற அடியார்களைப் பற்றி மீதி பாதி புராணமும் இருப்பதாகவும் கூறி மகிழ்வர். தமிழர்களுக்கு வரலாற்று உணர்வு இல்லை என்பது பலர் கூறும் குறை. 'வாழ்வாங்கு வாழ்ந்தவரை' வையம் மறக்குமா? புறநானூறு, சிலப்பதிகாரம், கலிங்கத்துப் பரணி முதலியவை, கலை நயம் ததும்ப படைக்கப் பட்ட காப்பியங்களைப் போலவே, பாமரனைப் பற்றியும் பாடி அவன் பெயர் நிலைக்கச் செய்த பெருங்காப்பியம் பெரிய புராணம்.

| | | | |
|---|---|---|---|
| | | | 51 |
| சிவவேதியர் | 5 | பாணர் | 1 |
| அந்தணர் | 13 | பரதவர் | 1 |
| மாமத்திரர் | 1 | வேடர் | 1 |
| வேந்தர் | 6 | சான்றார் | 1 |
| மன்னர் | 5 | சாலியர் | 1 |
| வணிகர் | 5 | செக்கார் | 1 |
| வேளாளர் | 13 | ஏகாலி | 1 |
| இடையர் | 2 | புலையர் | 1 |
| குயவர் | 1 | மரபு அறியாதவர் | 6 |
| | 51 | | 65 |

அறுபத்து மூன்று நாயன்மார்களுடன் சுந்தரமூர்த்தி பெருமானின் தந்தையார் சடையனார், தாயார் இசைஞானியார் இருவரையும் சேர்த்து இங்கு 65–எனச் சுட்டப்பட்டது. எல்லா மனிதர்களையும் 'இறையடியார்கள்' என்ற உயர்ந்த நோக்கத்துடன் இணைத்த சேக்கிழாரை அறுபத்து நான்காம் நாயனார் என்றும் சொல்லாம்.

சேக்கிழார் 12–ஆம் நூற்றாண்டிலே, 2ஆம் குலோத்துங்க சோழ அரசனின் தலைமை அமைச்சராகத் திகழ்ந்தார். இவருடைய நேர்மை, ஊக்கம், உழைப்பு, வீரம், ஆழ்ந்தகன்ற அறிவு இவற்றைக் கண்ட மன்னன், 'உத்தம சோழ பல்லவன்' என்று பட்டம் அளித்துப் பாராட்டினான். சேக்கிழார் பிறந்த இடம், தொண்டை நாட்டு புலியூர் கோட்டத்து, குன்றத்தூர். இது சென்னைக்கு மிக அருகில் உள்ளது. இவருடைய தம்பியின் பெயர் பலறாவாயர் என்பதாகும். இருபதாம் நூற்றாண்டின் கவிச் சக்ரவர்த்தி என்று போற்றப் பெற்ற திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை (இவர் தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாத ஐயரின் ஆசிரியர்) அவர்கள் சேக்கிழாரின் மீது ஈடுபாடு கொண்டவர்கள். அதனால் 'சேக்கிழார் பிள்ளைத் தமிழ்' என்ற நூலை சுவை நனி சொட்டச் சொட்ட பாடிய கவிவலவ' என்று குறிப்பிட்டுள்ளார். பெரிய புராணத்தை எழுதத் தொடங்கும் பொழுது இறைவனே 'உலகெலாம்' என அடி எடுத்துக் கொடுக்கின்றான். யாருக்கும் தராத அடைமொழியை 'தெய்வச் சேக்கிழார்' என்று கூறி போற்றுவர் தமிழ் மக்கள். அவர் தெய்வத் தன்மை பொருந்தியவர் என்பதற்கு ஒரு சான்று. 'உலகெலாம்' என்று தொடங்கும் கடவுள் வாழ்த்துப் பாடலில் உள்ள எல்லா எழுத்துகளையும் கூட்டினால் (ஒற்று உள்பட) 63 என்று வரும். அந்தப் பாடலையே பிரித்து எழுதிக் கூட்டினால் 72–என்று வரும். இது எதைக் குறிக்கின்றது? அறுபத்து மூன்று தனியடியார்களையும், 9 தொகையடியார் களையும் சேர்த்து அல்லவோ குறிக்கின்றன. சேக்கிழார் சுவாமிகள் இதை யெல்லாம் எண்ணி யெண்ணியா பாடி இருப்பார். இவருக்கு இறையருள் நலம் இருந்ததால் இயற்கையாக இவை அமைந்தது. நாமும் பெரிய புராணத்தை நாள்தோறும் ஓதி வந்தால் இறையருள் கிட்டும் என்பது உறுதி.

பெரிய புராணத்தில் சில பகுதிகளை மட்டும் முதன்முதலாகப் பதிப்பித்தவர் மழவை மகாலிங்க ஐயர் ஆவார். இப்பதிப்பு 1843–இல் வெளி வந்தது. காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் பதிப்பு 1859–லும் பே. இராமலிங்கம் பிள்ளை பதிப்பு 1879–லும், ஆறுமுக நாவலரின் பதிப்பு 1884–லும் வெளிவந்தன. திருவண்ணாமலை ஆதீனம் ஆறுமுகத்தம்பிரான் சில பகுதிகளுக்கு மட்டும் பதவுரை எழுதி வெளியிட்டார். 1893–ல் சுப்பராய நாயகர் பதவுரை, விளக்கம் எழுதி வெளியிட்டார். இப்பேரறிஞர் பல நூல்களுக்குப் பேருரை எழுதினார். 117 ஆண்டுகளுக்குப் பின் இவ்வுரை வெளிவருகிறது. தெளிவான உரை, எல்லோரும் படித்துப் புரிந்து கொள்ளக் கூடிய எளிய நடை. இதனை மீண்டும் அச்சு வாகனம் ஏற்றி, தமிழர்தம் மன வீதிகளிலே உலா வரவிட்ட பாரிநிலைய உரிமையாளர் திரு. செ. அமர்ஜோதி அவர்களின் தொண்டு போற்றுதற்குரியதாகும்.

சில நூல்களைப் படித்தால் 'அற' உணர்வு தோன்றும். சில நூல்கள் 'பொருள்' உணர்வைத் தோற்றுவிக்கும். சில நூல்கள் இன்பக் கிளர்ச்சியை ஊட்டும். வீடு பேறு குறித்து நம்மைச் சிந்திக்கத் தூண்டுவன திருவாசகம் போன்ற ஒரு சிலவே. இப் பெரிய புராணத்தை ஓதினால் அறம், பொருள், இன்பம், வீடடைதல் உறுதி. பண்பட்ட சொற்கள், பண்பட்ட ஓசைகள், பண்படுத்தும் கருத்துகள் கொண்டது பெரிய புராணம். 'தொண்டலல்லால் துணையும் இல்லை' என்பார் அப்பரடிகள். கற்கக் கற்க நாமும் தொண்டராவோம். இறையருள் பெறுவோம்.

பணிவுடன்

சு. இலம்போதரன்

# பொருளடக்கம்

## மும்மையால் உலகாண்ட சருக்கம்



## திருநின்ற சருக்கம்

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டர்புராணம்

என்னும்

# பெரிய புராணம்.

## முதற்காண்டம்.

### பாயிரம்.

### நடேசர்துதி.

*உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்*
*நிலவு லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதிய னம்பலத் தாடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.* 1

எல்லா உலகத்தவரும் இத்தன்மையினன் என்று அறிந்து சொல்லுதற்கரியவரும், சந்திரன் உலாவுகின்ற தங்கை தங்கிய சடையினை உடைய வரும், அளவில்லாத சோதி சொரூபமான வரும், திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் செய்தருளு கின்றவருமாகிய ஸ்ரீ நடராஜ வள்ளலாரது தாமரை மலர் போன்ற சிலம் பணிந்த ஸ்ரீ பாதங்களை (யாம்) துதித்து வணங்கு கின்றோம் என்றவாறு.

இந்தச் செய்யுளில், "உலகெலாம்" என்பது ஸ்ரீ நடராஜ வள்ளல் அசரீரியாக அருளிச்செய்தது. ஏனைய பகுதி ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியது. சிவனார் முதலெடுத்துக் கொடுத்ததைச் சேக்கிழார் பூர்த்தி செய்தமை யால், இருவர்வாக்கையும் ஒரேவாக்காகத் தெளிதலே அமைவுடைத்து. ஸ்ரீ சிவபெருமான் முதற்பகுதியை அசரீரியாகத் திருவாய்மலர்ந்தருளியபடி ஏனைய பகுதியைச் சேக்கிழாரை அதிட்டித்து அச்சிவபரஞ்சுடரே கூறியருளினாரெனவறிக.

## மானிடப் பிறவியின் பயன்

*ஊன டைந்த உடம்பின் பிறவியே*
*தான டைந்த உறுதியைச் சாருமால்;*
*தேன டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்*
*மாந டஞ்செய் வரதர்பொற் றாள்தொழ.* 2

(இ - ள்.) தேன்பொருந்திய மலர்களையுடைய சோலை சூழ்ந்த திருத்தில்லைப்பதியில் ஆனந்தத் தாண்டவஞ் செய் தருளுகின்ற நடேசமூர்த்தியினது அழகிய குஞ்சிதபாதத்தைத் தொழுதலால் மாமிசம் பொருந்திய உடம்பினாலாகிய பிறப்பானது தான் உலகத்திற்பிறந்ததனா லடையவேண்டிய உறுதிப்பயனை யடையும். - எ.று.

## விநாயகர் வணக்கம்

*எடுக்கும் மாக்கதை இன்றமிழ்ச் செய்யுளாய்*
*நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திடத்*
*தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீள்முடிக்*
*கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம்.* 3

(இ-ள்.) எடுத்துச்சொல்லுகின்ற மகத்தாகிய திருத் தொண்டர்புராணமானது (இடையூறின்றி) இனிய தமிழ்ச் செய்யுள் நடையாக எம்மால் முடிவு பெறத்தக்க மேன்மையை எமக்கருள் செய்யும்படி, விசாலம்பொருந்திய ஐந்து திருக்கரங் களையும், தாழ்ந்த செவிகளையும், நீண்ட திருமுடியினை "யுமுடைய மதம் பொழிகின்ற யானை முகத்தையுடைய (கற்பகவிநாயகக்) கடவுளை எமதுள்ளத்தில் பொருந்தத் தியானிப்போம். - எ.று.

## திருக்கூட்ட வாழ்த்து

*மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்*
*துதிசெயும் நாயன்மார் தூய சொல்மலர்ப்*
*போதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை*
*விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே.* 4

(இ-ள்.) இளம்பிறை வளர்கின்ற சடைமுடியினையுடைய ஸ்ரீநடராஜமூர்த்தியைப் பூர்வத்தில் துதித்துப் பேறுபெற்ற திருத்தொண்டர்களது பரிசுத்தம் பொருந்திய சொல்லாகிய

மலர்களில் நிறைந்த பயனாகிய தேனையுண்ணுகின்ற மலரகிதர்களாகிய அடியார்களது பெரியதிருக்கூட்டமானது வேதசிவாகம விதிமுறைப்படியே உலகத்தில் பிரகாசித்து மேன்மைபெறக்கடவது. - எ - று.

## அவையடக்கம்

***அளவி லாத பெருமைய ராகிய***
***அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்***
***அளவு கூடஉ ரைப்பரி தாயினும்***
***அளவி லாசை அறைகுவேன். 5***

(இ - ள்.) யாவராலு மளவிட்டுச் சொல்லுதற்கரிய பெருமையினையுடையராகிய எண்ணிறந்த சிவனடியார்களது புகழமைந்த சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கிய யான் அதனை அளவுபடுத்திச் சொல்லுதல் எனக்கு அரிதாயிருந்தாலும், (அதனைச் சொல்லவேண்டுமென்னும்) அளவில்லாத ஆசையானது என்னைப் பிடித்து உந்துதலால் சொல்லத் தொடங்கினேன். - எ - று.

***தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்***
***பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்முற்றப்***
***பெருகு தண்கடல் ஊற்றுண் பெருநசை***
***ஒருசு ணங்கனை ஒக்கும் தகைமையேன். 6***

(இ-ள்.) வெள்ளமாகப் பெருகுகின்ற குளிர்ந்த சமுத்திர நீரை (அப்படியே யெடுத்து ஊரிலுள்ளவர்களுக்கு) ஊற்றி யுபகரிக்க வெண்ணும் பேராசையையுடைய ஒரு (சிறிய) நாயினையொத்த தகுதியுடைய யான் அறிதற்கரிய பெருமை பொருந்திய ஒப்பற்ற திருத்தொண்டர்களின் திவ்யசரித்திரத்ததைச் சொல்லத் தொடங்கினேன். - எ - று.

***செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்***
***அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால்***
***இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினும்***
***மெய்ப்பொ ருட்குரிய யார்கொள்வர் மேன்மையால். 7***

(இ - ள்.) ஒருவன் சொல்லுகின்ற பொருளின் சிறப்பை நோக்கி அப்பொருளைத் தெரிவிக்கின்ற மொழிகளைச் (சிறப்பில்லாதிருந்தாலும்) யாவரும் அங்கீகரிப்பார்கள். (அதுபோல

இத்தொண்டர்களின் சரித்திரத்தை வகுத்துச் சொல்வதற்கு என்னுடையசொற்கள் அற்பமாயிருந்தாலும், (சொல்லப்பட்ட பொருளின் மேன்மைக்கருதி) உண்மைப் பொருளை யறிதற்குரிய பெரியோர்கள் அங்கீகரித்துக் கொள்ளவார்கள். - எ - று.

***மேய இவ்வுரை கொண்டு விரும்புமாம்***
***சேய வன்திருப் பேரம்ப லம்செய்ய***
***தூய பொன்னணி சோழன்நீ டூழிபார்***
***ஆய சீர்அந பாயன் அரசவை.*** 8

(இ - ள்.) சிவந்த திருமேனியையுடைய ஸ்ரீநடராஜமூர்த்தியினது அழகிய கனகசபையைக் களங்கமற்ற செம்பொன்னினால் அலங்கரித்த திருநீற்றுச்சோழனென்னும் அபிடேகத் திருநாம முடையவனும், நீண்ட கற்பகாலம்வரையிலும் உலகத்தில் நிலைக்கப்பெற்ற கீர்த்தியையுடையவனுமாகிய அநபாயச் சக்கரவர்த்தியினது இராஜசபையிலுள்ளவர்கள் மேன்மை பொருந்திய இப்புராணத்தை அங்கீகரிப்பார்கள். - எ - று.

***அருளின் நீர்மைத் திருத்தொண் டறிவரும்***
***தெருளி நீரிது செப்புதற் காம்எனின்***
***வெருளின் மெய்ம்மொழி வான்நிழல் கூறிய***
***பொருளின் ஆகும் எனப்புகல் வாம்அன்றே.*** 9

(இ - ள்.) (சிவபெருமானது) திருவருட்டன்மையைப்பெற்ற அடியார்களது திருத்தொண்டினியல்பை (இத்தன்மையின வென்று) அறியத்தக்க உண்மையறிவில்லாத நீர் இப்புராணத்தைச் சொல்லக்கூடுமோவென்றால், மயக்கமற்ற வேதசிவாகமங்களை யருளிச்செய்த ஸ்ரீநடராஜமூர்த்தியே (யாவருமறிய) அசரீரியாக முதலடியெடுத்துக் கொடுத்தருளிய காரணத்தினால் ஆகு மென்று சொல்லுவோம். - எ - று.

## நூற்பெயர்

*இங்கிதன் நாமம் கூறின்*
*இவ்வுல கத்து முன்னாள்*
*தங்கிருள் இரண்டில் மாக்கள்*
*சிந்தையுட் சார்ந்து நின்ற*
*பொங்கிய இருளை ஏனைப்*
*புறஇருள் போக்கு கின்ற*
*செங்கதி ரவன்போல் நீங்கும்*
*திருத்தொண்டர் புராணம் என்பாம்.* 10

(இ - ள்.) இவ்விடத்து இப்புராணத்தினது திருப்பெயரைச் சொல்லப்புகுந்தால், இந்த வுலகத்தில் தொன்றுதொட்டு வருகின்ற புறவிருளும் அகவிருளுமாகிய இரண்டனுள் மனிதர்களுடைய உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் நிறைந்த அஞ்ஞானவிருளை, மற்றைப்புறத்தில் கண்ணுக்குப் புலனாகத் தோன்றும் பூதவிருளைப்போக்குகின்ற சிவந்தகிரணங்களை யுடைய சூரியனைப்போல நீக்குகின்ற திருத் தொண்டர்புராண மென்று சொல்லுவோம், - எ - று.

**பாயிரம் முற்றிற்று.**



உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 2. திருமலைச் சிறப்பு.

***பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்***
***பன்னும் நீள்பனி மால்வரைப் பாலது***
***தன்னை யார்க்கும் அறிவரிய யான்என்றும்***
***மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை. 1***

(இ - ள்.) தம்முடைய சொரூபத்தைப் (பத்தி செலுத்துகின்ற அன்பர்களன்றி) மற்றை யாவர்க்கும் அறிதற்கரியவராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பெருமைபொருந்திய திருக்கயிலாயமலையானது பொன்னின்மேல் வெண்மையாகிய திருநீற்றைத் தரித்ததுபோலப் (புலவர்களால்) புகழ்ந்து சொல்லப்பட்ட நீண்ட இமயமலையின் பக்கத்திலுள்ளது.

***அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலின்***
***நண்ணும் மூன்றுல குந்நான் மறைகளும்***
***எண்ணில் மாதவஞ் செய்யவந் தெய்திய***
***புண்ணிய யந்திரண் டுள்ளது போல்வது. 2***

(இ - ள்.) (அத்திருக்கயிலையானது) சிவபெருமான் எழுந்திருளியிருக்கப் பெற்றதாதலால், நிலைபெற்ற (சுவர்க்க மத்திய பாதல மென்னும்) மூன்றுலகத்திலுள்ளவர்களும், நான்குவேதங்களும் அளவில்லாத பெரிய தவத்தைச் செய்தலால், வந்தடைந்த புண்ணியமனைத்தும் ஒன்றாகத் திரண்டுள்ளதுபோலுந் தோற்றமுடையது. - எ - று.

***நிலவும் எண்ணில் தலங்களும் நீடொளி***
***இலகு தண்தளிர் ஆகஎ ழுந்ததோர்***
***உலகம் என்னும் ஒளிமணி வல்லிமேல்***
***மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை. 3***

(இ - ள்.) அந்தப் பெருமைபொருந்திய திருக்கயிலாயமலை யானது (தெய்வத்தன்மைபொருந்தி) விளங்குகின்ற அளவற்ற

சிவஸ்தலங்களையும் பிரகாசம் பொருந்திய குளிர்ந்த துளிராகக் கொண்டு தோன்றிய உலகமென்று சொல்லப்பட்ட அழகிய கொடியின்மேல் படர்ந்த வெள்ளிய மலர்போலப் பிரகாசிப்பது.

***மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர்***
***கான வீணையின் ஓசையும் காரெதிர்***
***தான மாக்கள் முழக்கமும் தாவில்சீர்***
***வான துந்துபி ஆர்ப்பும் மருங்கெலாம்.*** **4**

(இ - ள்.) மேன்மைபொருந்திய (இருக்கு - எசுர் - சாமம் - அதர்வணமென்னும்) நான்கு வேதங்களின் ஓசையும், வித்தியாதரர்கள் கானஞ்செய்கின்ற வீணையின் ஓசையும், மேகத்திற்கு மாறாக மதம்பொழிகின்ற யானைகள் முழங்கும் முழக்கமும், கெடாத சிறப்பினையுடைய தேவதுந்துபியின் முழக்கமும், (அத்திருக்கயிலாயமலையின்) பக்கங்களிலெல்லாம் உண்டாயிருக்கின்றன. - எ - று.

***பனிவி சும்பில் அமரர் பணிந்துசூழ்***
***அனித கோடி அணிமுடி மாலையும்***
***புனித கற்பகம் பொன்னரி மாலையும்***
***முனிவர் அஞ்சலி மாலையும் முன்னெலாம்.*** **5**

(இ - ள்.) குளிர்ச்சிபொருந்திய விண்ணுலகத்திலுள்ள தேவர்கள் வணங்கிச் சூழ்ந்துநிற்கின்ற அளவற்ற அழகிய முடிகளின் வரிசையும், பரிசுத்தம்பொருந்திய கற்பகமலர்களால் தொடுக்கப்பட்ட பொன்னரிமாலைகளும், முனிவர்களின் அஞ்சலியாகிய வரிசைகளும் ஆகிய இவைகள் (அம்மலையின்) முன்பக்கமெல்லாம் பிரகாசிக்கின்றன. - எ - று.

***நீடு தேவர் நிலைகளும் வேண்டிடின்***
***நாடு மைம்பெரும் பூதமும் நாட்டுவ***
***கோடி கோடி குறட்சிறு பூதங்கள்***
***பாடி யாடும் பரப்பது பாங்கெலாம்.*** **6**

(இ - ள்.) உயர்ந்த தேவர்களுடைய பதவிகளையும், விருப்பமுண்டானால் நினைக்கப்பட்ட ஸ்தூல பஞ்சபூதங்களையும் வேறேயுண்டாக்கத்தக்க வல்லமையுள்ளனவாகிய அநேககோடி குறள்வடிவினதாகிய சிறுபூதங்கள் பாடுவதும், ஆடுவதுமாகிய பரப்பினையுடையது (அத்திருக்கயிலாயமலையின்) பக்க இடங்களெல்லாம். - எ - று.

***நாய கன்கழல் சேவிக்க நான்முகன்***
***மேய காலம் அலாமையின் மீண்டவன்***
***தூய மால்வரைச் சோதியில் மூழ்கியொன்***
***றாய அன்னமும் காணா தயர்க்குமால். 7***

(இ - ள்.) சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசிக்கும்படி (உள்ளே சென்ற) பிரமனானவன் (அப்போது தரிசிப்பதற்கு) அகலமாயிருந்தபடியால், திரும்பி வந்து பரிசுத்தம்பொருந்திய பெரிய திருக்கயிலைமலையினது வெள்ளிய பிரகாசத்தில் கலந்து வேற்றுமை தோன்றாமலிருக்கின்ற (தனது) அன்னவாகனத்தை யுங் காணாமல் வருந்துவான். - எ - று.

இது வெள்ளிப்பாடல்

***காதில்வெண் குழையோன் கழறொடி நெடியோன்***
***காலம்பார்த் திருந்தது மறியான்***
***சோதிவெண் கயிலைத் தாழ்வரை முழையிற்***
***றுதிக்கையோ னூர்தியைக் கண்டு***
***மீதெழு பண்டைச் செஞ்சுடர் இன்று***
***வெண்சுட ரானதென் றதன்கீழ்***
***ஆதியே னமதா யிடக்கலுற் றானென்***
***றதனைவந் தணைதருங் கலுழன். 8***

(இ - ள்.) திருச்செவிகளில் வெள்ளிய சங்கக்குழையைத் தரித்த சிவபெருமானது திருவடிகளை வணங்குவதற்கு விஷ்ணு வானவர் சமயம் பார்த்துக்கொண்டிருப்பதை அறியாமல், (அவரது வாகனமாகிய) கருடன் பிரகாசம்பொருந்திய வெள்ளிய திருக்கயிலைமலையின் அடிவாரத்திலுள்ள குகையில் விநாயகமூர்த்தியின் வாகனமாகிய மூஷிகத்தைப் பார்த்து பூர்வத்தில் உயர்ந்தெழுந்த சிவந்த சோதியானது இப்பொழுது வெள்ளிய சோதியாய்த் தோன்றியதென்று அச்சோதியினடியில் ஆதிவராகரூபமாய்ப் பூமியைத் தோண்டிச் செல்கின்றானென்று அம் மூஷிகத்தை வந்துசேரும். - எ - று.

***அரம்பையர் ராடல் முழவுடன் மருங்கி***
***னருவிகள் எதிரெதிர் முழங்க***
***வரம்பெறுங் காதன் மனத்துடன் றெய்வ***
***மதுமலர் இருகையும் ஏந்தி***

**நிரந்தர மிடைந்த விமானசோ பான**
**நீடுயர் வழியினால் ஏறிப்**
**புரந்தரன் முதலாம் கடவுளர் போற்றப்**
**பொலிவதத் திருமலைப் புறம்பு. 9**

(இ - ள்.) தேவரம்பையர்கள் நிருத்தஞ்செய்யுங்காலத்து முழங்குகின்ற மத்தளவோசையுடன் (அத்திருமலையின்) பக்கங்களிலுள்ள அருவிகளி னோசை எதிரெதிராக முழங்கவும், (சிவபெருமானிடத்துத் தாங்கள் விரும்பிய) வரத்தை பெறவேண்டுமென்னும் ஆசைபொருந்தியமனத்தோடு தெய்வத்தன்மைபொருந்திய தேனையுடைய கற்பகமலர்களை இரண்டு கைகளிலும் ஏந்திக் கொண்டு சதாகாலமும் (சனங்கள்) நெருங்கிய கோபுரவிமானங்களின் கீழுள்ள படிகளின் சிறந்த வழியாக ஏறிச்சென்று இந்திரன்முதலாகிய தேவர்கள் துதிக்கும்படி அத்திருக்கயிலாயமலையானது விளங்கும் - எ - று.

**வேதநான் முகன்மால் புரந்தரன் முதலாம்**
**விண்ணவ ரெண்ணிலார் மற்றுங்**
**காதலான் மிடைந்த முதற்பெருந் தடையாங்**
**கதிர்மணிக் கோபுரத் துள்ளார்**
**பூதவே தாளப் பெருங்கண நாதர்**
**போற்றிடப் பொதுவினின் றாடு**
**நாதனா ராதி தேவனார் கோயில்**
**நாயக னந்தியெம் பெருமான். 10**

(இ - ள்.) வேதங்களையுணர்ந்த பிரமன், விஷ்ணு, இந்திரன்முதலிய தேவர்களும், மற்றைய தேவர்களும் தரிசிக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால், நெருங்கியுள்ள பெரிய முதல் தடையாகப் பொருந்திய ஒளிவிளங்கும் அழகிய திருக்கோபுரவாயிலின் கணுள்ளவர். (அவர் யாரென்றால்) பெரிய பூதவேதாளமென்னுஞ் சிவகணத்தலைவர்கள் தோத்திரஞ்செய்ய திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுகின்ற தலைவரும், முதற்பெருங்கடவுளுமாகிய சிவபெருமானது திருக்கோயிலைக் காக்குந் தலைமைபூண்ட எம்பெருமானாகிய திருநந்திதேவர். - எ - று.

**நெற்றியிற் கண்ணர் நாற்பெருந் தோளர்**
**நீறணி மேனிய ரனேகர்**
**பெற்றமேற் கொண்ட தம்பிரா னடியார்**
**பிஞ்ஞகன் தன்னருள் பெறுவார்**
**மற்றவர்க் கெல்லாந் தலைமையாம் பணியு**
**மலர்க்கையிற் சுரிகையும் பிரம்புங்**
**கற்றைவார் சடையா னருளினாற் பெற்றான்**
**காப்பதக் கயிலைமால் வரைதான். 11**

(இ - ள்.) நெற்றியிற் கண்களையும், நான்கு பெரிய திருந் தோள்களையும், திருநீறுதரித்த திருமேனியையுமுடையவர் களாகிய அளவற்ற சிவசாரூப்பியம் பெற்றவர்களும், ரிஷப வாகனத்தின் மீது எழுந்தருளிய சிவபெருமானுக்கடியவர்களும், இன்னும் அக்கடவுளின் திருவருளைப் பெறுதற்குக் காத்திருப் பவர்களுமாகிய அனைவர்க்கும் முதன்மையாயிருக்கின்ற பணிவிடையும், தாமரைமலர்போன்ற திருக்கரத்தில் உடைய வாளும், பிரம்பும், கூட்டமாகிய நீண்ட சடைமுடியினையுடைய சிவபெருமானது திருவருளினாற்பெற்றவராகிய திருநந்திதேவ ரால் காக்கப்படுவது அந்தப் பெருமைபொருந்திய திருக்கயிலாய மலை. - எ - று.

**கையின்மான் மழுவர் கங்கைசூழ் சடையிற்**
**கதிரிளம் பிறைநறுங் கண்ணி**
**யையர்வீற் றிருக்குந் தன்மையி னாலும்**
**அளப்பரும் பெருமையி னாலும்**
**மெய்யொளி தழைக்குந் தூய்மையி னாலும்**
**வென்றிவெண் குடையந பாயன்**
**செய்யகோ லபயன் றிருமனத் தோங்குந்**
**திருக்கயி லாயநீள் சிலம்பு. 12**

(இ - ள்.) திருக்கரத்தில் மான்மழுவைத் தரித்தவரும், கங்காநதிபொருந்திய சடையில் ஒளிவிளங்கும் இளம்பிறையை யும், நல்லவாசனை வீசுகின்ற கொன்றை மலர்மாலையையும் தரித்தவருமாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் தன்மை யினாலும், அளவில்லாத பெருமையினாலும், உண்மை பொருந்திய வெண்மையாகிய ஒளிவீசுகின்ற பரிசுத்தத்தினா லும், நீண்ட அத்திருக்கயிலாயமலையானது வெண் கொற்றக்

குடையினையுடைய செங்கோல் செலுத்தும் அநபாயச் சோழமகாராஜாவினது திருவுள்ளத்தைப்போல விளங்கிக் கொண்டிருக்கும். - எ - று.

*அன்ன தன்திருத் தாழ்வரை யின்இடத்(து)*
*இன்ன தன்மையன் என்றறி யாச்சிவன்*
*தன்னை யேஉணர்ந் தார்வம் தழைக்கின்றான்*
*உன்ன ருஞ்சீர் உபமன் னியமுனி.* **13**

(இ - ள்.) நினைப்பதற்கரிய தவச்சிறப்பினையுடைய உபமன்னியமுனிவரானவர் அப்படிப்பட்ட பெருமை பொருந்திய திருக்கயிலாயமலையின் அடிவாரத்தில் (யாவராலும்) இப்படிப்பட்ட தன்மையினரென்று அறியக் கூடாத சிவபெருமானையே தியானித்து (அதனால்) அன்பு தழையப்பெற்றிருக்கின்றார். - எ - று.

*யாத வன்துவ ரைக்கிறை யாகிய*
*மாத வன்முடி மேலடி வைத்தவன்*
*பூத நாதன் பொருவருந் தொண்டினுக்(கு)*
*ஆதி அந்தம் இலாமை அடைந்தவன்.* **14**

(இ - ள்.) யதுகுலத்திற் பிறந்தவரும், துவாரகாபுரிக்கு அரசருமாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினது முடியின்மேல் தம்முடைய திருவடியை வைத்தவர்; சிவகணங்களுக்குத் தலைவராகிய சிவபெருமானுக்குச் செய்யவேண்டிய ஒப்பற்ற திருத்தொண்டினுக்காக முதல்வராயுள்ளவர்; ஓர்காலத்தும் அழியாத நிலைமையைப் பெற்றுள்ளவர். - எ - று.

*அத்தர் தந்த அருட்பால் கடலுண்டு*
*சித்தம் ஆர்ந்து தெவிட்டி வளர்ந்தவன்*
*பத்த ராய முனிவர்பல் லாயிரர்*
*சுத்த யோகிகள் சூழ இருந்துழி.* **15**

(இ - ள்.) சிவபெருமான் கிருபையோடு தந்தருளிய திருப்பாற் கடலைத் தமது பசிப்பிணிநீங்க மனமகிழ்ந்து தெவிட்டும்படி உண்டு வளர்ந்தவர். இப்படிப்பட்ட தன்மையுடைய அவ் வுபமன்னியமுனிவர் தமக்கு அடியவர்களாகிய அநேகமாயிர முனிவர்களும், பரிசுத்தம்பொருந்திய சிவயோகிகளும் தம்மைச் சூழும்படியாக இருந்த சமையத்தில். - எ - று.

***அங்கண் ஓரொளி ஆயிர ஞாயிறு***
***பொங்கு பேரொளி போன்றுமுன் தோன்றிடத்***
***துங்க மாவர் சூழ்ந்திருந் தாரெலாம்***
***"இங்கி தென்கொல் அதிசயம்" என்றலும். 16***

(இ - ள்.) அவ்விடத்தில் ஒருபிரகாசமானது ஆயிரஞ் சூரியர்களுடைய மிகுந்த பிரகாசம்போல அவர்க்கெதிரே தோற்ற, (அப்பொழுது தம்மைச்) சூழ்ந்திருந்த உயர்ந்த தவத்தினையுடைய முனிவர்களும், சிவயோகிகளுமாகிய யாவரும் உபமன்னியமுனிவரைப் பார்த்து இவ்விடத்தில் தோன்றுகின்ற பிரகாசமானது என்ன ஆச்சரியமுடையதா யிருக்கின்றதென்று கேட்கவும். - எ - று.

***அந்தி வான்மதி சூடிய அண்ணல்நாள்***
***சிந்தி யாஉணர்ந் தம்முனி "தென்திசை***
***வந்த நாவலர் கோன்புகழ் வன்றொண்டன்***
***எந்தை யார்அரு ளால்அணை வான்" என. 17***

(இ - ள்.) (அந்தவார்த்தையைக் கேட்ட உபமன்னியமகா முனிவரானவர்) மாலைக்காலத்தில் ஆகாயத்திற் றோன்றுகின்ற இளஞ்சந்திரனைத் தரித்த சடை முடியினையுடைய சிவபெருமா னது திருவடிகளைத் தியானித்தறிந்து, தென்றிசையிலே திருவவதாரஞ்செய்தருளிய திருநாவலூரரென்னுங் கீர்த்தியை யுடைய வன்றொண்டப் பெருமான் எமது பரமபிதாவாகிய சிவபெருமானது திருவருளினாலே மீண்டு இத்திருக்கயிலைக்கு எழுந்தருளுகின்றாரென்று சொல்லி - எ - று.

***கைகள் கூப்பித் தொழுதெழுந் தத்திசை***
***மெய்யில் ஆனந்த வாரி விரவிடச்***
***செய்ய நீள்சடை மாமுனி செல்வுழி***
***ஐயம் நீங்க வினவுவோர் அந்தணர். 18***

(இ - ள்.) அந்தத்திசையை நோக்கி இரண்டு திருக்கரங் களையுங் குவித்துப் (பூமியில் விழுந்து) வணங்கி எழுந்துநின்று, தம்முடைய திருமேனியில் ஆனந்தக்கண்ணீர் பெருகும்படி, செந்நிறம்பொருந்திய நீண்ட சடையினையுடைய உபமன்னிய மகா முனிவர் போகும்பொழுது, மற்றைய முனிவர்கள் யாவரும் தங்களுக்குண்டாகிய சந்தேகம் நீங்கும்படியாக (அம்முனிவரை) வினவுவார்கள். - எ - று.

***"சம்பு வின்அடித் தாமரைப் போதலால்***
***எம்பி ரான்இறைஞ் சாயிஃதென்" எனத்***
***"தம்பி ரானைத்தன் உள்ளம் தழீஇயவன்***
***நம்பி ஆரூரன் நாம்தொழும் தன்மையான்"* 19**

(இ - ள்.) எம்பெருமானாகிய முனிவரே! (நீர்) பரமேஸ்வரனுடைய திருவடித்தாமரையை யல்லாமல் வேறொரு கடவுளரையும் வணங்கமாட்டீர். அப்படியிருக்க, இப்போது இச்சோதியைக் கண்டு வணங்கிய காரணம் என்னவென்று கேட்க, (அதற்கு உபமன்னியர்) சொல்லுவார். ஆத்மநாயகராகிய சிவபெருமானைத் தம்முள்ளத்திலே பொருந்தச் செய்தவராகிய நம்பியாரூரரென்னுந் திருநாமத்தையுடையவர், நாம் அனைவரும் வணங்கத்தக்க தகுதியையுடையவர். - எ - று

***என்று கூற இறைஞ்சி இயம்புவார்***
***"வென்ற பேரொளி யார்செய் விழுத்தவம்***
***நன்று கேட்க விரும்பும் நசையினோம்***
***இன்றெ மக்குரை செய்தருள்" என்றலும்.* 20**

(இ - ள்.) (ஆதலால் முனிவர்களே! நாம் வணங்கியதற்குக் காரணம் இதுவாகும்) என்று சொல்ல் அதைக்கேட்ட முனிவர்கள் (அவரை) நமஸ்கரித்துச் சொல்லுவார்கள். எல்லா வொளிகளுக்கும் மேற்பட்ட பேரொளியினராகிய அந்நம்பியாரூரர்செய்த பெருந்தவத்தினை நன்றாகக் கேட்கவேண்டுமென்னும் ஆசையுடையவர்களா யிருக்கின்றோம். (ஆதலால்) அதனை இப்பொழுது எங்களுக்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொள்ளவும். - எ - று.

***உள்ள வண்ணம் முனிவன் உரைசெய்வான்***
***"வெள்ள நீர்ச்சடை மெய்ப்பொரு ளாகிய***
***வள்ளல் சாத்தும் மதுமலர் மாலையும்***
***அள்ளும் நீறும் எடுத்தணை வானுளன்.* 21**

(இ - ள்.) உபமன்னியமகாமுனிவர் (அம்முனிவர்களுக்கு) உள்ளபடியே சொல்லுகின்றார். வெள்ளமாகப்பொருந்திய கங்கைநீரைத் தரித்த சடைமுடியினையுடைய உண்மைப் பொருளாகிய சிபெருமான் அணிந்துகொள்ளுகின்ற தேன் பொருந்திய மலர்மாலையினையும், (தரித்துக் கொள்வதற்குத் திருவிரல்களால்) அள்ளுகின்ற திருவெண்ணீற்றினையும் எடுத்துக்கொண்டு சமீபத்திலிருப்பவர் ஒருவரிருந்தார். - எ - று.

*அன்ன வன்பெயர் ஆலால சுந்தரன்*
*முன்னம் ஆங்கொரு நாள்முதல் வன்தனக்(கு)*
*இன்ன ஆமெனும் நாண்மலர் கொய்திடத்*
*துன்னி னான்நந் தனவனச் சூழலில்* **22**

(இ - ள.) அப்படிப்பட்ட தன்மையினையுடையவரது திருநாமமோ வென்றால் ஆலாலசுந்தரர் (என்று சொல்லுவர்.) அவர் முற்காலத்தில் அத்திருக்கயிலாய மலையில் ஒருநாள் சிபெருமானுக்கு இன்ன இன்ன மலர்கள் தகுந்தனவென்று சிவாகமங்களிற் சொல்லுகின்ற புதிய மலர்களைப் பறிக்கும்படியாகத் திருநந்தன வனத்திற்குச் சமீபத்தில் வந்தார், - எ - று.

*அங்கு முன்னரே ஆளுடை நாயகி*
*கொங்கு சேர்குழற் காமலர் கொய்திடத்*
*திங்கள் வாள்முகச் சேடியர் எய்தினார்*
*பொங்கு கின்ற கவினுடைப் பூவைமார்.* **23**

(இ - ள்.) அத்திருநந்தனவனத்திற்குச் சமீபத்தில், (ஆலாலசுந்தரருக்கு) முன்னமே (நம்மை) அடிமையாகவுடைய உமதேவியாரது இயற்கையாகவே மணம் வீசுகின்ற கூந்தலுக்குத் தகுந்த மலர்களைப் பறிக்கும்படி மிகுந்த அழகினையுடைய நாகணவாய்ப்பறவையையொத்த வார்த்தையினையும், பூரணச் சந்திரனையொத்த ஒளிபொருந்திய முகத்தினையுமுடைய தோழிப்பெண்கள் வந்திருந்தார்கள். - எ - று.

*அந்த மில்சீர் அனிந்திதை ஆய்குழல்*
*கந்த மாலைக் கமலினி என்பவர்*
*கொந்து கொண்ட திருமலர் கொய்வுழி*
*வந்து வானவர் ஈசர் அருளென.* **24**

(இ - ள்.) முடிவில்லாத அழகினையுடைய அனிந்திதை என்றும், வகிர்ந்துசிக்கெடுக்கப்பட்ட கூந்தலில் வாசனை வீசுகின்ற மலர்மாலையைத் தரித்த கமலினி என்றும் சொல்லப் பட்ட இருவரும், கொத்துக்களாயுள்ள சிறந்த மலர்களைக் கொய்துகொண்டிருக்கும் பொழுது (ஆலாலசுந்தரர்) வந்து (அப்பெண்களைப் பார்த்து) தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானுடைய திருவருள் (இவ்வாறிருந்தது) என்று நினைத்து. - எ - று.

**மாத வம்செய்த தென்திசை வாழ்ந்திடத்**
**தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்**
**போது வார்அவர் மேல்மனம் போக்கிடக்**
**காதல் மாதருங் காட்சியில் கண்ணினார். 25**

(இ - ள்.) மகத்தாகிய தவத்தைச்செய்த தென்திசையானது (அத்தவப்பேற்றால்) சிவாநந்தப் பெருவாழ்வடையவும், குற்றமற்ற (சிவனடியார்களைத் தெரிவிக்கின்ற) திருத்தொண்டத் தொகை என்னுந் திருப்பதிகத்தை அருளிச்செய்யவும் போகின்றவராகிய ஆலாலசுந்தரர், அப்பெண்களின்மேல் மனதைச் செலுத்த, அவ்வாலாலசுந்தரர்மேல் ஆசைகொண்ட அப்பெண்களும் தமது கண்களினால் அவரைப் பொருந்தப் பார்த்தார்கள். - எ-று.

**முன்னம் ஆங்கவன் மொய்ம்முகை நாண்மலர்**
**என்னை ஆட்கொண்ட ஈசனுக் கேய்வன**
**பன்ம லர்கொய்து செல்லப் பனிமலர்**
**அன்னம் அன்னவ ருங்கொண் டகன்றபின். 26**

(இ - ள்.) முதலில் அந்த ஆலாலசுந்தரர் நெருங்கிய அரும்புளோடுகூடிய புதியமலர்களில் என்னை அடிமையாகக் கொண்ட சிவபெருமானுக்குப் பொருந்துவனவாகிய (சிறந்த) பலமலர்களைப் பறித்துக் கொண்டுபோக அன்னம்போலும் நடையினையுடைய அப்பெண்களிருவரும் குளிர்ச்சிபொருந்திய மலர்களைப் பறித்தெடுத்துக்கொண்டு போனபின்பு. - எ - று.

**ஆதி மூர்த்தி அவன்திறம் நோக்கியே**
**'மாதர் மேல்மனம் வைத்தனை தென்புவி**
**மீது தோன்றிஅம் மெல்லிய லாருடன்**
**காதல் இன்பம் கலந்தணை வாய்' என. 27**

(இ - ள்.) (எல்லாக்கடவுளருக்கும்) முதற்கடவுளாயுள்ள சிவபெருமான் (அப்பெண்களின்மேல் தமது சிந்தையைச் செலுத்திவருகின்ற) அவ்வாலாலசுந்தரரது எண்ணத்தை யறிந்து (நீ மலர்கொய்யும்படிவந்த அனிந்திதை - கமலினி என்னும்) பெண்களின்மேல் இச்சைகொண்டனை. (ஆதலால் பரத கண்டத்தின்) தென்திசையிலே பிறந்து அந்தப்பெண்களுடன் காமஇன்பத்தைக் கூடி அனுபவித்து மீண்டு இங்குவரக்கடவாயாக வென்று கட்டளையிட்டருள. - எ - று.

**கைகள் அஞ்சலி கூப்பிக் கலங்கினான்**
**'செய்ய சேவடி நீங்குஞ் சிறுமையேன்**
**மையல் மானுட மாய்மயங் கும்வழி**
**ஐய னே! தடுத் தாண்டருள் செய்'என. 28**

(இ - ள்.) (அப்பொழுது ஆலாலசுந்தரர் தம்முடைய இரண்டு) திருக்கரங்களையும் சிரசின்மேல் அஞ்சலியாகக் குவித்து வணங்கி மனங்கலங்கினவராய், எம்பெருமானே! தேவரீரது மேன்மைபொருந்திய சிவந்த தாமரைமலர்போலுந் திருவடிகளினின்றும் நீங்குகின்ற அற்பனாகிய அடியேன் மாயாசம்பந்தமாகிய மானிடஜனனமெடுத்து, செய்ய வேண்டியது இன்னதென்றும், நீக்கவேண்டியது இன்னதென்று மறியாமல் மயங்கும்பொழுது என்னைத் தடுத்தாட்கொண் டருளவேண்டும் என்று வேண்டிக்கொள்ள - எ - று.

**அங்க ணாளன் அதற்கருள் செய்தபின்**
**நங்கை மாருடன் நம்பிமற் றத்திசை**
**தங்கு தோற்றத்தில் இன்புற்றுச் சாருமென்(று)**
**அங்க வன்செயல் எல்லாம் அறைந்தனன். 29**

(இ - ள்.) அழகிய கிருபாநோக்கத்தையுடையவராகிய சிவபெருமான் அவர் வேண்டிக்கொண்டதற்குத் திருவருள் செய்த பின்பு, அனிந்திதை - கமலினி என்னும் இரண்டு பெண்களோடும் அவ்வாலாலசுந்தரர் அத்தென்திசையில் திருவவதாரஞ்செய்த மானிடப்பிறப்பில் அவர்களோடு இன்பமனுபவித்து இங்கு எழுந்தருளிவருகின்றாரென்று அவருடைய செயல்களையெல்லாம் அருளிச்செய்தார். - எ - று.

**அந்த ணாளரும் ஆங்கது கேட்டவர்**
**"பந்த மானிடப் பாற்படு தென்திசை**
**இந்த வான்திசை எட்டினும் மேற்பட**
**வந்த புண்ணியம் யாதெ"ன மாதவன். 30**

(இ - ள்.) (இவ்விதமாக உபமன்னியமுனிவர் அருளிச் செய்ததை) முனிவர்கள் கேட்டு, அவ்வாலாசுந்தரர் மாயா பந்தத்தையுடைய மானிடப்பிறப்பில் திருவவதாரஞ்செய் தருளிய தென்திசையானது இந்தப் பெருமைபொருந்திய எட்டுத்திசைகளைப் பார்க்கிலும் மேற்படும்படியாக வுண்டான புண்ணியம்யாது? என்று கேட்க, (அதற்கு) உபமன்னியமுனிவர் சொல்லுகின்றார். - எ - று.

*"பொருவ ருந்தவத் தான்புலிக் காலனாம்*
*அருமு னிஎந்தை அர்ச்சித்தும் உள்ளது*
*பெருமை சேர்பெரும் பற்றப் புலியூர்என்(று)*
*ஒருமை யாளர்வைப் பாம்பதி ஓங்குமால்.* 31

(இ - ள்.) ஒப்பற்ற ( பெரிய) தலத்தினையிடைய வியாக்கிர பாத ரென்னும் எமது பிதாவாகிய அரியமுனிவரால் பூசிக்கப் பட்டது. (அக்காரணத்தினால்) பெருமைபொருந்திய பெரும் பற்றப்புலியூரென்று சொல்லப்பட்ட ஜீவன்முத்தர்களுக் கிருப்பிடமாகிய ஒரு திவ்வியக்ஷேத்திரமானது அத்தென் திசையில் விளங்கிக்கொண்டிருக்கும். - எ - று.

*அத்தி ருப்பதி யில்நமை ஆளுடை*
*மெய்த்த வக்கொடி காண விருப்புடன்*
*அத்தன் நீடிய அம்பலத் தாடும்மற்*
*றித்தி றம்பெற லாம்திசை எத்திசை.* 32

(இ - ள்.) அப்படிப்பட்ட பெரும்பற்றப்புலியூரென்னுந் திருப்பதியில், நம்மை அடிமையாகவுடைய மெய்ம்மை பொருந்திய தவக்கொடியாகிய சிவகாமியம்மையார் காணும்படியாக விருப்பத்தோடும் அழிவில்லாதவராகிய சிவபெருமான் நீண்ட பொன்னம்பலத்திலே திருநடனஞ் செய்தருளுவர். ஆதலால், இப்படிப்பட்ட, மேன்மையைப் பெறும்படியான திசை (அந்தத் தென்றிசையேயன்றி) வேறே எந்தத்திசையாகும். - எ - று.

*பூதம் யாவையின் உள்ளலர் போதென*
*வேத மூலம் வெளிப்படு மேதினிக்*
*காதல் மங்கை இதய கமலமாம்*
*மாதொர் பாகனார் ஆரூர் மலர்ந்ததால்.* 33

(இ - ள்.) பார்வதிதேவியை ஒப்பற்ற வாமபாகத்திலே யுடையவரும், வேதங்களுக்கு மூலகாரணருமாகிய சிவ பெருமான் வெளிப்படுதற்கிடமாகியும், விருப்பத்தைத் தருகின்ற பூமிதேவியின் இதயகமலமாகியும் உள்ள திருவாரூர் என்னும் திவ்வியக்ஷேத்திரமானது. அக்கடவுள் எழுந்தருளியிருக்கின்ற எல்லாச்சீவராசிகளுள்ளும் மலர்ந்த இதயகமலம்போல அத்தென்திசையில்விளங்குகின்றது.

***எம்பி ராட்டிஇவ் வேழுல கீன்றவள்***
***தம்பி ரானைத் தனித்தவத் தால்எய்திக்***
***கம்பை யாற்றில் வழிபடு காஞ்சிஎன்(று)***
***உம்பர் போற்றும் பதியும் உடையது.*** ***34***

(இ - ள்.) இந்த ஏழுலகங்களையும் பெற்றருளிய எமது மாதாவாகிய காமாட்சியம்மையார், தமது பிராணநாயகராகிய சிவபெருமானை ஒப்பற்ற தவப்பேற்றினால் அடைந்து, கம்பாநதியின் கரையில் பூசித்த காஞ்சீபுரமென்று தேவர்கள் வணங்குகின்ற திவ்வியக்ஷேத்திரத்தையும் (அத்தென்திசை யானது) தன்னிடத்தில் உடைத்தாயிருக்கின்றது. - எ - று.

***நங்கள் நாதனாம் நந்தி தவஞ்செய்து***
***பொங்கு நீடருள் எய்திய பொற்பது***
***கங்கை வேணி மலரக் கனல்மலர்***
***செங்கை யாளர் ஐயாறும் திகழ்வது.*** ***35***

(இ - ள்.) நமக்கெல்லாந் தலைவராகிய திருநந்திதேவர் தவத்தைச்செய்து உயர்ந்த பேரருளைப்பெற்ற சிறப்பினை யுடையது; கங்காநதியானது சடையின் விளங்க, அக்கினிமய மாகிய மழுவானது விளங்குகின்ற திருக்கரத்தினையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருவயைாறென்னும் திவ்வியக்ஷேத்திரமும் (அத்தென்திசையில்) விளங்கியுள்ள.எ -று.

***தேசம் எல்லாம் விளக்கிய தென்திசை***
***ஈசர் தோணி புரத்துடன் எங்கணும்***
***பூச னைக்குப் பொருந்தும் இடம்பல***
***பேசில் அத்திசை ஒவ்வா பிறதிசை"*** ***36***

(இ - ள்.) எல்லாத்தேசங்களையும் தனது மகிமையினாலே விளங்கப்பண்ணின தென்திசையில், சிவபெருமானது திருத் தோணிபுரத்துடன் அடியவர்செய்யும் பூசையின்பொருட்டு அக்கடவுள் எழுந்தருளியிருக்கும் திவ்வியக்ஷேத்திரங்கள் எவ்விடத்திலும் பலவுள்ளன; (ஆதலால்) ஆராய்ந்து சொல்லு மிடத்து மற்றைத் திசைகள் அத்தென்திசைக்கு ஒப்பாகமாட்டா.- எ - று.

***என்று மாமுனி வன்றொண்டர் செய்கையை***
***அன்று சொன்ன படியால் அடியவர்***
***தொன்று சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி***
***இன்றென் ஆதர வால்இங் கியம்புகேன். 37***

(இ - ள்.) என்று இவ்விதமாக உபமன்னியமகாமுனிவர் சுந்தரமூர்த்திசுவாமிகளின் திவ்யசரித்திரத்தை அக்காலத்தில் (முனிவர்களுக்கு) அருளிச்செய்த காரணத்தினால், அடியவர்களது நிலைபெற்ற சரித்திரமென்னுந் திருத்தொண்டத் தொகையினது விரியை இப்போது எனக்குண்டாகிய ஆசையினால் சொல்லத் தொடங்கினேன். - எ - று.

***மற்றி தற்குப் பதிகம்வன் றொண்டர்தாம்***
***புற்றி டத்தெம் புராணர் அருளினால்***
***சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகைஎனப்***
***பெற்ற நற்பதி கம்தொழப் பெற்றதாம். 38***

(இ - ள்.) (அடியேன் சொல்லத்தொடங்கிய) இத்திருத் தொண்டர்புராணத்திற்குப் பதிகமானது, சுந்தரமூர்த்தி சுவாமிகள் (திருவாரூரில்) புற்றிடங்கொண்டெழுந்தருளிய புராதனராகிய சிவபெருமானுடைய திருவருளினால் அருளிச் செய்த உண்மைபொருந்திய திருத்தொண்டத்தொகை என்று திருப்பெயர் பெற்ற நல்ல திருப்பதிகமாம். அது எம்மால் வணங்கப் பெற்றதாயுள்ளது. - எ - று.

***அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை***
***நந்தம் நாதனாம் நம்பியாண் டார்நம்பி***
***புந்தி ஆரப் புகன்ற வகையினால்***
***வந்த வாறு வழாமல் இயம்புவாம். 39***

(இ - ள்.) அந்த உண்மைபொருந்திய திருத்தொண்டத் தொகை என்னுந் திருப்பதிகத்தில் (தொகுத்துச் சொல்லப்பட்ட) அடியார்களை நமது பரமாசாரியராகிய நம்பியாண்டார்நம்பி யென்னும் பெரியோர் நமது புத்திக்கு அத்திருப்பதிகத்தின் பொருள் பொருந்தும்படி (பொல்லாப்பிள்ளையாரது திருவருளால்) அருளிச்செய்த (திருவந்தாதியின்) வகையைக் கொண்டு அவ்வடியவர்களின் வரலாறனைத்தையும் வழுவாமல் விரித்துச் சொல்லுவோம். - எ. று.

***உலகம் உய்யவும் சைவம்நின் றோங்கவும்***
***அலகில் சீர்நம்பி ஆரூரர் பாடிய***
***நிலவு தொண்டர்தம் கூட்டம் நிறைந்துறை***
***குலவு தண்புனல் நாட்டணி கூறுவாம். 40***

(இ - ள்.) உலகத்திலுள்ள மானிடர்கள் (மாயாபந்தத்தினின்று நீங்கிக்) கடைத்தேறவும், சைவசமயமானது உலகத்தில் நிலைபெற்றோங்கவும் அளவில்லாத பெருஞ்சிறப்பினையுடைய சுந்தரமூர்த்திசுவாமிகளால் துதிக்கப்பெற்ற அடியார்களின் திருக்கூட்டமானது நிறைந்து வாசஞ்செய்யாநின்ற விளங்குகின்ற குளிர்ச்சிபொருந்திய சோழநாட்டினது சிறப்பைக் குறித்துச் சொல்லுவோம்.

**திருமலைச்சிறப்பு முற்றிற்று.**



# ௩. திருநாட்டுச் சிறப்பு

***பாட்டியல் தமிழுரை பயின்ற எல்லையுள்***
***கோட்டுயர் பனிவரைக் குன்றின் உச்சியில்***
***சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி***
***நாட்டியல் பதனையான் நவிலல் உற்றனன். 1***

(இ - ள்.) பெருமைபொருந்திய இயற்றமிழ் மொழியானது வழங்குகின்ற எல்லையின்கண்ணுள்ளதும், சிகரங்களால் உயர்ந்த இமயமலையி னுச்சியில் நீண்ட புலிக்கொடியைக் கொண்டுபோய் நாட்டிய சோழராஜாக்களுக்குரியதுமாகிய காவிரிநதிசூழ்ந்த சோழநாட்டின் வளப்பத்தை யான் இங்குச் சொல்லத்தொடங்கினேன். - எ - று.

***ஆதிமா தவமுனி அகத்தி யன்தரு***
***பூதநீர்க் கமண்டலம் பொழிந்த காவிரி***
***மாதர்மண் மடந்தைபொன் மார்பில் தாழ்ந்ததோர்***
***ஓதநீர் நித்திலத் தாமம் ஒக்குமால். 2***

(இ - ள்.) முதன்மைபொருந்திய மகத்தாகிய தவத்தினை யுடைய அகத்திய முனிவரால் கொண்டுவரப்பட்ட பரிசுத்தம் பொருந்திய நீரையிடைய கமண்டலத்தினின்றும் சொரிந்த காவிரிநதியானது, அழகிய பூமிதேவியினுடைய பொன்னிறம் பொருந்திய திருமார்பில் தாழ்ந்துவிளங்குகின்ற குளிர்ந்தநீரில் தோன்றிய முத்துமாலையை யொத்திருக்கும். - எ - று.

***சையமால் வரைபயில் தலைமை சான்றது***
***செய்யபூ மகட்குநற் செவிலி போன்றது***
***வையகம் பல்லுயிர் வளர்ந்து நாடொறும்***
***உய்யவே சுரந்தளித் தூட்டு நீரது. 3***

(இ - ள்.) (அக்காவிரிநதியானது) பெருமைபொருந்திய சையமலையில்தேன்றிய தலைமைபொருந்தியது. செவ்விய பூமியென்னும் மகளுக்கு நல்ல செவிலித்தாயை யொத்துள்ளது. உலகத்திலுள்ள சகல சீவராசிகளையும் நாள்தோறும் வளர்த்து, அச்சீவராசிகள் பிழைக்கும்படியாக நீரைச் சுரந்தளித்து உண்பிக்கின்ற குணத்தையுடையது. - எ - று.

*மாலின்உந் திச்சுழி மலர்தன் மேல்வருஞ்*
*சால்பினால் பல்லுயிர் தருதன் மாண்பினால்*
*கோலநற் குண்டிகை தாங்குங் கொள்கையால்*
*போலும்நான் முகனையும் பொன்னி மாநதி.* 4

(இ - ள்.) பெரிய நீர்ச்சுழிகளையும், மலர்களையும், தன்மேல் தாங்கிவருகின்ற பெருமையினாலும், சகல சீவராசிகளையும் வளர்க்கின்ற குணத்தினாலும், அழகிய கமண்டலமானது தன்னைத் தாங்குகின்ற தன்மையினாலும், (சிலேடைவகையால்) மகாவிஷ்ணுவினது நாபிக்கமலத்தில் தோன்றிய பெருமையினாலும், சகல சீ வராசிகளையும் சிருட்டிக்கின்ற குணத்தினாலும், அழகிய கமண்டலத்தைத் தாங்குகின்ற தன்மையினாலும், காவிரிநதியானது பிரமதேவனையும் ஒத்திருக்கும்.

*திங்கள்சூ டியமுடிச் சிகரத் துச்சியில்*
*பொங்குவெண் தலைநுரை பொருது போதலால்*
*எங்கள்நா யகன்முடி மிசைநின் றேயந்திழி*
*கங்கையாம் பொன்னியாம் கன்னி நீத்தமே.* 5

(இ - ள்.) அழிவில்லாத காவிரிநதியின் பிரவாகமானது, சந்திரன் தவழுகின்ற சையமலையின் கொடுமுடியினது உச்சியில் வெள்ளிய தலைபோலும் நுரைகளை மோதிக்கொண்டு போவதனாலும் (சிலேடைவகையால்) இளம்பிறையைத் தரித்த சிவபெருமானது திருமுடியினது உச்சியினின்றும் பொலிவினையுடைய நகுவெண்டலையில் நுரைகளை வீசிக்கொண்டு போவதினாலும், நமது தலைவராகிய சிபெருமானது திருமுடியினின்றும் (பகீரதசக்கரவர்த்தியின்பொருட்டு) உலகத்தில் வந்திரங்கிய கங்காநதிக்குச் சமானமாகும். - எ - று.

*வண்ணநீள் வரைதர வந்த மேன்மையால்*
*எண்ணில்பேர் அறங்களும் வளர்க்கும் ஈகையால்*
*அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி*
*உண்ணெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது.* 6

(இ - ள்.) (அக்காவிரிநதியானது) அழகிய நீண்ட சையமலை உதிப்பிக்கவந்த மேன்மையினாலும், அளவில்லாத பெரிய தருமங்களை விருத்திசெய்கின்ற ஈகையினாலும், (சிலேடைவகையால்) அழகிய நீண்ட பர்வதராஜன் புத்திரியாகப் பெறவந்த மேன்மையினாலும், அவ்வற்ற பெரிய தருமங்களை

வளர்க்கின்ற தன்மையினாலும், சிவபெருமானது இடப் பாகத்தைத் தமக்கிடமாகவுடைய உமாதேவியாரையும், அவரது திருவுள்ளத்திற்கனிந்த கிருபைத் தன்மையையும் ஒத்துள்ளது.

***வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்***
***செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்(து)***
***எம்பி ரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி***
***உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்குமால். 7***

(இ - ள்.) வாசனைபொருந்தியமலர்களினாலும், நீரினாலும் வழிபட்டுச் சிவந்த பொற்பொடிகள் பொருந்திய நீண்ட இருகரையிலுமுள்ள அளவற்ற சிவாலயங்களில் (எழுந்தருளி யிருக்கும்) எமது பெருமானாகிய பரமசிவனை வணங்குவதனால், குளிர்ச்சிபொருந்திய காவிரிநதியானது, தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானது அடியார்களையும் ஒத்திருக்கும். - எ - று.

***வாச நீர்குடை மங்கையர் கொங்கையில்***
***பூசு குங்கும மும்புனை சாந்தமும்***
***வீசு தெண்டிரை மீதிழிந் தோடுநீர்***
***தேசு டைத்தெனி னும்தெளி வில்லதே. 8***

(இ - ள்.) வாசனைபொருந்திய நீரில் ஸ்நானஞ்செய்கின்ற பெண்கள் தங்களுடைய ஸ்தனங்களில் பூசிய குங்குமக்குழம்பை யும், அணிந்த சந்தனக்குழம்பையும், வீசுகின்ற தெளிந்த அலைகளினால் தன்னிடத்தில் கரைத்துக்கொண்டு ஓடுகின்ற அக்காவிரிநதியானது மிகுந்த பிராகசமுடையதாயிருந்தாலும் கலங்கலாயிருக்கின்றது. - எ - று.

***மாவி ரைத்தெழுந் தார்ப்ப வரைதரு***
***பூவி ரித்த புதுமதுப் பொங்கிட***
***வாவி யிற்பொலி நாடு வளந்தரக்***
***காவி ரிப்புனல் கால்பரந் தோங்குமால். 9***

(இ - ள்.) வண்டுகள் ஆரவாரித்தெழுந்து கானஞ்செய்யவும், மலைகளிலிருந்து வருகின்ற மலர்கள் மலர்தலினாலுண்டாகிய தேன்கள் அதிகரிக்கவும், தடாகங்களினால் பிரகாசிக்கின்ற சோழநாடானது பலவளங்களைக்கொடுக்கவும் காவிரியாற்றின் நீரானது அநேகங்கால்வழிகளாகப் பிரிக்கப்பட்டு விளங்கும். எ - று.

**ஒண்து றைத்தலை மாமத கூடுபோய்**
**மண்டு நீர்வய லுட்புக வந்தெதிர்**
**கொண்ட மள்ளர் குரைத்தகை ஓசைபோய்**
**அண்டர் வானத்தின் அப்புறஞ் சாருமால்.** 10

(இ - ள்.) மிகுந்த நீரானது (உயர்ந்து) விளங்குகின்ற கரையின் கணுள்ள பெரிய மதகின்வழியாகப் போய் வயல்களிற் பாய்வதினால், அக்கரையில்வந்து (அந்நீரைக் கால்வழியாகக் கொண்டுபோக) எதிர்வந்த உழவர்கள் (சந்தோஷத்தினால்) கைகொட்டுதலாலுண்டாகிய ஓசையானது தேவர்கள் வாழு கின்ற விண்ணுலகத்திற்கு அப்புறத்திலும்போய்ச்சேரும். - எ - று.

**மாதர் நாறு பறிப்பவர் மாட்சியும்**
**சீத நீர்முடி சேர்ப்பவர் செய்கையும்**
**ஓதை யார்செய் உழுநர் ஒழுக்கமும்**
**காதல் செய்வதோர் காட்சி மலிந்ததே.** 11

(இ - ள்.) அழகுபொருந்திய நாற்றைப் பறிக்கின்றவர் களுடைய சிறப்பும் குளிர்ச்சிபொருந்திய நீரினிடத்தில் அந்த நாற்றைமுடிகளாகக்கட்டிச் சேர்க்கின்றவர்களுடைய செயலும், முழக்கத்தினையுடைய வயல்களையுழுகின்ற மள்ளர்களின் வரிசையும் (பார்ப்பவர்களுக்கு) விருப்பத்தைத் தரத்தக்கதாகிய காட்சியினால் பிரகாசித்தன. - எ - று.

**உழுத சால்மிக வூறித் தெளிந்தசே(று)**
**இழுது செய்யினுள் இந்திரத் தெய்வதம்**
**தொழுது நாறு நடுவார் தொகுதியே**
**பழுதில் காவிரி நாட்டின் பரப்பெலாம்.** 12

(இ - ள்.) உழவர்களால் உழப்பட்ட படைச்சால்களில் மிகவும் ஊறித்தெளிந்த சேறானது குழம்பாயிருக்கின்ற வயல்களில் தேவேந்திரனாகிய தெய்வத்தை வணங்கி நாற்றை நடுகின்ற கடைசியர்களின் கூட்டமே, குற்றமற்ற காவிரி நதிசூழ்ந்த சோழநாட்டினது பரந்த இடங்களிலெல்லாம் மிகுதியாயிருக்கும்.

**மண்டுபுனல் பரந்தவயல் வளர்முதலின் சுருள்விரியக்**
**கண்டுழவர் பதங்காட்டக் களைகளையுங் கடைசியர்கள்**
**தண்டரளஞ் சொரிபணிலம் இடறியிடை தளர்ந்தசைவார்**
**வண்டலையும் குழல்அலைய மடநடையின் வரம்பணைவார்.** 13

(இ - ள்.) மிகுந்த நீர்பரந்த வயல்களில் வளர்கின்ற நெற்பயிர்களின் சுருள்கள் விரிந்து தழைக்கின்ற பருவத்தைக் கண்டு பள்ளர்கள் களைகடியும் பருவம் இதுதானென்று காட்டும்பொழுது, அப்பயிர்களிலுள்ள களைகளைப் பறிக்கின்ற பள்ளஸ்திரீகள் குளிர்ந்தமுத்துகளைச் சிந்துகின்ற சங்குகள் காலில் இடறி (அதனால்) இடைதளர்ந்து வருந்தினவர்களாய்ப் (பின் அவர்கள்) வண்டுகள் (தேனுண்ணும் விருப்பத்தினால்) மொய்க்கின்ற கூந்தல் அவிழ்ந்தலையும்படி மிருதுவான நடையினாலே வரம்பினிடத்திற்போய்ச் சேருவார்கள். - எ - று.

(ஸ்திரீ - பெண்)

***செங்குவளை பறித்தணிவார் கருங்குழல்மேல் சிறைவண்டை***
***அங்கைமலர் களைக்கொடுகைத் தயல்வண்டும் வரவழைப்பார்***
***திங்கள்நுதல் வெயர்வரும்பச் சிறுமுறுவல் தளவரும்பப்***
***பொங்குமலர்க் கமலத்தின் புதுமதுவாய் மடுத்தயர்வார். 14***

(இ - ள்.) (பள்ளஸ்திரீகளில் சிலர்) கருமைநிறம்பொருந்திய கூந்தலில் செங்குவளை மலர்களைப்பறித்துத் தரித்துக் கொள்ளுவார்கள். (சிலர் அக்கூந்தலின்மேல் விழுகின்ற) சிறகினையுடைய வண்டுகளைத் (தமது) அழகியமையாகிய தாமரைமலர்களைக்கொண்டு ஓட்டி அயலிலுள்ள வண்டுகளையும் வரும்படி அழைப்பார்கள். (சிலர்) மூன்றாம்பிறையையொத்த தமது நெற்றியில் வெயர்வையுண்டாகவும், புன்னகையாகிய முல்லையரும்புகள் மலரவும், ஒளிவிளங்குகின்ற தாமரை மலரிலுள்ள புதியதேனைக்குடித்து (அதனால்) மயங்குவார்கள்.- எ - று.

***கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்***
***சுரும்பல்லி குடைநீலத் துகளல்ல பகலெல்லாம்***
***அரும்பல்ல முலையென்ன அமுதல்ல மொழியென்ன***
***வரும்பல்லா யிரங்கடைசி மடந்தையர்கள் வயல்எல்லாம். 15***

(இ - ள்.) பகற்காலமுழுவதும் (வேளாண்மையின் வளப்பத்தைப் பார்க்கவரும் அன்னியர்களுக்கு, இவைகள்) கரும்பு அல்ல நெற்பயிர்கள் என்று சொல்லவும், (இவைகள்) கமுகமரமல்ல கரும்பென்று சொல்லவும், (இவைகள்) வண்டு களல்ல (அவ்வண்டுகள்) அகவிதழைக் குடைதலாலுண்டாகிய நீலோற்பலமலரின் கரியதுகளென்று சொல்லவும், (இவைகள்) அரும்பு களல்ல முலை யென்று சொல்லவும் (இவைகள்) அமுதமல்ல வார்த்தையென்று சொல்லவும் வருகின்ற அநேகமாயிரம் பள்ளஸ்திரீகள் வயல்களிலெல்லாம் நிறைந் திருக்கின்றார்கள்.

***கயல்வாய்பைந் தடநந்தூன் கழிந்தபெருங் கருங்குழிசி***
***வியல்வாய்வெள் வளைத்தரள மலர்வேரி உலைப்பெய்தங்***
***கயலாமை அடுப்பேற்றி அரக்காம்பல் நெருப்பூதும்***
***வயல்மாதர் சிறுமகளிர் விளையாட்டு வரம்பெல்லாம்.*** 16

(இ - ள்) கெண்டைமீன்கள் பாய்ந்து விளையாடுகின்ற குளிர்ந்த நீரையுடைய தடாகத்தில் தோன்றிய ஊன்கழிந்த சங்குகளை பெரிய கருமைபொருந்திய பானையாக வைத்து, அகன்ற வாயையுடைய வெண்மையாகிய சங்குகளீன்ற முத்துக்களாகிய அரிசியை (அந்தப்பானையில் வார்க்கும்) பூந்தேனாகிய உலையிற் போட்டு, அயலிலிருக்கின்ற ஆமையோடாகிய அடுப்பின்மேலேற்றிச், செவ்வாம்பல் மலராகிய நெருப்பை (அவ்வடுப்பில்வைத்து) ஊதுகின்ற பள்ளஸ்ரீகளின் சிறுபெண்களினுடைய விளையாட்டானது வயலின் வரம்பிடங்களெல்லாம் இருக்கும். எ - று.

***காடெல்லாம் கழைக்கரும்பு காவெல்லாம் குழைக்கரும்பு***
***மாடெல்லாம் கருங்குவளை வயலெல்லாம் நெருங்குவளை***
***கோடெல்லாம் மடஅன்னம் குளமெல்லாம் கடல்அன்ன***
***நாடெல்லாம் நீர்நாடு தனைஒவ்வா நலமெல்லாம்.*** 17

(இ - ள்.) (அம்மருதநிலத்திலுள்ள) காடுகளெல்லாம் கழையாகிய கரும்புகளும், சோலைகளெல்லாம் குழையோடு கூடிய அரும்புகளும், வயலின் பக்கங்களெல்லாம் நீலோற்பல மலர்களும், வயலிடங்களெல்லாம் நெருங்கிய சங்குகளும், தடாகக் கரைகளெல்லாம் இளமைபொருந்திய அன்னங்களு முள்ளன. தடாகங்களெல்லாம் சமுத்திரத்தைப் போல விசாலித்து ஆழமாகவுள்ளன. (ஆதலால்) எல்லா நலங்களி னாலும், மற்ற நாடுகளெல்லாம் நீர்வளம் பொருந்திய சோழ நாட்டுக்கு ஒப்பாகா. - எ - று.

***ஆலை பாய்பவர் ஆர்ப்புறும் ஒலமும்***
***சோலை வாய்வண் டிரைத்தெழு சும்மையும்***
***ஞாலம் ஓங்கிய நான்மறை ஓதையும்***
***வேலை ஓசையின் மிக்கு விரவுமால்.*** 18

(இ -ள்.) ஆலைகளில் கரும்புகளைப் பாய்ச்சுகின்றவர்கள் ஆரவாஞ்செய்யுமோசையும், சோலைகளில் (தேனுண்ணுதற்கு வந்து) பொருந்திய வண்டுகள் இரைத்தெழுகின்ற ஓசையும்,

உலகத்தில் உயர்ந்த நான்கு வேதங்களினுடைய அத்தியயன வோசையும் (ஆகிய இவ்வோசைகள்) சமுத்திர வோசையைப் பார்க்கிலும் அதிகப்பட்டு முழங்கும் - எ. று.

***அன்னம் ஆடும் அகன்துறைப் பொய்கையில்***
***துன்னும் மேதி படியத் துதைந்தெழும்***
***கன்னி வாளை கமுகின்மேற் பாய்வன***
***மன்னு வான்மிசை வானவில் போலுமால். 19***

(இ - ள்.) அன்னப்பட்சிகள் கூடிவிளையாடுகின்ற விசால மாகிய கரையினையுடைய தடாகங்களில், அங்குள்ள எருமைக் கடாக்கள் விழுந்து முழுகுதலால், (அத்தடாகங்களிலிருந்து) நெருங்கி மேலெழும்புகின்ற இளமைபொருந்திய வாளை மீன்கள் கமுகமரத்தின்மேல் பாயுந் தோற்றமானது (எவ்வா றிருக்குமென்றால்) ஆகாயத்தில் பொருந்திய இந்திரவில்லை யொத்திருக்கும். - எ - று.

***காவி னிற்பயி லுங்களி வண்டினம்***
***வாவி யிற்படிந் துண்ணும் மலர்மது***
***மேவி அத்தடம் மீதெழப் பாய்கயல்***
***தாவி அப்பொழி லின்கனி சாடுமால். 20***

(இ - ள்.) சோலைகளிற் சஞ்சரிக்கின்ற மதுமயக்கத்தினை யுடைய வண்டின் கூட்டங்கள் தடாகங்களிலுள்ள மலர்களில் விழுந்து அம்மலர்களிலுள்ள தேனையுண்ணும். அத்தடாகங் களில் பொருந்திய மேலெழுந்து பாய்கின்ற கெண்டைமீன் களானவை (அவ்வண்டுகள் தன்னுடையவாசஸ்தலத்தை யடைந்து மதுவையுண்டனவென்னும் கோபத்தினால் அவைகள் வாசஞ்செய்கின்ற) அச்சோலைகளிலுள்ள பழங்களை யெல்லாம் தாவிச்சிதறும். - எ - று.

***சாலிநீள் வயலின் ஓங்கித் தந்நிகர் இன்றி மிக்கு***
***வாலிதாம் வெண்மை உண்மைக் கருவினாம் வளத்த வாகிச்***
***சூல்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தரனுக் கன்பர்***
***ஆலின சிந்தை போல ஆலர்ந்தன கதிர்க ளெல்லாம். 21***

(இ - ள்.) நெற்பயிர்கள் நீண்ட வயலினிடத்தில் ஓங்கி வளர்ந்து, (யாதொன்றுந்) தனக்குச் சமானமில்லாமல் உயர்ந்து, பரிசுத்தம் பொருந்திய வெண்ணிறத்தைத் தன்னள்ளேயுள்ள கருவினாலாகின்ற வளப்பத்தை யுடையனவாகி, அக்கரு

முதிர்தலாகிய பசலைநிறத்தையடைந்து, பின்பு கதிர்ச்சுருளை விரித்து, சிவபெருமானிடத்தில் அன்புசெலுத்துகின்ற அடியார்களின் விசாலமாகிய திருவுள்ளம்போலக் கதிர்களை மலர்ந்தன. எ - று.

**பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்**
**தத்தமிற் கூடி னார்கள் தலையினால் வணங்கு மாபோல்**
**மொய்த்துநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை**
**வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம். 22**

(இ-ள்.) பத்தியின்வழிப்பட்டவர்களாகிச் சிவபெருமானுக்கு அடிமைபூண்டொழுகுகின்ற அன்பர் தங்களுக்குத் தாங்களே கூடினவர்களாகி ஒருவர்க்கொருவர் தலையைத் தாழ்த்தி வணங்குவதுபோல, நெருங்கி நீண்ட வரிசையினையுடையனவாகிப் பால் முதிர்ந்த கதிராகிய தலைகளைத் தாழ்த்தி, மேற்சொல்லிய அடியார்களின் சிவானுபவத் தன்மையைப் போல நெற்பயிர்களெல்லாம் விளைந்தன. - எ - று.

**அரிதரு செந்நெற் சூட்டின் அடுக்கிய அடுக்கல் சேர்ப்பார்**
**பரிவுறத் தடிந்த பன்மீன் படர்நெடுங் குன்று செய்வார்**
**சுரிவளை சொரிந்த முத்தின் சுடர்ப்பெரும் பொருப்பு யர்ப்பார்**
**விரிமலர்க் கற்றை வேரி பொழிந்திழி வெற்பு வைப்பார். 23**

(இ - ள்.) (மள்ளர்களில்) அரிவாளினால் அரியப்பட்ட செந்நெல்லரிகளால் ஒன்றின்மே லொன்றாக அடுக்கப்பட்ட சுமைகளை மலைபோலக் குவிப்பார்கள். (சிலர்) ஆசையோடு பிடித்த பலவகைப்பட்ட மீன்களையும் படர்ந்த பெரிய மலைபோலக் குவிப்பார்கள். (சிலர்) சுரிந்த சங்குகளீன்ற முத்துக்களை ஒளிபொருந்திய பெரியமலைகளைப்போல உயர்த்துவார்கள். (சிலர்) வாசனை வீசுகின்ற மலர்க்கூட்டங்களைத் தேனாகிய அருவிபொழிந்தோடுகின்ற மலைபோலக் குவிப்பார்கள். - எ - று.

**சாலியின் கற்றை துற்ற தடவரை முகடு சாய்த்துக்**
**காலிரும் பகடு போக்கும் கரும்பெரும் பாண்டில் ஈட்டம்**
**ஆலிய முகிலின் கூட்டம் அருவரைச் சிமயச் சாரல்**
**மேல்வலங் கொண்டு சூழுங் காட்சியின் மிக்க தன்றே. 24**

(இ - ள்.) நெல்லரியின் கற்றைகள்பொருந்திய (நெற்போராகிய) பெரிய மலையினது உச்சியைச் சரித்து (அப்போரை

மிதிக்கும்படி) வலியகால்களையுடைய பெரிய எருமைக்கடாக் களோடுசேர்த்து நடத்துகின்ற கருமைபொருந்திய எருதுகளின் கூட்டங்கள், அசைகின்ற மேகக்கூட்டமானது அளவிடுதற்கரிய மலையினது உச்சியின்மேல் வலமாகச் சூழ்ந்துவருகின்ற காட்சியிலும் மிகுதியாயிருந்தது.

***வைதெரிந் தகற்றி ஆற்றி மழைப்பெயல் மானத் தூற்றிச்***
***செய்யபொற் குன்றும் வேறு நவமணிச் சிலம்பும் என்னக்***
***கைவினை மள்ளர் வானம் கரக்கவாக் கியநெற் குன்றால்***
***மொய்வரை உலகம் போலும் முளரிநீர் மருத வைப்பு.*** 25

(இ - ள்.) கைத்தொழிலில் வல்லவர்களாகிய உழவர்கள் (நெற்போர் மிதித்தவுடனே) வைக்கோல்களை ஆராய்ந்து நீக்கி, (அந்நெல்லிலுள்ள பதர்கள் நீங்கும்படி) மழைத்துளிகள் துளிப்பதுபோலத் தூற்றுதல்செய்து, சிவந்த பொன்மலையும் அதற்கு வேறாகிய நவரத்தினங்களாலாகிய மலைகளும்போல விண்ணுலகம் மறையும்படி உயர்த்திய நெல்மலைகளினால் தாமரை மலர்களையுடைய நீர்வளம்பொருந்திய மருதநில மானது நெருங்கிய மலைகளையுடைய குறிஞ்சி நிலத்தை யொத்திருக்கும். - எ - று.

***அரசுகொள் கடன்கள் ஆற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்***
***பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பின்***
***விரவிய கிளையும் தாங்கி விளங்கிய குடிகள் ஓங்கி***
***வரைபுரை மாடம்நீடி மலர்ந்துள பதிகள் எங்கும்.*** 26

(இ - ள்.) (அப்படித்தொகுத்த நெற்களுள்) அரசன் பெற வேண்டிய ஆறிலொருபாகத்தை அவனுக்குச் செலுத்தி, மிகுந்த ஐந்துபங்கையும் தாங்களெடுத்துக்கொண்டு தருமங்களை விரும்பிச்செய்து, வணங்கத்தக்க தெய்வங்களைப் பூசித்து, பெரியயோர்களையும் - விருந்தினரையும், அன்போடு வந்து சேர்ந்த உறவினரையும் பாதுகாத்து (அதனால் புகழ்பெற்று) விளங்குகின்ற குடிகள் அதிகரித்து, அவர்கள் வாசஞ்செய்வதற் கமைந்த மலைபோன்ற மாளிகைகள் உயர்ந்து விளங்கியுள்ளன அச்சோழநாடெங்கும். - எ - று.

***கரும்படு களமர் ஆலைக் கமழ்நறும் புகையோ மாதர்***
***சுரும்பெழ அகிலால் இட்ட தூபமோ யூப வேள்விப்***
***பெரும்பெயர்ச் சாலை தோறும் பிறங்கிய புகையோ வானின்***
***வருங்கரு முகிலோ சூழ்வ மாடமும் காவும் எங்கும்.*** 27

(இ - ள்.) கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுகின்ற மள்ளர்களினது ஆலையிருக்குமிடத்திலிருந்து தோன்றிய மணம்பொருந்திய நல்லபுகையோ! பெண்கள் வண்டுகளெழும்படி அகிற்கட்டை களால் தங்கள் கூந்தலுக்கு ஊட்டிய புகையோ! யூப ஸ்தம்பங் களை நிறுத்திச் செய்கின்ற பெரிய யாகசலைகளிலிருந்து வெளிப்பட்டு விளங்குகின்ற புகையோ! ஆகாயத்தில் சஞ்சரிக் கின்ற கறுத்தமேகமோ! மாளிகைகளிலுஞ் சோலைகளிலுஞ் சூழ்ந்துகொண்டிருக்கின்றன. (ஈது இன்னதென்று வேறுபாட றியக் கூடவில்லை.) எ - று.

**நாளிகே ரஞ்செ ருந்தி நறுமலர் நரந்தம் எங்கும்**
**கோளிசா லந்த மாலம் குளிர்மலர்க் குரவம் எங்கும்**
**தாளிரும் போந்து சந்து தண்மலர் நாகம் எங்கும்**
**நீளிலை வஞ்சி காஞ்சி நிறைமலர்க் கோங்கம் எங்கும். 28**

(இ - ள்.) (அச்சோழநாட்டின்) எவ்விடங்களிலுந் தென்னை மரங்களும், செருந்திமரங்களும், நல்லமலர்கள் பொருந்திய நாரத்த மரங்களும், பூவாதுகாய்க்கும் மரங்களும், பச்சிலை மரங்களும், குளிர்ந்த மலர்களையுடைய குராமரங்களும், அடிபருத்து உயர்ந்த பனைமரங்களும், சந்தனமரங்களும், குளிர்ச்சிபொருந்திய மலர்களையுடைய குங்குமமரங்களும், நீண்ட இலைகளமைந்த வஞ்சிமரங்களும், காஞ்சிமரங்களும், நிறைந்தமலர்கள் பொருந்திய கோங்கமரங்களும் இருக்கின்றன.

**சூதபா டலங்கள் எங்கும் சூழ்வழை ஞாழல் எங்கும்**
**சாதிமா லதிகள் எங்கும் தண்தளிர் நறவம் எங்கும்**
**மாதவி சரளம் எங்கும் வகுளசண் பகங்கள் எங்கும்**
**போதவிழ் கைதை எங்கும் பூகபுன் னாகம் எங்கும். 29**

(இ-ள்.) எவ்விடங்களிலும் மாமரங்களும், பாதிரிமரங்களும், சூழ்ந்திருக்கின்ற சுரபுன்னை மரங்களும், ஞாழல்களும், சிறுசண் பகங்களும், மல்லிகைகளும், குளிர்ச்சிபொருந்திய துளிர்களை யுடைய அனிச்சமரங்களும், குருக்கத்திக்கொடிகளும், சரள மரங்களும், மகிழமரங்களும், சண்பகமரங்களும், புஷ்பங்கள் விரிந்த தாழைமரங்களும், கமுகமரங்களும், புன்னைமரங்களும் இருக்கின்றன. - எ - று.

***மங்கல வினைகள் எங்கும் மணஞ்செய்கம் பலைகள் எங்கும்***
***பங்கய வதனம் எங்கும் பண்களின் மழலை எங்கும்***
***பொங்கொளிக் கலன்கள் எங்கும் புதுமலர்ப் பந்தர் எங்கும்***
***செங்கயல் பழனம் எங்கும் திருமகள் உறையுள் எங்கும். 30***

(இ - ள்.) எவ்விடங்களிலும் மங்கலத்தொழில்களும், கலியாணஞ் செய்வதனாலுண்டாகின்ற வாத்தியங்களின் ஓசைகளும், (பெண்களினுடைய) தாமரைமலர்போன்ற முகங்களும், அப்பெண்களினுடைய பண்ணொடு இசைந்த மழலைச் சொற்களும் ஒளிவீசுகின்ற ஆபரணங்களும், புதியமலர்களால் அலங்கரிக்கப்பட்ட பந்தல்களும், சிவந்த கெண்டைமீன்கள்பொருந்திய வயல்களும், இலக்குமி வாசஞ்செய்யத் தக்க இடங்களும் இருக்கின்றன. - எ - று.

***மேகமும் களிறும் எங்கும் வேதமும் கிடையும் எங்கும்***
***யாகமும் சடங்கும் எங்கும் இன்பமும் மகிழ்வும் எங்கும்***
***யோகமும் தவமும் எங்கும் ஊசலும் மறுகும் எங்கும்***
***போகமும் பொலிவும் எங்கும் புண்ணிய முனிவர் எங்கும். 31***

(இ - ள்.) எவ்விடங்களிலும் மேகக்கூட்டகங்களும், யானைகளும், வேதவொலியும், அவ்வேதத்தை அத்தியயனம் பண்ணுகின்றவர்களின் கூட்டங்களும், வேள்விகளும், அவ்வேள்விக்கு அங்கங்களாயுள்ள சடங்குகளும், இன்பமும், அவ்வின்பத்தாலுண்டாகிய சந்தோஷமும், அஷ்டாங்கமுதலிய யோகஞ் செய்தலும், விரதமுதலிய தவஞ்செய்தலும், ஊஞ்சலாடுதலும், அவைகளையுடைய வீதிகளும், பல வகையாகிய இன்பங்களை யனுபவித்தலும், அதனாலுண்டாகிய பொலிவும் இருக்கின்றன. புண்ணியசொருபராகிய முனிவர்களுமிருக்கின்றார்கள். - எ - று.

***பண்தரு விபஞ்சி எங்கும் பாதசெம் பஞ்சி எங்கும்***
***வண்டறை குழல்கள் எங்கும் வளரிசைக் குழல்கள் எங்கும்***
***தொண்டர்தம் இருக்கை எங்கும் சொல்லுவ திருக்கை எங்கும்***
***தண்டலை பலவும் எங்கும் தாதகி பலவும் எங்கும். 32***

(இ - ள்.) எவ்விடங்களிலும் (பலவகையாகிய) பண்களைப் பாடுதற்குரிய வீணைகளும், (பெண்களினது) கால்களில் ஊட்டிய செம்பஞ்சுக்குழம்பின் குறிகளும், வண்டுகள் முழங்குகின்ற அப்பெண்களின் கூந்தல்களும், இசைகள் பொருந்திய

அசையாமல் ஊதுவது போல நாற்புறமும் இசையானது நிறைந்து பரவும்படி நின்று, (புள்ளாங்குழலின் முதலிலுள்ள) பரிசுத்தம் பொருந்திய பெரிய ஒப்பற்ற துளையில் நமது ஆனாயநாயனார் அழகிய அதரத்தை வைத்து ஊத. -எ - று.

**முத்திரையே முதலனைத்தும் முறைத்தானஞ் சோதித்து**
**வைத்ததுளை ஆராய்ச்சி வக்கானை வழிபோக்கி**
**ஒத்தநிலை உணர்ந்ததற்பின் ஒன்றுமுதல் படிமுறையாம்**
**அத்தகைமை ஆரோசை அமரோசை களின்அமைத்தார். 24**

(இ - ள்.) முத்திரைமுதலிய எல்லாத்துளைகளையும் முறைமையாக ஸ்தான சோதனை செய்து அமைக்கப்பட்ட துளைகளை ஆராய்ச்சி செய்து, இராக சோதனையறிய விரல்களை முறையே செலுத்தி ஸ்வரங்களெல்லாம் ஒத்திருக்கின்ற நிலைமையை யறிந்தபின்பு சட்சம் முதல் நிஷாதம் வரைக்கும் வரிசையாக, எச்சாகவும், தக்காகவும் அமைத்து அவ்வுயர்ந்த தகுதியாகப் பாடினார். - எ- று.

**மாறுமுதற் பண்ணின்பின் வளர்முல்லைப் பண்ணாக்கி**
**ஏறியதா ரமும்உழையும் கிழமைகொள இடுந்தானம்**
**ஆறுலவுஞ் சடைமுடியார் அஞ்செழுத்தின் இசைபெருகக்**
**கூறியபட் டடைக்குரலாங் கொடிப்பாலை யினில்நிறுத்தி. 25**

(இ - ள்.) சுரங்கள் மாறுபட்டுவருகின்ற குறிஞ்சிப் பண்ணைப் பாடின பின்பு, வளர்ந்த முல்லைப்பண்ணை யமைத்துப்பாடி, பாலையாழுக் கமைந்த தாரம் உழை என்னும் இரண்டு பண்களையும் பொருந்தும் படி இடப்பட்ட தாளங்களில் கங்கா நதி யுலாவுகின்ற சடை முடியினையுடைய சிவபெருமானது திருவைந்தெழுத்தின் இசையானது பெருகும்படி (அப்பாலையயாழின் பேதங்களை முடித்துப் பின்பு) சொல்லப்பட்ட இளியைக்குரலாகவுடைய கொடிப்பாலைப் பண்ணில் நிறுத்தி. - எ- று.

**ஆயஇசைப் புகல்நான்கின் அமைந்தபுகல் வகையெடுத்து**
**மேயதுளை பற்றுவன விடுப்பனவாம் விரல்நிரையிற்**
**சேயவொளி யிடையலையத் திருவாளன் எழுத்தஞ்சுந்**
**தாயஇசைக் கிளைகொள்ளுந் துறையஞ்சின் முறைவிளைத்தார். 26**

(இ - ள்.) இசைக்குரித்தாகிய பண் - பண்ணியல் - திறம் - திறத்திறம் என்னும் இசைவகை நான்கிலும் தாம் பாடுகின்ற

கொடிப்பாலைக் கமைந்த இசையையெடுத்துப் பொருந்திய புள்ளாங்குழலில் துளைகளைப் பொத்துதலும் விடுதலுமாகிய விரல்வரிசையில் தோன்றுகின்ற சிவந்த பிரகாசமானது அப் புள்ளாங்குழலின் நடுவில் ததும்பி விளங்க, சிவபெருமானது திருவெழுத் தைந்தையும் குற்றமற்ற இசையின் பிரிவாயிருக்கின்ற ஆயத்தம், எடுப்பு, உக்கிரம், சஞ்சாரம், இடாயம் என்னும் ஐந்து துறைகளிலும் முறைமையாகப் பாடினார். - எ- று.

***மந்தரத்தும் மத்திமத்தும் தாரத்தும் வரன்முறையால்***
***தந்திரிகள் மெலிவித்தும் சமங்கொண்டும் வலிவித்தும்***
***அந்தரத்து விரற்றொழில்கள் அளவுபெற அசைத்தியக்கிச்***
***சுந்தரச்செங் கனிவாயும் துளைவாயும் தொடக்குண்ண.*** 27

(இ - ள்.) மந்தரம் - மத்திமம் - தாரம் என்னும் மூன்று சுருதிகளின் முறைமைப்படியே தெரிவிக்கின்ற துளைகளை விரல்களினால் மென்மையாகப் பொத்தியும், சமமாகப் பொத்தியும், வலிவாகப் பொத்தியும் இம்மூன்றுமல்லாத மற்ற துளைகளின் விரற்றொழில்களை அளவு குறையாமல் அசைத்து இயக்குவித்தும் அழகு பொருந்திய சிவந்த கனிபோன்ற அதரமும், புள்ளாங்குழலின் துவாரவாயும் ஒன்றுபட்டிணங்க. - எ- று.

***எண்ணியநூற் பெருவண்ணம் இடைவண்ணம் வனப்பென்னும்***
***வண்ணஇசை வகையெல்லாம் மாதுரிய நாதத்தில்***
***நண்ணியபா ணியும்இயலும் தூக்குநடை முதற்கதியில்***
***பண்ணமைய எழும்ஓசை எம்மருங்கும் பரப்பினார்.*** 28

(இ - ள்.) உயர்வாக மதிக்கப்பட்ட இசை நூலிற் கூறிய பெருவண்ணம் இடைவண்ணம் - வனப்பு என்னும் அழகிய இசையின் வேறுபாடுகளையெல்லாம் இனிமையாகிய நாதத்தால் அமைந்த தாளமும், இராகமும், ஏற்றமும், நடைமுதலாகிய கதியோடு பண்ணானது அமையும்படி எழுகின்ற ஓசையை எவ்விடத்திலும் பரவச் செய்தார். - எ- று.

***வள்ளலார் வாசிக்கும் மணித்துளைவாய் வேய்ங்குழலின்***
***உள்ளுறைஅஞ் செழுத்தாக ஒழுகியெழு மதுரவொலி***
***வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கும் மேலமரர் தருவிளைதேன்***
***தெள்ளமுதின் உடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க.*** 29

(இ - ள்.) இவ்வாறு ஆனாயநாயனார் வாசிக்கின்ற அழகிய துளைகள் பொருந்திய புள்ளாங்குழலின் உள்ளமைந்த மொழியானது திருவைந்தெழுத்தாகப் பரவி எழுகின்ற இனிய ஓசையாகிய வெள்ளமானது நிறைவு பெற்று எல்லாவுயிர்களுக்கும் விண்ணுலகத்திலுள்ள கற்பகத்தருவின் தேனைத் தெளிவாகிய அமிர்தத்தோடு கலந்து காதாகியவாயில் வாப்பது போல நிறைக்க. - எ- று.

***ஆனிரைகள் அறுகருந்தி அசைவிடா தணைந்தயரப்***
***பானுரைவாய்த் தாய்முலையில் பற்றும்இளங் கன்றினமும்***
***தானுணவு மறந்தொழியத் தடமருப்பின் விடைக்குலமும்***
***மான்முதலாம் கான்விலங்கும் மயிர்முகிழ்த்து வந்தணைய. 30***

(இ - ள்.) பசுக்கூட்டங்கள் அறுகம்புற்களை மேய்ந்து பின் அதனை அசைவு இடாமல் தம்மையடைந்து உருக, பாலின் நுரைபொருந்திய வாயினை யுடையன வாகித் தாய்ப்பசுவின் முலையைப்பற்றி யுண்ணுகின்ற இளங்கன்றின் கூட்டமும் தான் உண்ணுகின்ற உணவாகிய பாலை மறந்து நீங்க, பெரிய கொம்புகளையுடைய இடபக் கூட்டங்களும், மான்முதலாகிய காட்டிலுள்ள மிருகங்களும் மயிர் சிலிர்த்துக் கொண்டு வந்து சேர. - எ- று.

***ஆடுமயில் இனங்களும்அங் கசைவயர்த்து மருங்கணுக***
***ஊடுசெவி இசைநிறைந்த உள்ளமொடு புள்ளினமும்***
***மாடுபடிந் துணர்வொழிய மருங்குதொழில் புரிந்தொழுகும்***
***கூடியவண் கோவலரும் குறைவினையின் துறைநின்றார். 31***

(இ - ள்.) காட்டில் சிறைவிரித்தாடுகின்ற மயிற் கூட்டங்களும் அவ்வாடுதலொழிந்து சமீபத்தில் வர, பலவகைப் பறவைக் கூட்டங்களும் பண்ணோசையானது காதின் வழியாகச் சென்று நிறைந்த மனதோடு அருகில் சேர்ந்து உணர்வொழிந்து நிற்க, தமக்குச் சமீபத்தில் பசுமேய்த்தலாகிய தொழிலைச் செய்து கொண்டிருக்கும் திரண்ட வலிபொருந்திய இடையர்களும் தாங்கள் செய்யும் வேலையில் நின்றும் ஒழிந்து புள்ளாங்குழலின் இசையைக் கேட்டு மன முருகி நின்றார்கள். - எ- று.

***பணிபுவனங் களிலுள்ளார் பயில்பிலங்கள் வழியணைந்தார்;***
***மணிவரைவாழ் அரமகளிர் மருங்குமயங் கினர்மலிந்தார்;***
***தணிவில்ஒளி விஞ்சையர்கள் சாரணர்கின் னரர்அமரர்***
***அணிவிசும்பில் அயர்வெய்தி விமானங்கள் மிசைஅணைந்தார். 32***

(இ-ள்.)நாகலோகத்திலுள்ளவர்கள் (இப்புள்ளாங் குழலி னிசையைக்கேட்டு) தாம் பழகியிருக்கின்ற பிலங்களின் வழியாகப் பூவுலகத்தில் வந்தார்கள்; அழகிய மலைகளில் வாழுகின்ற தெய்வப் பெண்கள் இசையால் மயங்கி அவருக்குச் சமீபத்தில் வந்து நெருங்கினார்கள்; குறைவில்லாத தேககாந்தி யையுடைய வித்தியாதரர்களும், சாரணர்களும், கின்னரர்களும், தேவர்களும் இசையைக் கேட்டு மெய்மறந்து அழகிய ஆகாயத்தினின்றும் விமானங்களின்மேல் ஏறிவந்தார்கள். - எ- று.

***சுரமகளிர் கற்பகப்பூஞ் சோலைகளின் மருங்கிருந்து***
***கரமலரின் அமுதூட்டுங் கனிவாய்மென் கிள்ளையுடன்***
***விரவுநறுங் குழல்அலைய விமானங்கள் விரைந்தேறிப்***
***பரவியஏ ழிசைஅமுதம் செவிமடுத்துப் பருகினார். 33***

(இ - ள்.) தெய்வப் பெண்கள் மலர்களையுடைய கற்பகச் சோலைகளின் அருகிலிருந்து கொண்டு மலர் போன்ற கைகளில் வைத்து அமிர்தத்தை யூட்டுகின்ற கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாயினையுடைய மெல்லிய கிளிப்பிள்ளைகளோடு வாசனை வீசுகின்ற கூந்தல்கள் அலையும் படி தேவவிமானங் களில் விரைவாக ஏறி எவ்விடத்திலும் பரவியிருக்கின்ற ஏழிசை களா லுண்டாகிய சங்கீதமாகிய அமிர்தத்தைச் செவியின் வழியாக நிறையவுண்டார்கள். - எ- று.

***நலிவாரும் மெலிவாரும் உணர்வொன்றாய் நயத்தலினால்***
***மலிவாய்வெள் ளெயிற்றரவம் மயில்மீது மருண்டுவிழும்;***
***சலியாத நிலைஅரியும் தடங்கரியும் உடன்சாரும்;***
***புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும். 34***

(இ - ள்.) வருத்துகின்ற வலியவர்களும், அவ்வருத்தத்தை யனுபவிக்கின்ற எளியவர்களும் (இக்குழலோசையைக் கேட்டுப் பேதமில்லாமல்) மனம் ஒருமைப் பட்டு விருப்பங் கொள்ளு தலால் அகன்ற வாயையும், வெள்ளிய பற்களையுமுடைய பாம்புகள் மயில்களின் மேல் மயங்கிவிழும்; கெடாத வலியினை யுடைய சிங்கங்களும் பெரிய யானைகளும் விரோதமில்லாமல் ஒன்றாகச் சேர்ந்திருக்கும்; சிறிய வாயினையுடைய மான்களும், புலியின் வாயினிடமாகப் பயமின்றிப் போகும்.

***மருவியகால் விசைத்தசையா மரங்கள்மலர்ச் சினைசலியா;***
***கருவரைவீழ் அருவிகளும் கான்யாறும் கலித்தோடா;***
***பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா;***
***இருவிசும்பி னிடைமுழங்கா; எழுகடலும் இடைதுளும்பா. 35***

(இ - ள்.) (ஆனாயநாயனார் வாசிக்கின்ற புள்ளாங்குழலின் இசையினால்) சஞ்சரிக்கின்ற காற்றுகள் விசைகொண்டு அசையாமலிருந்தன; மரங்களிலுள்ள மலர்களையுடைய கிளைகள் அசைவற்றிருந்தன; கருமையாகிய மலைகளிலிருந்து விழுகின்ற அருவிகளும், காட்டாறுகளும் இரைச்சலிட்டு ஓடாமலிருந்தன; பெரியமேகக் கூட்டங்கள் ஓரிடம் விட்டு வேறோரிடத்திற்குப் போவது ஒழிந்து நீரைப் பொழியாமலிருந் தன; அம்மேகங்கள் பெரிய ஆகாயத்தில் முழங்காமலிருந்தன; சப்தசமுத்திரங்களும் தம்மிடத்தில் நீர் ததும்பாமலிருந்தன. எ- று

***இவ்வாறு நிற்பனவும் சரிப்பனவும் இசைமயமாய்***
***மெய்வாழும் புலன்கரண மேவிவொன் றாயினவால்***
***மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடையார் அடித்தொண்டர்***
***செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல்வா சனையுருக்க.*** **36**

(இ - ள்.) இவ்விதமாக மரம் மலைமுதலிய நிலையியற் பொருள்களும், மனிதர் விலங்கு முதலிய இயங்கியற் பொருள்களுமாகிய எல்லாம் புள்ளாங்குழலிசையின் மயமாகி உடம்பிலுள்ள ஐம்புலன்களும், அந்தக் கரணங்களும் வேறுபாடில்லாமல் கேட்பதில் ஒன்றுபட்டுப் போயின; மிகுந்த வாசனை பொருந்திய நல்ல கொன்றை மலர்மாலையைத் தரித்த சடைமுடியினையுடைய சிவபெருமானது திருவடிகளுக் கன்பராகிய ஆனாயநாயனார் தமது சிவந்த வாயில் வைத்து ஊதுகின்ற சிறந்த புள்ளாங் குழலின் நாதமானது உருகச் செய்தபடியால். - எ- று.

***மெய்யன்பர் மனத்தன்பின் விளைந்தஇசைக் குழலோசை***
***வையந்தன் னையும்நிறைத்து வானம்தன் வயமாக்கிப்***
***பொய்யன்புக் கெட்டாத பொற்பொதுவில் நடம்புரியும்***
***ஐயன்றன் திருச்செவியின் அருகணையப் பெருகியதால்.*** **37**

(இ - ள்.) மெய்யன்பராகிய ஆனாயநாயனாரது மனதிற் பொருந்திய அன்பினாலுண்டாகிய புள்ளாங்குழலின் ஓசை யானது மண்ணுலகத்தையும் நிரப்பி, விண்ணுலகத்தையும் அப்படியே தன் வசப்படுத்தி, பொய்யாகிய அன்புக்கு எட்டாத பொன்னம் பலத்தில் திருநடனஞ் செய்தருளுகின்ற சிவபெருமா னது திருச்செவியினருகில் சென்று நிறைந்தது. - எ- று.

***ஆனாயர் குழலோசை கேட்டருளிஅருட்கருணை***
***தானாய திருவுள்ளம் உடையதவ வல்லியுடன்***
***கானாதி காரணராம் கண்ணுதலார் விடையுகைத்து***
***வானாறு வந்தணைந்தார் மதிநாறுஞ் சடைதாழ.*** **38**

(இ - ள்.) ஆனாயநாயனார் வாசிக்கின்ற புள்ளாங்குழலின் ஓசையைத் திருச் செவியிற் கேட்டு உயிர்களிடத்தில் வைத்த பெருங்கருணையே வடிவமாயமைந்த திருவுள்ளத்தையுடைய உமாதேவியாரோடு இசைக்கு ஆதிகாரணராய் விளங்குகின்ற நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் ரிஷபவாகனத்தை நடத்திக் கொண்டு பிறைச்சந்திரன் விளங்குகின்ற சடையானது தாழும்படி ஆகாயமார்க்கத்தில் எழுந்தருளி வந்தார். - எ- று.

***திசைமுழுதுங் கணநாதர் தேவர்கட்கு முன்நெருங்கி***
***மிசைமிடைந்து வரும்பொழுது வேற்றொலிகள் விரவாமே***
***அசையஎழுங் குழல்நாதத் தஞ்செழுத்தால் தமைப்பரவும்***
***இசைவிரும்பும் கூத்தனார் எழுந்தருளி எதிர்நின்றார். 39***

(இ - ள்.) எல்லாத் திக்குகளிலும் சிவகணநாதர்கள் தேவர் கூட்டங்களுக்கு முன்னே நெருங்கி ஆகாயவழியாக நிறைந்து வரும் பொழுது, வேறே எந்த ஒலிகளும் உண்டாகாமல் அசைந்து எழுகின்ற புள்ளாங்குழலின் நாதத்தில் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தினால் தம்மைத் தோத்திரஞ் செய்கின்ற இசையை விரும்பிய சிவபெருமான் ஆனாயநயனாருக்குமுன்னே ரிஷபவாகனத்தின் மேல் எழுந்தருளிக் காட்சி கொடுத்து நின்றார். - எ- று.

***முன்னின்ற மழவிடைமேல் முதல்வனார் எப்பொழுதும்***
***செந்நின்ற மனப்பெரியோர் திருக்குழல்வா சனைகேட்க***
***"இந்நின்ற நிலையேநம் பாலணைவாய்" எனஅவரும்***
***அந்நின்ற நிலைபெயர்ப்பார் ஐயர்திரு மருங்கணைந்தார். 40***

(இ - ள்.) இளமை பொருந்திய ரிஷபவாகனத்தின்மேல் காட்சி கொடுத்தருளிய முதற் பெருங்கடவுளாகிய சிவ பெருமான் (ஆனாயநாயனாரைப் பார்த்து அன்பனே!) சிறந்த அன்பு பொருந்திய மனதினையுடைய நமது அடியார்கள் எப்பொழுதும் நீவாசிக்கின்ற புள்ளாங்குழலின் இசையைக் கேட்கும் பொருட்டு இப்பொழுது இவ்விடத்தில் நீ நின்றபடியே நம்மிடத்திற்கு வருவாயாகவென்று திருவாய்மலர்ந்தருள, அவ்வானாய நாயனாரும் அவ்வாறு தாம் நின்ற நிலையை நீங்கி (அப்புள்ளாங்குழல் வாசித்துக் கொண்டு) சிவபெருமானது பக்கத்தில் சேர்ந்தார். - எ- று.

***விண்ணவர்கள் மலர்மாரி மிடைந்துலக மிசைவிளங்க***
***எண்ணிலரு முனிவர்குழாம் இருக்குமொழி எடுத்தேத்த***
***அண்ணலார் குழற்கருவி அருகிசைத்தங் குடன்செல்லப்***
***புண்ணியனார் எழுந்தருளிப் பொற்பொதுவி னிடைப்புக்கார். 41***

(இ - ள்.) தேவர்கள் பொழிகின்ற புஷ்பமாரியானது நிலவுலகத்தில் நிறைந்துவிளங்கவும், அருமையாகிய அளவற்ற முனிவர்கூட்டங்கள் வேதவாக்கியங்களை எடுத்துத் துதிக்கவும், ஆனாயநாயனார் புள்ளாங்குழலை அருகில்நின்று வாசித்துக் கொண்டு தம்மோடு செல்லவும், புண்ணியப் பொருளாயுள்ள சிவபெருமான் எழுந்தருளிப் பொன்னம் பலத்தில் புகுந்தருளி னார். - எ- று.

**சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி**

***தீதுகொள் வினைக்கு வாரோம் செஞ்சடைக் கூத்தர் தம்மைக்***
***காதுகொள் குழைகள் வீசும் கதிர்நில(வு)இருள்கால் சீப்ப***
***மாதுகொள் புலவி நீக்க மனையிடை இருகால் செல்லத்***
***தூதுகொள் பவராம் நம்மைத் தொழும்புகொண் டுரிமை கொள்வார். 42***

(இ - ள்.) சிவந்த சடையினையுடைய சிவபெருமானைத் திருச்செவியில் தரித்த குண்டலங்கள் வீசுகின்ற கிரணங்களின் பிரகாசமானது இருளைப் பற்றற வொழிக்கப் பரவை நாச்சியார் தம்மனத்திற் கொண்டிருந்த பிணக்கைத் தீர்க்கும் பொருட்டு அவரது திருமாளிகைக்கு இரண்டு தரம் போகும்படி தூதாகக் கொண்டருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளே நம்மை அடிமை கொண்டு நமக்கு உரிமையாகக் கொள்ளவல்லவர்; அதனால், தீமை பொருந்திய வினையின் வழியில் பிறக்கவரமாட்டோம். - எ- று.

**ஆனாயநாயனார் புராணம் முற்றிற்று.**



# 21. மூர்த்தி நாயனார் புராணம்

*சீர்மன்னு செல்வக் குடிமல்கு சிறப்பின் ஓங்கும்*
*கார்மன்னு சென்னிக் கதிர்மாமணி மாடவைப்பு*
*நார்மன்னு சிந்தைப் பலநற்றுறை மாந்தர் போற்றும்*
*பார்மன்னு தொன்மைப் புகழ்பூண்டது பாண்டி நாடு.* 1

(இ - ள்.) சீரினையுடைய ஐசுவரியமிகுந்த குடிகள் நிறைந் திருத்தலால் சிறந்தோங்கி மேகங்கள் தாங்கிய சிகரத்தையும், ஒளிவீசுகின்ற மாணிக்கங்களிழைத்த மாளிகைகளையுமுடைய நாடாவது, அன்பு பொருந்திய உள்ளத்தினையுடைய பல நன்னெறிகளில் ஒழுகுகின்ற மனிதர்களால் துதிக்கப்பட்ட உலகத்தில் நிறைந்த பழமையான புகழைப் பெற்றதாகிய பாண்டி நாடாம். - எ- று.

*சாயுந்தளிர் வல்லி மருங்குல் நெடுந்த டங்கண்*
*வேயும்படு தோளியர் பண்படும் இன்சொற் செய்ய*
*வாயும்படும்; நீள்கரை மண்பொருந் தண்பொ ருந்தம்*
*பாயுங்கட லும்படும்; நீர்மை பணித்த முத்தம்.* 2

(இ - ள்.) தளிர்கள் சாய்ந்திருக்கின்ற கொடி போன்ற இடையையும், நீண்டவிசாலமாகிய கண்களையும், மூங்கில் போன்ற தோள்களையுமுடைய மாதர்களினது பண்ணமைந்த இனியசொற்களையுடைய சிவந்த வாயிலும், நீண்டகரையி லுள்ள மண்ணை அலையாகிய கைகளால் மோதுகின்ற குளிர்ந்த தாம்பிரபர்ணி நதியானது பாய்கின்ற கடலிலும் நிறமுள்ள முத்துக்கள் உண்டாயிருக்கும். - எ- று.

*மொய்வைத்த வண்டின் செறிசூழல் முரன்ற சந்தின்*
*மைவைத்த சோலை மலயந்தர வந்த மந்த*
*மெய்வைத்த காலுந் தரும்; ஞாலம் அளந்த மேன்மைத்*
*தெய்வத்தமி ழும்தருஞ் செவ்வி மணஞ்செ யீரம்.* 3

(இ - ள்.) வண்டின் கூட்டங்கள் சூழ்ந்து ஒலிக்கின்ற மேகங்கள் தவழும் சந்தனச் சோலையையுடைய பொதியமலை யினின்றும் வந்த சிறு தென்றற் காற்றும், உலகமுழுமையும் பரந்த மேன்மையையுடைய தெய்வத்தன்மை பொருந்தியதமிழும் மணத்தோடு குளிர்ச்சியையுங் கொடுக்கும். - எ- று.

***சூழுமி தழ்ப்பங்கய மாகஅத் தோட்டின் மேலாள்***
***தாழ்வின்றி என்றும் தனிவாழ்வதத் தையல் ஒப்பார்***
***யாழின் மொழியிற் குழலின் னிசையுஞ்சு ரும்பும்***
***வாழும் நகரம் மதுராபுரி என்ப தாகும். 4***

(இ - ள்.) இதழ்கள் பொருந்திய தாமரை மலராக எண்ணி அந்த மலரில் வாசஞ் செய்கின்ற இலக்குமியானவள் குறைவின்றி எக்காலத்திலும் தனிமையாக வாழ்ந்து கொண்டிருப்பது; அந்த இலக்குமியையொத்த மாதர்களினுடைய இனிமையாகிய மொழியின் வீணையினிசையும், கூந்தலில் இனிய இசையோடு வண்டுகளும் வாழ்கின்ற நகரமாகிய மதுராபுரியென்று சொல்லப்படுவதாகும். - எ- று.

***சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய அங்கண் மூதூர்***
***நூல்பா யிடத்தும் உள; நோன்றலை மேதி பாயப்***
***பால்பாய் முலைதோய் மதுப்பங்கயம் பாய எங்குஞ்***
***சேல்பாய் தடத்தும் உள; செய்யுள்மிக் கேறு சங்கம். 5***

(இ - ள்.) பெருமை பொருந்திய இயல் - இசை - நாடகம் என்னும் மூன்று தமிழுந் தங்கிய இடமகன்ற பழமையாகிய அம்மதுரா புரியில் சாஸ்திரப் பயிற்சி செய்யுமிடத்திலும் செய்யுள்களான் மிகவும் உயர்ந்தகல்விச் சங்கங்களுள்ளன; பெரியதலையினையுடைய எருமைக்கடாக்கள் பாய்ந்து அவைகளின் முலையிலிருந்து ஒழுகுகின்ற பாலானது தேனையுடைய தாமரை மலர்களில் பாய எவ்விடத்திலும் கெண்டைமீன்கள் பாய்கின்ற தடாகங்களிலும் வயல்களில் மிகுதியாகத்தவழுகின்ற சங்குகள் உள்ளன. - எ- று.

***மந்தாநிலம் வந்தசை பந்தரின் மாட முன்றில்***
***பந்தாடிய மங்கையர் பங்கயச் செங்கை தாங்கும்***
***சந்தார்முலை மேலன; தாழ்குழை வாள்மு கப்பொற்***
***செந்தாமரை மேலன; நித்திலஞ் சேர்ந்த கோவை. 6***

(இ - ள்.) சிறு தென்றற் காற்றானது வந்து உலாவுகின்ற பந்தலையுடைய வீடுகளின் முற்றங்களில் பந்தடித்து விளையாடு கின்ற மாதர்களினுடைய தாமரைமலர் போன்ற சிவந்த கைகளால் தாங்கப்பட்ட சந்தனமணிந்த ஸ்தனங்களின்மேல் முத்து மாலைகளிருக்கின்றன; தாழ்ந்தகுழையோடு கூடிய ஒளி பொருந்திய அழகிய தாமரை மலர் போன்ற முகங்களின்மேல் முத்துப் போலும் வேர்வையினது கோவைகளிருக்கின்றன. எ-று.

***மும்மைப் புவனங்களின் மிக்கதன் றேஅம் மூதூர்***
***மெய்மைப் பொருளாந் தமிழ்நூலின் விளங்கு வாய்மைச்***
***செம்மைப் பொருளுந் தருவார்திரு வால வாயில்***
***எம்மைப் பவந்தீர்ப் பவர்சங்கம் இருந்த தென்றால். 7***

(இ - ள்.) உண்மைப் பொருளையுடைய தமிழ் நூல்களில் (அவற்றின் பொருளைக் குறித்து மாறுகொண்டெழுந்த புலவர் களின் சந்தேகம் நீங்கும்படி) விளங்குகின்ற மெய்ம்மையாகிய சிறந்த பொருளை அருளிச் செய்கின்றவராய்த் திருவாலவாயின் கண் வீற்றிருந்தருளி அடியேங்களைப் பிறவித் துன்பத்தினின் றும் நீக்கியருளுகின்றவராகிய சோமசுந்தரப் பெருமான் (தலைமைப் புலவராயிருந்து ஏற்படுத்திய) செந்தமிழ்ச்சங்கம் மிருக்கப்பெற்றதென்றால், பழமை பொருந்திய அம்மதுரை மாநகரமானது சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்று உலகங்களிலும் சிறந்ததேயாகும். - எ- று.

***அப்பொற் பதிவாழ் வணிகக்குலத் தான்ற தொன்மைச்***
***செப்பத் தகுசீர்க் குடி செய்தவஞ் செய்ய வந்தார்***
***எப்பற் றினையும்அறுத்(து) ஏறுகைத் தேறு வார்தான்***
***மெய்ப்பற் றெனப்பற்றி விடாத விருப்பின் மிக்கார். 8***

(இ - ள்.) அந்த அழகு பொருந்திய மதுரை மாநகரத்தில் வாழ்கின்ற வணிகர்களுடைய குலத்தில் பரம்பரையாகச் செல்வம் பொருந்தி பழமையான அறிஞர்களால் புகழத்தக்க சிறப்பினையுடைய ஒரு குடும்பமானது செய்த தவத்தினால் அவதரித்தவர்; எல்லா ஆசைகளையும் ஒழித்து, ரிஷபத்தை வாகனமாகச் செலுத்துகின்ற சிவபெருமானது திருவடிகளையே உண்மையாகிய ஆதரவாகப் பிடித்து அவ்வன்பினின்றும் நீங்காத விருப்பத்தில் சிறந்தவர். - எ- று.

***நாளும்பெருங் காதல் நயப்புறும் வேட்கை யாலே***
***கேளும் துணையும் முதற்கேடில் பதங்க ளெல்லாம்***
***ஆளும்பெரு மான்அடித் தாமரை அல்ல தில்லார்***
***மூளும்பெரு கன்பெனும் மூர்த்தியார் மூர்த்தி யார்தாம். 9***

(இ - ள்.) நாள் தோறும் மிகுந்த ஆசையானது அதிகரித் தெழுகின்ற அன்பினாலே பந்துக்களும் துணைவர்களும் முதலாகிய குறைவற்ற எல்லாப் பேறுகளும் தம்மை யடிமை கொண்டருளிய சிவபெருமானது திருவடித்தாமரையே

யல்லாமல் வேறொன்றையும் கொள்ளாதவர்; (அவர்யாரென் றால்) மிகுந்த பேரன்பே திருவுருவமாகக் கொண்ட மூர்த்தி நாயனார். - எ- று.

***அந்திப் பிறைசெஞ் சடைமேலணி ஆல வாயில்***
***எந்தைக் கணிசந் தனக்காப்பிட என்றும் முட்டா***
***அந்தச் செயலின் நிலைநின் றடியா ருவப்பச்***
***சிந்தைக் கினிதாய திருப்பணி செய்யும் நாளில்.*** ***10***

(இ - ள்.) மாலைக்காலத்தில் தோன்றுகின்ற மூன்றாம் பிறையைச் சிவந்த சடையின்மேல் தரித்த திருவாலவாயில் வீற்றிருந்தருளும் எமது பெருமானாகிய சுந்தரேசருக்குச் சந்தனக் காப்பணிகின்ற திருப்பணியானது இடையில் என்றைக்கும் முட்டுப்பாடு வராமல் செய்கின்ற அத்திருத்தொண்டின் நிலைமையில் நின்று, அடியார்கள் மனமகிழும்படி தமது திருவுள்ளத்திற்கு இனிமையாகிய அத்திருப்பணியைச் செய்து கொண்டு வரும் நாள்களில். - எ- று.

***கானக் கடிசூழ் வடுகக்கரு நாடர் காவல்***
***மானப் படைமன்னன் வலிந்து நிலங்கொள் வானாய்***
***யானைக் குதிரைக் கருவிப்படை வீரர்திண்டேர்***
***சேனைக் கடலுங் கொடுதென் றிசைநோக்கி வந்தான்.*** ***11***

(இ - ள்.) காட்டரண்சூழ்ந்த வடுகச்சாதியானாகிய கரு நாடதேசத்தாரையாளுகின்ற வலிமை பொருந்திய ஆயுதத்தை யுடைய ஒரு அரசன் வலியவே அன்னியதேசத்தரசர்களைப் பிடித்து அவர்கள் இராச்சியத்தைக் கைக் கொள்ளம் பொருட்டு யானைகளும், குதிரைகளும், ஆயுதங்களைப் பிடித்த படைவீரர்களும், வலிமை பொருந்திய தேர்களுமாகிய சமுத்திரம் போன்ற நால்வகைச் சேனைகளையும் அழைத்துக் கொண்டு தென் திசையை நோக்கிப் போர்செய்யும் படிவந்தான். எ- று.

***வந்துற்ற பெரும்படை மண்புதை யப்ப ரப்பிச்***
***சத்நப்பொதி யில்தமிழ் நாடுடை மன்னன்வீரம்***
***சிந்தச்செரு வென்றுதன் னாணை செலுத்து மாற்றால்***
***கந்தப்பொழில் சூழ்மது ராபுரி காவல் கொண்டான்.*** ***12***

(இ - ள்.) கருநாடதேசத்தரசன் தன்னோடு வந்த பெரிய சேனைகளை அந்நாடு முழுமையும் பரவச் செய்து, சந்தன

மரங்களையுடைய பொதியமலையிற் பிறந்த தமிழ் வழங்குகின்ற நாட்டையாளுகின்ற பாண்டியனுடைய வீரமானது குன்றும் படி யுத்தஞ் செய்து வென்று, அந்நாட்டில் தனது ஆக்கினையைச் செலுத்தும்படி மணம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த மதுராபுரியின் ஆளுகையைக் கைக் கொண்டான். - எ- று.

***வல்லாண்மையின் வண்டமிழ் நாடு வளம்ப படுத்தி***
***நில்லாநிலை ஒன்றிய இன்மையின் நீண்ட மேரு***
***வில்லான் அடி மைத்திற மேவிய நீற்றின் சார்பு***
***செல்லாதரு தந்தர் திறத்தினிற் சிந்தை தாழ்ந்தான்.*** 13

(இ - ள்.) வலிய ஆண்மையினால் சிறந்த பாண்டி நாட்டை வளஞ் செய்து நில்லாத நிலைமையோடு கூடிய வறுமையினால் நீண்ட மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமானுக்கு அடிமைத் திறஞ் செய்தற்கு அமைந்த திருநீறு தரித்தலாகிய தொழிலின் சார்பில் அவ்வரசன் செல்லாமல், சமணர்களுடைய போதனைக்குட்பட்டு அவர்கள் மதத்தில் பிரவேசிக்க எண்ணங் கொண்டான். - எ- று.

***தாழுஞ்சமண் கையர் தவத்தைமெய் யென்று சார்ந்து***
***வீழுங்கொடி யோன்அது வன்றியும் வெய்ய முன்னைச்***
***சூழும்வினை யால்அர வஞ்சுடர்த் திங்க ளோடும்***
***வாழுஞ்சடை யான்அடி யாரையும் வன்மை செய்வான்.*** 14

(இ - ள்.) தாழ்வு பொருந்திய சமணர்களாகிய வஞ்சகர் களின் தவத்தை மெய்யென்று நம்பி, அந்த மதத்தில் விழுகின்ற கொடியவனாகிய அக்கரு நாடதேசத்தரசன் தான் அம்மதத்தில் சேர்ந்த தல்லாமலும், முற்பிறப்பிற் செய்த கொடிய தீவினை யினால், பாம்பானது சந்திரனோடு வாழுகின்ற சடைமுடியை யுடைய சிவபெருமானது அடியார்களையும் வருத்தப்படுத்து வான். - எ- று.

***செக்கர்ச்சடை யார்விடை யார்திரு வால வாயுள்***
***முக்கட்பர னார்திருத் தொண்டரை மூர்த்தி யாரை***
***மைக்கற்புரை நெஞ்சுடை வஞ்சகன் வெஞ்ச மண்பேர்***
***எக்கர்க்குட னாகஇகழ்ந்தன செய்ய எண்ணி.*** 15

(இ - ள்.) செவ்வானம் போலும் சிவந்த சடையினையுடைய வரும், ரிஷபவாகனத்தையுடையவரும், மூன்று கண்களை யுடையவருமாகிய திருவாலவாயில் எழுந்தருளிய சிவபெருமா னது அடியவராகிய மூர்த்தி நாயனாரைக் கருங்கல்லையொத்த நெஞ்சினையுடைய வஞ்சகனாகிய அவ்வரசன் கொடிய

சமணர்களுடைய கூட்டத்துக்கு உட்படுத்தும் பொருட்டு அவருக்கு இழிவாகிய கொடுஞ் செய்கைகளைச் செய்ய நினைத்து - எ- று.

***அந்தம்இல வாமிறை செய்யவும் அன்ப னார்தாம்***
***முந்தைம்முறை மைப்பணி முட்டலர் செய்து வந்தார்***
***தந்தம் பெருமைக் களவாகிய சார்பில் நிற்கும்***
***எந்தம் பெருமக் களையாவர் தடுக்க வல்லார்?*** **16**

(இ - ள்.) (அவ்வரசன்) அளவில்லாத துன்பங்களைச் செய்யவும் அடியவராகிய அம்மூர்த்தி நாயனார் தாம் முன்பு சிவபெருமானுக்குச் செய்து வந்த சந்தனக்காப்புத்திருப்பணியில் சிறிதும் குறைவுவராமல் செய்து கொண்டு வந்தார்; தங்கள் தங்கள் பெருமைக்கு ஏற்ற அளவாகிய திருத்தொண்டின் சார்பில் நிற்கின்ற எமது பெரியோர்களைத் தடுக்கல்லவர்கள் யாவர் (ஒருவருமில்லை.) - எ - று!.

***எள்ளுஞ்செயல் வன்மைகள் எல்லையில் லாதசெய்யத்***
***தள்ளுஞ்செய லில்லவர் சந்தனக் காப்புத் தேடிக்***
***கொள்ளுந்துறை யும்அடைத் தான்கொடுங் கோன்மை செய்வான்***
***தெள்ளும்புனல் வேணியர்க் கன்பருஞ் சிந்தை நொந்து.*** **17**

(இ - ள்.) சமண சமயத்தில் புகுந்து கொடுங்கோல் செலுத்து கின்ற அவ்வரசனானவன் எல்லாராலும் இகழத்தக்க கொடிய செய்கைகளை மூர்த்தி நாயனாருக்கு அளவில்லாதனவாகச் செய்ய, அதனால் தாம் செய்யும் திருப்பணியில் குறைவுபடாதவ ராகிய அந்நாயனார் சந்தனக்காப்புக்குரிய சந்தனக் கட்டை களைத் தேடி வாங்குகின்ற இடங்களிலும் அவர்க்குக் கொடுக்க வொட்டாமல் தடுத்துவிட்டான்; (அவன் அப்படிச் செய்தபடி யால்) தெளிவாகிய கங்காநதியைத் தரித்த சடையினையுடைய சிவபெருமானுக்கு அன்பராகிய அம்மூர்த்தி நாயனாரும் மனவருத்தமடைந்து - எ - று.

***புன்மைச் செயல்வல் அமண்குண்டரிற் போது போக்கும்,***
***வன்மைக் கொடும்பா தகன்மாய்த்திட வாய்மை வேத***
***தன்மைத் திருநீற் றுயர்நன்னெறி தாங்கு மேன்மைத்***
***தன்மைப் புவிமன் னரைச்சார்வதென்(று)?" என்று சார்வார்.*** **18**

(இ - ள்.) இழிவாகிய செயலில் வல்லவர்களாகிய கொடிய சமணர்கள் கூட்டத்திற் சேர்ந்து வீணாகப் பொழுது போக்கு

கின்ற வலிய கொடும்பாதகனாகிய இவ்வரசன் இறந்து, உண்மை யாகிய வேதத்தில் சொல்லியபடி நன்மை பொருந்திய திருநீற்றைத் தரிக்கின்ற உயர்ந்த நன்மார்க்கத்தை அனுசரிக்கும் பெருங்குணத்தையுடைய அரசரை இந்நாடு எப்பொழுது அடையுமென்று தம் முள்ளத்தில் நினைத்து விசனப்படுவார். - எ- று.

***காய்வுற்ற செற்றங்கொடு கண்டகன் காப்ப வுஞ்சென்(று)***
***ஆய்வுற்ற கொட்பிற் பகலெல்லை அடங்க நாடி***
***ஏய்வுற்ற நற்சந் தனமெங்கும் பெறாது சிந்தை***
***சாய்வுற்றிட வந்தனர் தம்பிரான் கோயில் தன்னில்.*** *19*

(இ - ள்.) (இவர் செய்துவரும் சந்தனக்காப்புத் திருப் பணிக்குத் தடையுண்டாகும்படி) கோபத்தோடு பகைமையையுங் கொண்டு வஞ்சகனாகிய அவ்வரசன் சந்தனக்கட்டையை யாவரும் கொடுக்காமல் தடை செய்யவும், மூர்த்தி நாயனார் பகற் கால முழுமையும் பல விடங்களிலும் சென்று அலைந்து தேடித் தகுதியாகிய சந்தனக்கட்டை எவ்விடத்திலும் கிடைக்கப் பெறாமல், மனமானது மிகவும் தளர்ச்சியையடைய சொக்கலிங்கப் பெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலுக்கு வந்தார். எ - று.

***நட்டம்புரி வாரணி நற்றிரு மெய்ப்பூச் சின்று***
***முட்டும்பரி சாயினுந் தேய்க்குங்கை முட்டா தென்று***
***வட்டந்தமிழ் பாறையின் வைத்து முழங்கை தேய்த்தார்***
***கட்டும்புறத் தோல்நரம் பென்பு கரைந்து தேய.*** *20*

(இ - ள்.) திருநடனஞ் செய்தருளுகின்ற சிவபெருமான் திருமேனியில் தரிக்கத்தக்க நல்ல சந்தனம் இன்றைக்குக் கிடையாமற் போயினும் சந்தனக்கட்டையைத் தேய்க்கின்ற கைக்கு ஒரு முட்டுப்பாடும் இல்லையென்று, வட்டமாக விளங்குகின்ற சந்தனக்கல்லின்மேல் தமது முழங்கையை வைத்துத்தேகத்துக்கு உறுதியாகக் கட்டியிருக்கின்ற புறத்திலுள்ள தோலும், அதனுள்ளிருக்கும் நரம்பும், எலும்பும் கரைந்து குறையும் படி தேய்த்தார். - எ- று.

***கல்லின்புறத் தேய்த்த முழங்கை கலுழ்ந்து சோரி***
***செல்லும்பரப் பெங்கணும் என்பு திறந்து மூளை***
***புல்லும்படி கண்டு பொறுத்திலர் தம்பி ரானார்;***
***அல்லின்கண் எழுந்த(து) உவந்தருள் செய்த வாக்கு.*** *21*

(இ - ள்.) (மூர்த்தி நாயனார்) சந்தனக்கல்லினிடத்தில் வைத்து தேய்த்த முழங்கையானது உதிரத்தைப் பெருக்கிச் செல்லு மிடங்களிலெல்லாம் எலும்பு வெளிப்பட்டு அதனுள்ளிருக்கும் மூளை வெளியில் ஒழுகுவதைப் பார்த்து, சொக்கலிங்கப் பெருமான் மனம் பொறுக்காதவராய் அவரைக் காப்பாற்றும் பொருட்டுத் திருவுள்ளங்களித்து அருளிச் செய்த ஒரு அசரீரி வாக்கானது அவ்விராத்திரியில் உண்டாயிற்று. - எ- று.

***"அன்பின்துணி வால்இது செய்திடல்; ஐய! உன்பால்***
***வன்புன்கண் விளைத்தவன் கொண்டமண் எல்லாங் கொண்டு***
***முன்பின்னல் புகுந்தன முற்றவும் நீத்துக் காத்துப்***
***பின்புன் பணிசெய்துநம் பேருல கெய்து"கென்ன.*** 22

(இ - ள்.) அன்பனே! பத்தியினது உறுதிப்பாட்டினால் இப்படிப்பட்ட செய்கையைச் செய்யாதிருக்கக்கடவாய்; உனக்கு மிகுந்த துன்பத்தைச் செய்த அக் கொடுங் கோலரசன் பெற்றிருக்கின்ற இராச்சியமுழுமையும் நீயே கைக்கொண்டு, முன்பு அவனால் உண்டாகிய கொடுமை களனைத்தையும் ஒழித்து, செங்கோல் செலுத்தி, நீ செய்து வருகின்ற சந்தனக்காப்புத் திருப்பணியைச் செய்து, பின்பு நமது சிவலோகத்தை யடைவாயாகவென்று - எ- று.

***இவ்வண்ணம் எழுந்தது கேட்டெழுந் தஞ்சி முன்பு***
***செய்வண்ணம் ஒழிந்திடத் தேய்ந்தபுண் ஊறு தீர்ந்து***
***கைவண்ணம் நிரம்பின வாசமெல் லாங்க லந்து***
***மொய்வண்ண விளங்கொளி எய்தினர் மூர்த்தி யார்தாம்.*** 23

(இ - ள்.) இவ்விதமாக எழுந்த திருவாக்கினைக் கேட்டு அச்சமுற்று எழுந்து, தாம் முன்பு செய்யும் முழங்கையைத் தேய்க்கும் தொழிலினின்றும் நீங்க, உடனே அம் முழங்கையானது தேய்ந்ததனாலுண்டாகிய காயம் ஒழிந்து அக்கையின் அழகனைத்தும் ஒரு குறைவுமின்றி வளர்ந்தன; இரத்த நாற்றம் போய் நல்ல மணங்களெல்லாங் கலந்து மிகுந்த அழகைத் தருகின்ற காந்தியைத்தேகத்தில் அடைந்தார் மூர்த்தி நாயனார். எ- று.

***அந்நாள்இர வின்கண் அமண்புகல் சார்ந்து வாழும்***
***மன்னாகிய போர்வடு கக்கரு நாடர் மன்னன்***
***தன்னாளும் முடிந்தது சங்கரன் சார்பி லோர்க்கு***
***மின்னாமென் நீடிய மெய்ந்நிலை யாமை வெல்ல.*** 24

(இ - ள்.) அன்று இராத்திரியில் சமணர்களுடைய மதத்தில் பிவேசித்துக் கொடுங்கோல் செலுத்தி வாழ்கின்ற அரசனாகிய வடுகக் கருநாடராசனுடைய வாழ்நாளும் முடிந்தது; சிவபெருமானுடைய திருவருளில்லாதவர்களுக்கு நீடித்த பூரணாயுளையுடைய தேகமும் பாவமிகுதியால் மின்னலைப் போல நிலையாமல் அழிந்துவிடுமென்பதை யாவர்க்கும் புலப்படுத்துங் காரணமாக. - எ- று.

***இவ்வா றுலகத்தின் இறப்ப உயர்ந்த நல்லோர்***
***மெய்வா ழுலகத்து விரைந்தணை வார்க ளேபோல்***
***அவ்வா றரனார் அடியாரை அலைத்த தீயோன்***
***வெவ்வாய் நிரயத் திடைவீழ விரைந்து வீந்தான். 25***

(இ - ள்.) இந்நிலவுலகத்தில் மேன்மை பொருந்திய நல்லோர்கள் தேகவியோகமடைந்தால் மெய்ப் பொருளாகிய சிவபெருமான் வாழ்ந்தருளுகின்ற சிவலோகத்தில் எவ்வாறு விரைந்து சேர்வார்களோ, அதுபோல, சிவனடியவராகிய மூர்த்தி நாயனாரை மேற் சொல்லிய விதமாக வருத்தப்படுத்திய கொடியவனாகிய அவ்வரசன் கொடியவாயினையுடைய நரகத்தில் வீழ்ந்து வருந்தும் படி விரைந்து இறந்தாள். - எ- று.

***முழுதும்பழு தேபுரி மூர்க்கன் உலந்த போதின்***
***எழுதுங்கொடி போல்பவ ருட்பட ஏங்கு சுற்றம்***
***முழுதும்புலவர் வுற்றது; மற்றவன் அன்ன மாலைப்***
***பொழுதும்புலர் வுற்றது; செங்கதிர் மீது போத. 26***

(இ - ள்.) சிவனடியார்களுக்கு முழுமையும் துன்பத்தையே செய்து கொண்டிருந்த மூர்க்கனாகிய அவ்வரசன் இறந்த பொழுது, சித்திரமெழுதுங் கொடிபோன்றவராகிய அவன் மனைவி மார்களோடு எவ்விடத்திலுமுள்ள உறவினரெல்லாம் விசனப்பட்டார்கள்; சிவந்த கிரணங்களையுடைய சூரியனுதய மாக அவ்வரசனுடைய மனதையொத்த இராக்காலமும் விடிந்தது. - எ- று.

***அவ்வேலையில் அங்கண் அமைச்சர்கள் கூடித் தங்கள்***
***கைவேறுகொள் ஈம அருங்கடன் காலை முற்றி***
***வைவேலன் றன்குல மைந்தரும் இன்மை யாலே***
***செய்வேறுவி னைத்திறஞ் சிந்தனை செய்து தேர்வார். 27***

(இ - ள்.) அப்பொழுது அந்தப் பட்டணத்திலுள்ள மந்திரிகள் ஒன்றாகக் கூடித் தங்கள் ஒழுக்கத்திற்கு வேறுவகை யாகச் செய்கின்ற தகனமுதலாகிய கடன்களைக் காலைப் பொழுதே செய்து முடித்து, கூர்மை பொருந்திய வேலாயுதத் தைப் பிடித்த அவ்வரசனது குலத்துக்குரிய புதல்வர்களும் இல்லாதபடியினால் தாம் செய்யத்தகுந்த வேறாகிய ஒரு செயலை மனதில் சிந்தித்துத் தெளிவாராயினார். - எ- று.

***"தாழுஞ்செய லின்றொரு மன்னவன் தாங்க வேண்டும்;***
***சூழும்குடி யும்முத லாயின கொள்கைத் தேனும்***
***சூழும்படை மன்னவன் தோளிணைக் காவ லின்றி***
***வாழுந்தகைத் தன்றிந்த வையகம்" என்று சொன்னார்.*** ***28***

(இ - ள்.) பயிர், குடி முதலிய பலவகைச் சிறப்புக்களை யுடையதாயிருந்தாலும் தன்னைச் சூழ்ந்துள்ள சேனைகளை யுடைய அரசனது இரண்டு புயங்களாலும் காக்குங்காவலில் லாமல் இவ்வுலகமானது வாழ்வடையும் தகுதிகயையுடைய தல்ல; (அதனால்) இராசநீதியிற் குறைவுபடாமல் ஒரு அரசன் உலகத்தை யாளுகை செய்ய வேண்டுமென்று சொன்னார்கள். - எ- று.

***"பன்முறை உயிர்கள் எல்லாம் பாலித்து ஞாலங் காப்பான்***
***தன்னெடுங் குடைக்கீழ்த் தத்தம் நெறிகளில் சரித்து வாழும்***
***மன்னரை இன்றி வைகும் மண்ணுல கெண்ணுங் காலை***
***இன்னுயிர் இன்றி வாழும் யாக்கையை ஒக்கும்" என்பார்.*** ***29***

(இ - ள்.) பலவகைப்பட்ட உயிர்களையெல்லாம் பரிபாலித்து உலகத்தையாளும்படி தனது நெடிய வெண் கொற்றக் குடையின் கீழ் நான்கு வருணத்தாரும் தங்கள் தங்களுக்குரிய தருமநெறிகளில் தவறாமல் நடக்கும் படிச் செய்து வாழ்கின்ற அரசர்களில்லாமல் தங்கிய இப்பூவுலகமானது ஆலோசிக்குமிடத்தில் இனிய உயிரில்லாமல் வாழ்கின்ற உடம்பையொக்குமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். எ-று

***இவ்வகை பலவும் எண்ணி "இங்கினி அரசர் இல்லை;***
***செய்வகை இதுவே" என்று தெளிபவர் "சிறப்பின் மிக்க***
***மைவரை அனைய வேழம் கண்கட்டி விட்டால் மற்றக்,***
***கைவரை கைக்கொண் டார்மண் காவல்கைக் கொள்வார்" என்று. 30***

(இ - ள்.) இப்படிப்பலவற்றையும் தாங்கள் யோசித்து, இவ்விடத்தில் இனிபட்டத்துக்குரிய அரசர்கள் ஒருவருமில்லை ஆதலால் செய்ய வேண்டியது இதுவேயென்று தெளிந்தவர் களாகிய அம்மந்திரி மார்கள் அலங்கரிக்கப்பட்ட கரியமலையை யொத்த யானையைக் கண்ணைக்கட்டி வீதியில் விட்டால் அந்த யானை எவரையெடுத்துக் கொள்ளுகிறதோ, அவரே இந்த இராச்சியத்தைத அரசாட்சி செய்வதற்கு உரியவரென்று நினைத்து. - எ- று.

***செம்மாண்வினை அர்ச்சனை நூன்முறை செய்து "தோளால்***
***இம்மாநிலம் ஏந்தஓர் ஏந்தலை ஏந்து"கென்று***
***பெய்ம்மாமுகில் போல்மதம் பாய்பெரு கோடை நெற்றிக்***
***மைக்மாவை நறுந்துகில் கொண்டுகண் கட்டி விட்டார்.*** 31

(இ - ள்.) செவ்விய மாட்சிமையையுடைய அர்ச்சனை முதலாகிய செய்கைகளை சாஸ்திரவிதிப்படியே யானைக்குச் செய்து, தோளினால் இந்தப் பெரிய நிலவுலகத்தைத் தாங்கும்படி ஓர் அரசனை நீ எடுத்து உன் முதுகில் தாங்கென்று, நீரைப் பெய்யாநின்ற பெரியமேகத்தைப் போல மதம் பாய்ந்து பெருகு கின்ற பட்டத்தையணிந்த நெற்றியையுடைய யானையை நல்ல வஸ்திரங் கொண்டு கண்ணைக் கட்டிவிட்டார்கள். - எ- று.

***கண்கட்டி விடுங்களி யானைஅக் காவல் மூதூர்***
***மண்கொட்புற வீதி மருங்கு திரிந்து போகித்***
***திண்பொற்றட மாமதில் சூழ்திரு வால வாயின்***
***விண்பிற்பட ஓங்கிய கோபுரம் முன்பு மேவி.*** 32

(இ - ள்.) வஸ்திரத்தினால் கண்ணைக் கட்டி விடப்பட்ட மதச் செருக்கினையுடைய பட்டவர்த்தனயானையானது காவலையுடைய பழமையாகிய அந்த மதுரை மாநகரத்தில் தூசுகள் மேலேகிளம்பிச்சுழல, வீதிகளில் திரிந்து கொண்டு போய், வலியபொன்மயமாகிய மிகவும் உயர்ந்த மதில்கள் சூழ்ந்த திருவாலவாயென்னும் ஆலயத்தின் விண்ணுலகமும் பின்னிடும் படியாக உயர்ந்த முதற் கோபுரத்திற்கு முன்னே போய். - எ- று.

***நீங்கும்இர வின்கண் நிகழ்ந்தது கண்ட தொண்டர்***
***"ஈங்கெம்பெரு மான்அரு ளாம்எனில் இந்த வையம்***
***தாங்கும்செயல் பூண்பன்"என் றுள்ள[illegible]ர்வு நீங்கிப்***
***பூங்கொன்றை மலைந்தவர் கோயிற் புறத்து நிற்ப.*** 33

(இ - ள்.) நீங்கிய முதல் நாளிரவில் தமக்காக அசரீரி வாக்குண்டானதை யறிந்த அன்பராகிய மூர்த்திநாயனார் இவ்விடத்தில் எமது பெருமானாகிய சொக்கலிங்க மூர்த்தி யினது திருவருளானது இப்படியிருந்ததென்றால், இந்த வுலகத்தையாளுதற்குரிய அரசுரிமையை நான் பெற்றுக் கொள்வேனென்று, தம்மனதிலுள்ள துயரம் ஒழிந்து அழகிய கொன்றைமலர்மாலையைத் தரித்த சொக்கலிங்கப் பெருமானது திருக்கோயிலின் புறத்தில்நிற்க. - எ- று.

***வேழத் தரசங்கண் விரைந்து நடந்து சென்று***
***வாழ்வுற் றுலகஞ்செய் தவத்தினின் வள்ள லாரைச்***
***சூழ்பொற் சுடர்மாமணி மாநிலத் தோய முன்பு***
***தாழ்வுற் றெடுத்துப் பிடர்மீது தரித்த தன்றே.*** 34

(இ - ள்.) பட்டத்துயானையானது அவ்விடத்தில் சீக்கிரமாக நடந்து போய், வாழ்வையடையும்படி உலகத்தார் செய்த தபோபலத்தினால் மூர்த்தி நாயனாரைத்தன் கழுத்திற் சூழ்ந்திருக்கின்ற ஒளி பொருந்திய பொன்மயமாகிய மணிகள் பெரிய பூமியில் படும்படி அவர் முன்பாகத் தாழ்ந்து எடுத்துத் தன் முதுகின்மேல் வைத்துக் கொண்டது. - எ- று.

***மாதங்கம் எருத்தினில் வைத்தவர் தம்மைக் காணா***
***ஏதங்கெட எண்ணிய திண்மை அமைச்சர் எல்லாம்***
***பாதங்களின் மீது பணிந்தெழுந் தார்கள் அப்போ(து)***
***ஓதங்கிளர் வேலையை ஒத்தொலி மிக்க தவ்வூர்.*** 35

(இ - ள்.) பட்டத்துயானையானது தன் முதுகின்மேல் எடுத்துவைக்கப் பெற்றவராகிய மூர்த்தி நாயனாரைக்கண்டு, உலகத்தில் தீங்கு நீங்கும்படி நினைத்த சாமர்த்தியத்தையுடைய மந்திரிகளெல்லாம் அவருடைய திருவடிகளில் வணங்கியெழுந் தார்கள்; அப்பொழுது பிரவாகித் தெழுகின்ற சமுத்திரத்தை யொத்து சந்தோஷத்தினாலுண்டாகிய ஆரவாரமானது அவ்வூரில் மிகுதியாக உண்டாயிற்று.

***சங்கங்கள் முரன்றன; தாரைகள் பேரி யோடும்***
***எங்கெங்கும் இயம்பின பல்லியம்; எல்லை யில்ல***
***அங்கங்கு மலிந்தன வாழ்த்தொலி; அம்பொற் கொம்பின்***
***பங்கன்அரு ளால்உலக காள்பவர் பாங்கர் எங்கும்.*** 36

(இ - ள்.) அழகிய பொற்கொம்பு போன்ற உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சொக்கலிங்கப் பெருமானது திருவருளினால் உலகத்தை அரசாளப்பெற்றவராகிய மூர்த்திநாயனாருடைய நான்கு பக்கங்களிலும், தாரைகள் பேரிகைகளோடு சங்கவாத்தியங்களும் ஒலித்தன; அளவில்லாதனவாகிய பல வாத்தியங்கள் எவ்வெவ்விடங்களிலும் முழங்கின; அவ்வவ்விடங்களிலும் வாழ்த்துதலாலுண்டாகிய முழக்கங்கள் நிறைந்தன. எ-று

***வெங்கட்களிற் றின்மிசை நின்றும் இழிச்சி வேரித்***
***தொங்கற்சுடர் மாலைகள் சூழ்முடி சூடு சாலை***
***அங்கட்கொடு புக்கரி யாசனத் தேற்றி ஒற்றைத்***
***திங்கட்குடைக் கீழ்உரி மைச்செயல் சூழ்ந்து செய்வார். 37***

(இ - ள்.) கொடிய கோபக்கண்ணையுடைய பட்டவர்த்தன யானையினது முதுகினின்றும் மூர்த்திநாயனாரை இறக்கித் தேன் பொருந்திய மலர் மாலைகளும், விளங்குகின்ற இரத்தின மாலைகளும் சூழ்ந்திருக்கும் முடிசூட்டு மண்டபத்திற் கொண்டு போய்ச்சிங்காசனத்தின் மேல் எழுந்தருளச் செய்து, ஒப்பற்ற சந்திரவட்டக்குடையின் கீழ் பட்டாபிஷேகத்திற்குரிய மங்கல கிருத்தியங்களை ஆலோசித்துச் செய்யத் தொடங்கினார்கள். - எ- று.

***மன்னுந் திசைவேதியில் மங்கல ஆகு திக்கண்***
***துன்னுஞ் சுடர்வன்னி வளர்த்துத் துதைந்த நூல்சூழ்***
***பொன்னின் கலசங்கள் குடங்கள் பூரித்த தூநீர்***
***உன்னுஞ் செயல்மந் திரயோகர் நிறுத்தி னார்கள். 38***

(இ - ள்.) மூர்த்தி நாயனார் வீற்றிருக்கும் கிழக்குத்திக்கில் அவரெதிரில் இடப்பட்ட வேதிகையில் மங்களகரமான ஆகுதிகள் பண்ணுகின்ற யாககுண்டத்தில் விளங்குகின்ற அக்கினியை வளர்த்து, முப்புரி நூலை நெருங்கச் சுற்றிய பொற்கலசங்க ளிலும், குடங்களிலும் நிறைக்கப்பட்ட பரிசுத்தம் பொருந்திய கங்கை முதலிய தீர்த்தங்களைத் தியானிக்கின்ற செய்கையை யுடைய மந்திரவிதிப்படியே நிறுத்தினார்கள். எ- று.

***வந்துற்றெழு மங்கல மாந்தர்கள் தம்மை நோக்கிச்***
***சிந்தைச்சிவ மேதெளி யுந்திரு மூர்த்தியார்தாம்***
***"முந்தைச்செய லாம்அமண் போய்முதற் சைவம் ஓங்கில்***
***இந்தப்புவி தாங்கிஇவ் வின்னர சாள்வன்" என்றார். 39***

(இ - ள்.) தம்மை வந்து வணங்கி மங்கலகரமான செயல்களைச் செய்கின்ற மந்திரிமுதலானவர்களைப் பார்த்துச் சித்தத்தில் சிவபெருமானையே மெய்ப்பொருளென்று தெளிகின்ற தவச் செல்வத்தையுடைய மூர்த்தி நாயனார் இதற்கு முன்னே கொடிய செயலில் இருந்த சமணமதம் அழித்து முதன்மையாகிய சைவசமயம் விருத்தியானால் இந்த இராச்சியத்தைத் தாங்கப் பெற்று இவ்விடத்தில் இனிய அரசாட்சியைக் கைக்கொள்வேனென்று சொன்னார். - எ - று.

***அவ்வாறு மொழிந்தது கேட்ட அமைச்ச ரோடு***
***மெய்வாழ்தரு நூலறி வின்மிகு மாந்தர் தாமும்***
***“எவ்வாறருள் செய்தனை மற்றவை யன்றி யாவர்***
***செய்வார்? பெரியோய்,” எனச்சேவடி தாழ்ந்து செப்ப. 40***

(இ - ள்.) அந்தப் பிரகாரம் மூர்த்தி நாயனார் அருளிச் செயத்தைக் கேட்ட மந்திரிகளோடு உண்மையாகிய வேதாகம சாஸ்திரங்களைக் கற்று அறிவிற் சிறந்த பெரியோர்களும் (அவரைப் பார்த்து) சுவாமீ! தேவரீர் எவ்விதமாகக் கட்டளை யிடுகின்றீரோ அவ்வாறு செய்வதேயல்லாமல் வேறு வகையாக யாவர் செய்யவல்லவர்கள் என்று அவருடைய திருவடிகளில் வணங்கிச் சொல்ல. - எ- று.

***வையம் முறைசெய் குவனாகில் வயங்கு நீறே***
***செய்யும் அபிடே கமுமாக, செழுங்கலன்கள்***
***ஐயன் அடையா ளமுமாக, அணிந்து தாங்கும்***
***மொய்புன் சடைமா முடியேமுடி யாவ” தென்றார். 41***

(இ - ள்.) யான் இவ்வுலகத்தை அரசாட்சி செய்வதற்கு உரியவனானால் விளங்குகின்ற விபூதியே செய்யப்பட்ட அபிஷேகதிரவியமாகவும், சிவபெருமானது அடியவனென்று தெரிந்து கொள்வதற்குக் குறியாகவுள்ள ருத்திராக்ஷமாலையே செழுமை பொருந்திய திருவாபரணங்களாகவும் அணிந்து கொண்டு, நான் தரிக்கின்ற நெருங்கிய சடைமுடியே என்தலையில் பின்சூட்டும் கிரீடமாகவும் இருக்கத்தக்கதென்று சொன்னார். - எ- று.

***என்றிவ்வுரை கேட்டலும் எல்லையில் கல்வி யோரும்***
***வன்திண்மதி நூல்வளர் வாய்மை அமைச்சர் தாமும்***
***“நன்றிங்கருள் தான்” என நற்றவ வேந்தர் சிந்தை***
***ஒன்றும்அர சாள்உரி மைச்செய லானஉய்த்தார். 42***

(இ - ள்.) என்று இவர் சொல்லியவார்த்தையைக் கேட்டவுடனே அளவில்லாத பெருங் கல்வியையுடைய பெரியோர்களும், சிறந்த நீதி நூலையறிந்த பேரறிவினையும் உண்மையையுமுடைய மந்திரிமார்களும், இவ்விடத்தில் தேவரீர் அருளிச்செய்த மொழியானது மிகவும் நன்றாயிருக்கின்றதென்று இசைந்து, நல்ல தவத்தினையுடைய அம் மூர்த்தி நாயனார் தமது திருவுள்ளத்திற்குப் பொருந்திய படி அரசாட்சி செய்வதற்கு வேண்டிய செய்கைகளைச் செய்தார்கள். எ - று.

***மாடெங்கும் நெருங்கிய மங்கல ஓசை மல்கச்***
***சூடுஞ்சடை மௌலி அணிந்தவர் தொல்லை ஏனம்***
***தேடுங்கழ லார்திரு வாலவாய் சென்று தாழ்ந்து***
***நீடுங்களிற் றின்மிசை நீள்மறு கூடு போந்தார்.*** ***43***

(இ - ள்.) மங்கலவாத்தியங்களின் ஓசைகள் பக்கங்களிலெல்லாம் நெருங்கி நிறைய, சூட்டப்பட்ட சடையையே முடியாகக் கொண்ட மூர்த்தி நாயனார் முன்னாளில் விஷ்ணுவாகிய பன்றியினால் தேடிக் காணப்படாத திருவடியையுடைய சொக்கலிங்கப் பெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருவாலவாயென்னும் ஆலயத்தையடைந்து வணங்கிப் பின்பு உயர்ந்த பட்டவர்த்தனயானையின்மேலேறி நீண்ட வீதியின் வழியாகப் பவனிவந்தார். - எ- று.

***மின்னும்மணி மாளிகை வாயிலின் வேழ மீது***
***தன்னின்றும் இழிந்து தயங்கொளி மண்ட பத்திற்***
***பொன்னின்அரி மெல்லணைச் சாமரைக் காமர் பூங்கால்***
***மன்னுங்குடை நீழல் இருந்தனர் வையம் தாங்கி.*** ***44***

(இ - ள்.) ஒளிவிளங்குகின்ற மணிகளிழைத்த அரண்மனை வாசலிற் சென்றவுடனே அந்த யானையினின்றும் கீழே இறங்கி விளங்குகின்ற காந்தியையுடைய அரசாட்சிமண்டபத்தில் பொன்னினால் செய்யப்பட்ட மெல்லிய சிங்காசனத்தில் சாமரம்வீச, அழகிய பொலிவுள்ள காலினையுடைய வெண்கொற்றக்குடையின் நீழலில் உலகத்தைத் தாங்கி வீற்றிருந்தருளினார். - எ- று.

***குலவுந்துறை நீதி அமைச்சர் குறிப்பின் வைகக்***
***கலகஞ்செய் அமண்செய லாயின கட்டு நீங்கி***
***நிலவுந்திரு நீற்று நெறித்துறை நீடு வாழ***
***உலகெங்கும் நிரம்பிய சைவம் உயர்ந்து மன்ன.*** ***45***

(இ - ள்.) நல்ல தருமநெறியில் ஒழுகுகின்ற நீதியையுடைய மந்திரிமார்கள் தம்முடைய குறிப்பின் வழியே நடக்கவும், கலகஞ்செய்து கொண்டிருந்த சமணர்களுடைய மதக்கொள்கைகளாகிய கட்டுப்பாடுகள் ஒழிந்து விளங்குகின்ற திருவெண்ணீற்றைத் தரிக்கும் நல்லொழுக்கமானது நீடித்து வாழவும் உலகமுழுமையும் நிரம்பிய சைவசமயமானது நிலைபெற்றோங்கவும். - எ- று.

***நுதலின்கண் விழித்தவர் வாய்மை நுணங்கு நூலின்***
***பதமெங்கும் நிறைந்து விளங்கப் பவங்கள் மாற்ற***
***உதவுந்திரு நீறுயர் கண்டிகை கொண்ட வேணி***
***முதன்மும் மையினால்உல காண்டனர் மூர்த்தி யார்தாம்.*** ***46***

(இ - ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானால் அருளிச் செய்யப்பட்ட உண்மை பொருந்திய வேதாகமங்களிற் சொல்லிய வைதிகமார்க்கமானது எவ்விடத்திலும் பரவி விளங்கவும், பிறவித்துன்பத்தை நீக்குதற் கேதுவாக வுதவுகின்ற திருநீறும், உயர்ந்த ருத்திராக்ஷமும், தரித்துக் கொண்ட சடைமுடியுமாகிய முதன்மை பொருந்திய இம்மூன்று அடையாளங்களோடும் மூர்த்தி நாயனார் உலகத்தை அரசாண்டருளினார். - எ- று.

***ஏலங்கமழ் கோதையர் தந்நிறம் என்றும் நீங்கும்***
***சீலங்கொடு வெம்புலன் தெவ்வுடன் வென்று நீக்கி***
***ஞாலந்தனி நேமி நடாத்தி நலங்கொள் ஊழிக்***
***காலம்உயிர் கட்கிட ரான கடிந்து காத்து.*** ***47***

(இ - ள்.) மயிர்ச்சாந்து மணக்கின்ற கூந்தலையுடைய ஸ்திரிகளாலுண்டாகும் ஆசையை எப்போதும் ஒழிந்திருப்பதற் கேதுவாகிய துறவை ஒழுக்கமாகக் கொண்டு, பகைவர்களோடு கொடிய ஐம்புலன்களையும் செயித்துத் தள்ளி, உலகத்தில் ஒப்பற்ற தனது ஆஞ்ஞாசக்கரத்தை நடத்தி நன்மை பெறும்படி வெகுகாலம் ஆன்மகோடிகளுக் குண்டாகின்ற துன்பங்களை யொழித்துப் பாதுகாத்து. - எ- று.

***பாதம்பர மன்னவர் சூழ்ந்து பணிந்து போற்ற***
***ஏதம்பிணி யாவகை இவ்வுல காண்டு தொண்டின்***
***பேதம்புரி யாஅருட் பேரர சாளப் பெற்று***
***நாதன்கழற் சேவடி நண்ணினர் அண்ண லாரே.*** ***48***

(இ - ள்.) அன்னியதேசத்து அரசர்கள் கப்பங் கொண்டு சூழ்ந்து தமது திருவடிகளில் வணங்கித் துதிக்க, உயிர்களுக்கு ஓர் துன்பமும் நேரிடாமல் இந்த உலகத்தை ஆண்டு, (அதனோடு) சிவபெருமானுக்குச் செய்யும் பணிவிடைகளில் யாதொரு வித்தியாசமும் வரவொட்டாத பெருமை பொருந்திய அருளரசாளவும் பெற்று மூர்த்தி நாயனார் அவ்வெம்பெருமானுடைய வீரக்கழலையணிந்த சிவந்த திருவடியை அடைந்தார். - எ- று.

***அகல்பாறையின் வைத்து முழங்கையை அன்று தேய்த்த***
***இகலார்களிற் றன்பரை ஏத்தி முருக னாராம்***
***முகில்சூழ் நறுஞ்சோலையின் மொய்யொளி மாட வீதிப்***
***புகலூர்வரும் அந்தணர் தந்திறம் போற்ற லுற்றாம். 49***

(இ - ள்.) சந்தனக்கட்டை கிடைக்காத காலத்தில் அகன்ற சன்தனக்கல்லில் முழங்கையை வைத்துத் தேய்த்த பகைகொண்ட யானையை யொத்த மூர்த்தி நாயனார் ஸ்தோத்திரஞ் செய்து, மேகங்களால் சூழப்பட்ட நல்ல மணம் பொருந்திய சோலைகளையும், மிகுந்த ஒளிவீசுகின்ற மாடவீதிகளையுமுடைய திருப்புகலூரில் அவதாரஞ் செய்த முருக நாயனாரென்று சொல்லப்பட்ட வேதியர் செய்த அடிமைத்திறத்தைச் சொல்லத் தொடங்குவோம். - எ- று.

**மூர்த்தி நாயனார் புராணம் முற்றிற்று.**



# 22. முருகநாயனார் புராணம்

***தாது சூழும் குழல்மலையாள் தளிர்க்கை சூழும் திருமேனி***
***மீது சூழும் புனற்கற்றை வேணி நம்பர் விரும்புபதி***
***சோதி சூழ மணிமௌலிச் சோழர் பொன்னித் திருநாட்டுப்***
***போது சூழுந் தடஞ்சோலைப் பொய்கை சூழும் பூம்புகலூர். 1***

(இ - ள்.) பூந்தாதுகள் பொருந்திய கூந்தலையுடைய உமாதேவியரது தளிர் போன்ற கைகளினால் தழுவிக் கொள்ளப் பட்ட திருமேனியையும், திருமுடியின்மேல் பெருக்கெடுக்கும் கங்கைநதி தங்கிய சடைமுடியையுமுடைய சிவபெருமான் விருப்பங் கொண்டு வீற்றிருந்தருளும் ஸ்தலமானது, பிரகாசாம் பொருந்திய மாணிக்கங்களிழைத்த கிரீடத்தையணிந்த சோழ ராஜாக்கள் அரசாட்சி செய்கின்ற சிறந்த காவிரி நாட்டில் மலர்கள் நிறைந்த பெரிய சோலைகளும், தடாகங்களும் நாற்புறத்திலும் சூழ்ந்திருக்கும் திருப்புகலூராகும். - எ- று.

***நாம மூதூர் மற்றதனுள் நல்லோர் மனம்போல் அவரணிந்த***
***சேம நிலவு திருநீற்றின் சிறந்த வெண்மைத் திருந்தொளியால்***
***யாம இருளும் வெளியாக்கும் இரவே அல்ல; விரைமலர்மேல்***
***காமர் மதுவுண் சிறைவண்டும் களங்கம் இன்றி விளங்குமால். 2***

(இ - ள்.) புகழ் பெற்றிருக்கின்ற பழமையாகிய அத்திருப்புகலூரில் நன்மை பொருந்திய சிவனடியார்களின் திருவுள்ளத்தைப் போல் அவ்வடியார்களணிந்த மோட்ச வின்பத்தைக் கொடுக்கும் விபூதியினது வெண்மை பொருந்திய பிரகாசத்தினால் இராக்காலத்து இருளும் வெளிச்சமாகச் செய்யப்படும்; அவ்வாறான இரவேயல்லாமல், வாசனை பொருந்திய மலர்களிலுள்ள மதுரமாகியதேனையுண்ணும் சிறகினையுடைய வண்டுகளும் (விடியற் காலத்தில் அவ் வடியார்கள் மலர் கொய்ய வருகின்ற நந்தனவனங்களில்) கருமை நிறம்நீங்கி வெண்ணிறத்தையுடையனவாய்ப் பிரகாசிக்கும். எ-று

***நண்ணும் இசைதேர் மதுகரங்கள் நனைமென் சினையின் மருங்கலைய***
***வண்ண மதுரத் தேன்பொழிவ வாச மலர்வா யேயல்ல;***
***தண்ணென் சோலை எம்மருங்கும் சாரும் மடமெ஻ சாரிகையின்***
***பண்ணின் கிளவி மணிவாயும் பதிகச் செழுந்தேன் பொழிவுமால். 3***

(இ - ள்.) சோலைகளிலுள்ள இசை பாடுகின்ற வண்டுகள் அரும்புகளையுடைய புறத்தில் அலைதலாலே வாசனை பொருந்திய மலர்களின் வாய்மாத்திரம் அழகிய மதுரமாகிய தேனைப் பொழிவனவல்ல; குளிர்ச்சி பொருந்திய சோலை களின் எந்தப்புறத்திலும் வாசஞ் செய்யும் இளமை பொருந்திய மெல்லிய காகணவாய்ப்புள்ளின் பண்ணமைந்த சொல்லை யுடைய அழகிய வாயும் தேவாரப் பதிகங்களாகிய செழுமை தங்கிய தேனைப் பொழியும். - எ- று.

***வண்டு பாடப் புனல்தடத்து மலர்ந்து கண்ணீர் அரும்புவன***
***கொண்ட வாச முகைஅவிழ்ந்த குளிர்பங் கயங்க ளேயல்ல;***
***அண்டர் பெருமான் திருப்பாட்டின் அமுதம் பெருகச் செவிமடுக்கும்***
***தொண்டர் வதன பங்கயமும் துளித்த கண்ணீர் அரும்புமால்.*** 4

(இ - ள்.) வண்டுகள் பாடும்படி நீரையுடைய தடாகத்தில் விகசித்துக் கண்ணீரைத் துளிப்பன, வாசனை பொருந்திய முறுக்குவிட்டு விரிந்த குளிர்ச்சியாகிய தாமரை மலர்கள் மாத்திரமேயல்ல; தேவர்கள் நாயகராகிய சிவபெருமானைத் துதிக்கின்ற தேவாரப் பதிகத்திலுள்ள இசையமுதமானது பெருக, அதனைக் காதுகளாகிய வாயினால் பானம் பண்ணுகின்ற அடியார்களின் முகமாகிய தாமரைமலர்களும் துளிக்கின்ற ஆனந்தக் கண்ணீரைச் சொரியும். - எ- று.

***ஆன பெருமை வளஞ்சிறந்த அத்தண் புகலூர் அதுதன்னில்***
***மான மறையோர் குலமரபின் வந்தார் முந்தை மறைமுதல்வர்***
***ஞான வரம்பின் தலைநின்றார் நாகம் புனைவார் சேவடிக்கீழ்***
***ஊனம் இன்றி நிறை அன்பால் உருகு மனத்தார் முருகனார்.*** 5

(இ - ள்.) இப்படிப்பட்ட பெருமையோடு வளப்பம் பொருந்திய அழகிய திருப்புகலூரில் வாழும் மேன்மை பொருந்திய பிராமணர் குலத்தில் அவதரித்தவர்; முதன்மை யாகிய வேதங்களையுணர்ந்தவர்; ஞானமார்க்கத்தில் தலைமை யாக நின்றவர்; சர்ப்பாபரணத்தை யணிந்த சிவபெருமானுடைய சிவந்த திருவடிகளில் குற்றமில்லாமல் நிறைந்த அன்பினால் உருகுகின்ற மனதினையுடைவர் (அவர் யாரென்றால்) முருக நாயனார். - எ- று.

***அடைமேல் அலவன் துயிலுணர அலர்செங் கமல வயற்கயல்கள்***
***மடைமேல் உகளும் திருப்புகலூர் மன்னி வாழுந் தன்மையராய்***
***விடைமேல் வருவார்க் காளான மெய்ம்மைத் தவத்தால் அவர்கற்றைச்***
***சடைமேல் அணியத் திருப்பள்ளித் தாமம் பறித்துச் சாத்துவார்.*** 6

(இ - ள்.) நண்டுகள் தாமரையிலைகளில் நித்திரை செய்ய, அலர்ந்த செந்தாமரை மலர்களையுடைய வயல்களிலுள்ள கெண்டைமீன்கள் நீர்மடைகளின் மேல் பாய்கின்ற திருப் புகலூரில் நிலை பெற்றுவாழுந் தன்மையையுடையவராய், ரிஷப வாகனத்தின்மேல் எழுந்தருளி வருகின்ற சிவபெருமானுக்கு அடிமைத்திறம் பூண்ட மெய்மையாகிய தபோபலத்தினால் அப்பெருமானது கூட்டமாகிய சடையின் மேல் தரிக்கும்படி திருப்பள்ளித்தாமத்துக்குரிய மலர்களைப் பறித்துச் சாத்துகின் றவர். - எ- று.

***புலரும் பொழுதின் முன்னெழுந்து புனித நீரில் மூழ்கிப்போய்***
***மலருஞ் செவ்வித் தம்பெருமான் முடிமேல் வான்நீர் ஆறுமதி***
***உலவு மருங்கு முருகுயிர்க்க நகைக்கும் பதத்தின் உடன்பறித்த***
***அலகில் மலர்கள் வெவ்வேறு திருப்பூங் கூடை களிலமைப்பார். 7***

(இ - ள்.) சூரியன் உதயமாவதற்குமுன்னே விடியற்காலத்தில் நித்திரை விட்டெழுந்து, பரிசுத்தம் பொருந்திய நீரில் ஸ்நாநஞ் செய்து திருநந்தனவனத்திற்குச் சென்று, விடிந்தவுடனே தமது நாயகராகிய சிவபெருமானது திருமுடியின் மேல் கங்காநதியும், சந்திரனும் சஞ்சரிக்கின்ற இடத்தில் வாசனைவீசும் படியாக, மலரும்பக்குவத்தில் பறித்த எண்ணிறந்த மலர்களை வெவ்வேறு இனமாகப் புஷ்பக் குடலைகளில் வைப்பார். - எ- று.

***கோட்டு மலரும் நிலமலரும் குளிர்நீர் மலரும் கொழுங் கொடியின்***
***தோட்டு மலரும் மாமலரும் சுருதி மலருந் திருவாயில்***
***காட்டு முறுவல் நிலவலரக் கனக வரையிற் பன்னகநாண்***
***பூட்டும் ஒருவர் திருமுடிமேல் புனைய லாகும் மலர்தெரிந்து. 8***

(இ - ள்.) கோட்டுப் பூவும், நிலப்பூவும், குளிர்ச்சியாகிய நீர்ப்பூவும், செழுமை பொருந்திய கொடியில் பூத்த இதழ்களை யுடைய பூவும் ஆகிய நால்வகைமலர்களும், வேதங்களை அருளிச் செய்த திருவாயினிடத்தில் காட்டப்பட்ட புன்முறுவ லானது நிலவை வீச மேருமலையாகிய வில்லில் ஆதிசேஷ னாகிய நாணியைப் பூட்டிய ஒப்பற்ற சிவபெருமானது திருமுடி யின்மேல் (காலை முதலிய காலங்களுக்கேற்கத்) தரிக்கத்தக்க மலர்களென்று தெரிந்து பறித்து. - எ- று.

***கொண்டு வந்து தனியிடத்தில் இருந்து கோக்கும் கோவைகளும்***
***இண்டைச் சுருக்கும் தாமமுடன் இசைக்கும் வாச மாலைகளும்***
***தண்டில் கட்டும் கண்ணிகளும் தாளிற் பிணைக்கும் பிணையல்களும்***
***நுண்டா திறைக்கும் தொடையல்களும் சமைத்து நுடங்கு நூன்மார்பர் 9***

(இ - ள்.) நால்வகை மலர்களையும் பறித்து எடுத்துக் கொண்டு வந்து, தனியான இடத்திலிருந்து கோக்கப்பட்ட கோவை மாலைகளும், இண்டை மாலைகளும், சுருக்கிக்கட்டப் பட்ட பத்திமாலைகளும், ஒன்றோடொன்றாகச் சேர்த்துக் கட்டப் பட்ட வாசனை பொருந்திய ஆரம் முதலிய மாலைகளும், தண்டு போலப் பெரிதாகக் கட்டப்பட்ட கொண்டைமாலை களும், மலர்களின் காம்போடு காம்பைச் சேர்த்துப் பிணைக் கின்ற சரமாலைகளும், நுட்பமாகிய மகரந்தப் பொடிகளை இறைக்கும் தொங்கல் மாலைகளும் கட்டி, அசைகின்ற பூணூலை யணிந்த மார்பினையுடைய முருக நாயனார். - எ- று.

***ஆங்கப் பணிக ளானவற்றுக் கமைத்த காலங் களின்அமைத்துத்***
***தாங்கிக் கொடுசென் றன்பினொடுஞ் சாத்தி வாய்ந்த அர்ச்சனைகள்***
***பாங்கிற் புரிந்து பரிந்துள்ளார்; பரமர் பதிகப் பற்றான***
***ஓங்கிச் சிறந்த அஞ்செழுத்தும் ஓவா நாவின் உணர்வினார். 10***

(இ - ள்.) மாலைகளைச் சாத்துவதற்கு நியமிக்கப்பட்ட காலை முதலிய நான்கு காலங்களிலும் கட்டி எடுத்துக் கொண்டு ஆலயத்துக்குப் போய் அன்போடு சாத்திச் செய்ய வேண்டிய அர்ச்சனைகளைத் தகுதியாகச் செய்து, உருகிய மனதையுடைய வராகிய, சிவபெருமானுடைய திருப்பதிகச் சார்பாகிய உயர் வாகிச் சிறந்த திருவைந் தெழுத்தையும் இடைவிடாமல் நாவி னால் உச்சரிக்கின்ற உணர்வினையுடையவராயிருந்தார். - எ- று.

***தள்ளும் முறைமை ஒழிந்திடஇத் தகுதி ஒழுகும் மறையவர்தாம்***
***தெள்ளு மறைகள் முதலான ஞானஞ் செம்பொன் வள்ளத்தில்***
***அள்ளி அகிலம் ஈன்றளித்த அம்மை முலைப்பா லுடனுண்ட***
***பிள்ளை யார்க்கு நண்பருமாம் பெருமை யுடையா ராயினார். 11***

(இ - ள்.) வேதாகமங்களில் விலக்கி யிருக்கின்றவற்றை யாவரும் நீங்க, (அவர்களுக் குணர்த்தும் பொருட்டு) இப்படிப் பட்ட தகுதியில் நடக்கின்ற முருக நாயனார் தெளிந்த வேதாகம முதலிய ஞானங்களைச் சிவந்த பொன்னாற் செய்யப்பட்ட கிண்ணத்திலிருந்து எடுத்து சர்வலோகங்களையும் பெற்றெடுத்த உமாதேவியாரது திருமுலைப்பாலோடு உண்டருளிய திருஞான சம்பந்தப்பிள்ளையாருக்குச் சிநேகிதராகவும் இருக்கின்ற பெருமையையுடயவராயினார். - எ- று.

***அன்ன வடிவும் ஏனமுமாய் அறிவார் இருவர் அறியாமல்***
***மன்னும் புகலூர் உறைவாரை வர்த்த மான வீச்சுரத்து***
***நன்னர் மகிழ்ச்சி மனங்கொள்ள நாளும் பூசை வழுவாமே***
***பன்னும் பெருமை அஞ்செழுத்தும் பயின்றே பணிந்து பரவினார். 12***

(இ - ள்.) அன்னமும் பன்றியுமாக உருவங்கொண்டு முடியையும் அடியையும் அறியத் தொடங்கிய பிரமன் விஷ்ணு என்னும் இருவராலும் அறியப்படாமல் நிலை பெற்ற திருப் புகலூரில் வாசஞ் செய்கின்ற சிவபெருமானை அவர் வீற்றிருந் தருளும் வர்த்தமான வீச்சரமென்னும் ஆலயத்தில் தம் மனதில் அதிக சந்தோஷமுண்டாக நாள்தோறும் தவறாமல் பூசை செய்து, செபித்தற்குரிய பெருமை பொருந்திய திருவைந்தெழுத் தையும் செபித்து வணங்கித் துதிசெய்து வந்தார். - எ - று.

***அங்கண் அமருந் திருமுகர் அழகார் புகலிப் பிள்ளையார்***
***பொங்கு மணத்தின் முன்செய்த பூசை அதனால் புக்கருளிச்***
***செங்கண் அடலே றுடையவர்தாஞ் சிறந்த அருளின் பொருள்அளிக்கத்***
***தங்கள் பெருமான் அடிநீழல் தலையாம் நிலைமை சார்வுற்றார். 13***

(இ - ள்.) அவ்விடத்தில் இவ்விதமாகத் திருத்தொண்டு செய்து கொண்டிருந்த முருகநாயனார் அழகு பொருந்திய சீகாழியில் திருவவதாரஞ் செய்தருளிய திருஞான சம்பந்தப் பிள்ளையாரது சிறந்த திருமணத்தில் தாம் முன்பு செய்த சிவபூசையின் பலத்தினால் அவ்விடத்திற்குச் சென்று சிவந்த கண்களையுடைய வலிய ரிஷபத்தை வாகனமாகக் கொண்ட ருளிய சிவபெருமான் சிறப்பாகிய திருவருட் செல்வத்தைக் கொடுத்தருள (அதனால்) தங்கள் பெருமானாகிய அக்கடவுளின் திருவடி நீழலில் வாசஞ் செய்யும் தலைமையாகிய மோக்ஷ நிலைமையை அடைந்தார். - எ- று.

***அரவம் அணிந்த அரையாரை அருச்சித் தவர்தங் கழல்நிழற்கீழ்***
***விரவு புகலூர் முருகனார் மெய்ம்மைத் தொண்டின் திறம்போற்றிக்***
***கரவி லவர்பால் வருவாரைக் கருத்தில் உருத்தி ரங்கொண்டு***
***பரவும் அன்பர் பசுபதியார் பணிந்த பெருமை பகர்வுற்றேன். 14***

(இ - ள்.) சர்ப்பத்தையணிந்த இடையினையுடைய சிவபெருமானை அர்ச்சனைசெய்து அப்பெருமானுடைய திருவடி நிழலின் கீழ் அடைந்தருளிய திருப்புகலூரில் அவதரித்த முருக நாயனார் செய்த மெய்மையாகிய திருத்தொண்டின் பெருமை யைத் துதித்து, வஞ்சகமற்ற நெஞ்சினையுடைய அடியார் களிடத்தில் எழுந்தருளித் திருவருள் செய்கின்ற சிவபெருமா னைத் தம்மனதில் திருவுருத்திரமந்திரத்தைக் கொண்டு (இரவும் பகலும்) துதிக்கின்ற உருத்திரபசுபதி நாயனார் வழிபட்ட பெருமையைக் குறித்துச் சொல்லத் தொடங்கினேன். - எ- று.

**முருகநாயனார் புராணம் முற்றிற்று.**



# ௨௩. உருத்திரபசுபதி நாயனார் புராணம்

***நிலத்தின் ஓங்கிய நிவந்தெழும் பெரும்புனல் நீத்தம்***
***மலர்த்த டம்பணை வயல்புகு பொன்னிநன் னாட்டுக்***
***குலத்தின் ஓங்கிய குறைவிலா நிறைகுடி குழுமித்***
***தலத்தின் மேம்படு நலத்தது பெருந்திருத் தலையூர்.*** 1

(இ - ள்.) உலகத்தில் உயர்வு பெற்று அதிகமாகப் பெருகி வருகின்ற சிறந்த காவிரி நதியின் பிரவாகமானது தாமரை மலர்களையுடைய விசாலமாகிய வயல்களில் செல்லுகின்ற சோழ வள நாட்டில், குலத்திற் சிறந்து யாதொரு குறைவுமில்லாமல் நிறைந்த குடிகள் நெருங்கி அந்நாட்டிலுள்ள எல்லா ஊர்களிலும் மேம்பட்ட நலத்தையுடையது; (அது யாதெனின்) பெருமை பொருந்திய திருத்தலையூர் என்னு நகரமாம். - எ- று.

***வான ளிப்பன மறையவர் வேள்வியின் வளர்தீ;***
***தேன ளிப்பன நறுமலர் செறிசெழுஞ் சோலை;***
***ஆன ளிப்பன அஞ்சுகந் தாடுவார்க்(கு) அவ்வூர்***
***தான ளிப்பன தருமமும் நீதியுஞ் சால்பும்.*** 2

(இ - ள்.) பிராமணர்கள் செய்யும் யாகத்தில் ஆகுதியால் வளர்ந்தெரிகின்ற அக்கினியானவை மழை பெய்யச் செய்கின் றன; நன்மணம் பொருந்திய மலர்கள் நிறைந்த செழிப்பாகிய சோலைகள் தேனைப் பொழிகின்றன; பசுக்கள் பஞ்சகௌவி யத்தை விரும்பி அபிஷேகங் கொண்டருளுகின்ற சிவபெருமா னுக்கு அக்கௌவியங்களைக் கொடுக்கின்றன; அவ்வூரிலுள்ள வர்கள் தருமத்தையும் நீதியையும் பெருமையையும் கொடுக்கின் றார்கள். - எ- று.

***அங்கண் மாநக ரதனிடை அருமறை வாய்மைத்***
***துங்க வேதியர் குலத்தினில் தோன்றிய தூயோர்***
***செங்கண் மால்விடை யார்செழும் பொன்மலை வல்லி***
***பங்க னாரடி மைத்திறம் புரிபசு பதியார்.*** 3

(இ - ள்.) அழகிய இடமகன்ற பெருமை பொருந்திய அந்நகரத்தில் அருமையாகிய வேதத்திற் சொல்லுகின்ற

நீண்ட இரத்தினமாலைகளே தாழ்கின்றன. மிகுந்த குங்குமக் குழம்பே இழுக்கை யுடையனவாயிருக்கின்றன. எ-று.

***வென்றி வானவர் தாம்விளை யாடலும்***
***என்றும் உள்ளவர் வாழும் இயற்கையும்***
***நன்றும் உள்ளத்து நண்ணினர் வேட்கைகள்***
***ஒன்றும் அங்கொழி யாவகை உய்ப்பது.*** ***109***

(இ - ள்.) வெற்றி பொருந்திய தேவர்கள் விளையாடல் செய்தலையும், எந்நாளும் அழியாத நிலைமையைப் பெற்ற சித்தர்கள் வாழ்ந்திருக்கின்ற இயல்பையும், எல்லா நன்மைகளை யும் தங்கள் மனதில் நினைத்திருக்கின்ற அவரவர்களுடைய விருப்பத்துள் ஒன்றையும் அவ்விடத்தில் நீங்காமலிருக்கும்படி செலுத்துவது அக்காஞ்சி நகரம். எ-று.

***புரங்க டந்தவர் காஞ்சி புரம்புகழ்***
***பரம்பு நீள்புவ னம்பதி னான்கினும்***
***வரம்பில் போக வனப்பின் வளமெலாம்***
***நிரம்பு கொள்கலம் என்ன நிறைந்ததால்.*** ***110***

(இ - ள்.) திரிபுரத்தை யெரித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் காஞ்சிபுரமானது புகழ்பரவிய நீண்ட பதினான்கு உலகங்களிலு முண்டாகிய அளவற்ற போகங்களின் அழகியவளப்பங்களெல்லாம் நிறைந்திருக்கின்ற ஒரு பாண்டம் போல விளங்கி இருந்தது. எ-று.

***அவ்வகைய திருநகரம் அதன்கண்ஒரு மருங்குறைவார்;***
***இவ்வுலகிற் பிறப்பினால் ஏகாலிக் குலத்துள்ளார்;***
***செவ்வியஅன் புடைமனத்தார்; சீலத்தின் நெறிநின்றார்;***
***மைவிரவு கண்டரடி வழித்தொண்டர் உளரானார்.*** ***111***

(இ - ள்.) அத்தன்மையாகிய சிறப்பினையுடைய காஞ்சிபுரத் தில் ஓரிடத்தில் வாழ்கின்றவரும், இந்தவுலகத்தில் அவரது பிறப்பைக்குறித்து விசாரிக்குமிடத்து ஏகாலியர்குலத்தில் அவதரித்தவரும், செம்மையாகிய அன்பு பொருந்திய மனத்தினையுடையவரும், நல்லொழுக்க நெறியில் வழுவாமல் நின்றவரும், காள கண்டத்தினையுடைய சிவபெருமானது திருவடிகளுக்கு வழிவழியே தொண்டு செய்தொழுகுகின்ற வருமாகிய ஒரு அடியவரிருந்தார். எ-று.

***மண்ணின்மிசை வந்ததற்பின் மனமுதலா யினமூன்றும்
அண்ணலார் சேவடியின் சார்வாக அணைவிப்பார்
புண்ணியமெய்த் தொண்டர்திருக் குறிப்பறிந்து போற்றுநிலைத்
திண்மையினால் "திருக்குறிப்புத் தொண்டர்" எனுஞ் சிறப்பினார். 112***

(இ - ள்.) அவர் இவ்வுலகத்தில் அவதரித்த பின்பு மனம் வாக்கு காயம் என்னும் திரிகரணங்களும் சிவபெருமானுடைய சிவந்த திருவடிகளினிடத்தே பொருந்தும் படி செலுத்துகின்றவர்; சிவபுண்ணியத்தையுடைய உண்மை பொருந்திய அடியார்களின் திருவுள்ளக் குறிப்பையறிந்து அவர்களுக்கு வழிபாடு செய்கின்ற நிலைமையான உறுதியினால் திருக்குறிப்புத் தொண்டரென்னும் பெயர் பெற்றுச் சிறப்பினையுடையவர். எ-று.

***தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்கும் புகழ்க்காஞ்சி
ஊரொலிக்கும் பெருவண்ணார் எனவொண்ணா உண்மையினார்;
நீரொலிக்க அராஇரைக்க நிலாமுகிழ்க்குந் திருமுடியார்
பேரொலிக்க உருகுமவர்க் கொலிப்பர்பெரு விருப்பினொடும். 113***

(இ - ள்.) தேர்களும் குதிரைகளும் ஒலித்தலால் சிறப்புற்றுத் திக்குகளிலெல்லாம் பரவிய புகழினையுடைய காஞ்சி புரத்தில், ஊரிலுள்ள ஆடைகளை வெண்மை செய்கின்ற பெரிய வண்ணாரென்று சொல்லக் கூடாத மெய்யன் பினையுடையவர்; கங்கைநீர் முழங்கவும், பாம்புகள் இரைக்கவும் இளம்பிறையானது விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானது திருநாமங்களை உச்சரித்த பொழுதே மனமுருகுகின்ற அடியார்களுக்கு மிகுந்த விருப்பத்தோடு அவர்கள் வஸ்திரங்களை ஒலித்துக் கொடுப்பவர். எ-று.

ஒலித்தல் - வெண்மையாக்கல்

***தேசுடைய மலர்க்கமலச் சேவடியார் அடியார்தம்
தூசுடைய துகள்மாசு கழிப்பார்போல் தொல்லைவினை
ஆசுடைய மலமூன்றும் அணையவரும் பெரும்பிறவி
மாசுதனை விடக்கழித்து வருநாளில் அங்கொருநாள். 114***

(இ - ள்.) ஒளி பொருந்திய தாமரை மலர் போன்ற சிவந்த திருவடிகளையுடைய சிவபெருமானது அடியார்களின் வஸ்திரங்களிலுள்ள குற்றமாகிய அழுக்கினை நீக்குகின்றவரைப் போலப் பழைய கன்மமுதலாகிய குற்றத்தை விளைக்கும் மும்மலங்களும் பொருந்தும்படி தொடர்ந்து வருகின்ற பெரிய பிறவியாகிய அழுக்கானது தம்மைவிட்டு நீங்கும்படி செய்து வருகின்ற நாள்களில் ஒருநாள். -எ-று.

***பொன்னிமயப் பொருப்பரையன் பயந்தருளும் பூங்கொடிதன்***
***நன்னிலைமை அன்றளக்க எழுந்தருளும் நம்பெருமான்***
***தன்னுடைய அடியவர்தம் தனித்தொண்டர் தம்முடைய***
***அந்நிலைமை கண்டன்பர்க் கருள்புரிவான் வந்தணைவார். 115***

(இ - ள்.) பொன்மயமாகிய இமய பர்வதராசன் பெற்றருளிய உமாதேவியாருடைய நல்ல அன்பின் நிலைமையைப் பரிசோதிக் கும்படி முன்னாளில் எழுந்தருளிய நமது பெருமானாகிய திருவேகம் பநாதர் தம்முடைய அடியார்களுக்கு அடியவரா யிருக்கின்ற ஒப்பற்ற திருக்குறிப்புத் தொண்ட நாயனாருடைய அன்பின் நிலைமையை யறிந்து அவர்க்குக் கிருபை செய்யும் படி வருகின்றவராயினார். எ-று.

***சீதமலி காலத்துத் திருக்குறிப்புத் தொண்டர்பால்***
***ஆதுலராய் மெலிந்துமிக அழுக்கடைந்த கந்தையுடன்***
***மாதவவே டந்தாங்கி மாலறியா மலரடிகள்***
***கோதடையா மனத்தவர்முன் குறுநடைகள் கொளக்குறுகி. 116***

(இ - ள்.) சீதள மிகுந்த குளிர்காலத்தில் திருக்குறிப்புத் தொண்ட நாயனாரிடத்தில் ஏழை போலத் திருமேனி இளைத்து, மிகவும் அழுக்காகிய கந்தையுடனே மகத்தான தவவேடமாகிய விபூதி ருத்திராக்ஷங்களை யணிந்து, விஷ்ணு வினால் தேடி யறியப்படாத தாமரை மலர் போன்ற திருவடிகள் குற்றமற்ற மனத்தினையுடைய அத்திருக்குறிப்புத்தொண்ட நாயனாருக்கு முன்னே தளர்ந்த நடைகொள்ளும்படியாக எழுந்தருளி. எ-று.

***திருமேனி வெண்ணீறு திகழ்ந்தொளிருங் கோலத்துக்***
***கருமேக மெனஅழுக்குக் கந்தையுடன் எழுந்தருளி***
***வருமேனி அருந்தவரைக் கண்டுமனம் மகிழ்ந்தெதிர்கொண்(டு)***
***உருமேவும் மயிர்ப்புளகம் உளவாகப் பணிந்தெழுந்தார். 117***

(இ - ள்.) திருமேனியில் வெண்மையாகிய திருநீறு விளங்குகின்ற கோலத்துடனே கருநிறம் பொருந்திய மேகம் போல அழுக்குப் பிடித்த கந்தையையுடையவராய் எழுந்தருளி வருகின்ற அரிய தவவேடத்தையுடைய சிவபெருமானைப் பார்த்து மனதில் மகிழ்வடைந்து எதிர்கொண்டு சென்று தமது தேகத்தில் மயிர்புளகிக்கும்படி வணங்கி யெழுந்தார். எ-று.

**எய்துமவர் குறிப்பறிந்தே இன்மொழிகள் பலமொழிந்து
"செய்தவத்தீர்! திருமேனி இளைத்திருந்த தென்?" என்று
கைதொழுது "கந்தையினைத் தந்தருளும் கழுவ" என
மைதிகழ்கண் டங்கரந்த மாதவத்தோர் அருள்செய்வார். 118**

(இ - ள்.) இவ்வாறு தம்மிடத்திற்கு எழுந்தருளிய சிவபெருமானாகிய அடியவரின் திருவுள்ளக்குறிப்பை யறிந்து இனிமையாகிய பல உபசாரவார்த்தைகளைச் சொல்லி, அருமையாகச் செய்த தவத்தினையுடைய பெரியோரே! தேவரீருடைய திருமேனி இளைத்திருப்பதற்குக் காரணம் என்னவென்று கேட்டுக் கைகூப்பி வணங்கி நீர் தரித்திருக்கின்ற ஆடையை அழுக்குநீக்கித் தருவதற்குக் கொடுத்தருளுமென்று கேட்க, கருநிறம் பொருந்திய கண்டத்தை மறைத்துப் பெரிய தவமுனிவர் போல எழுந்தருளிய சிவபெருமான் அருளிச் செய்வார். எ-று.

**"இக்கந்தை அழக்கேறி எடுக்கவொணா தெனினும்யான்
மெய்க்கொண்ட குளிர்க்குடைந்து விடமாட்டேன்; மேல்கடற்பால்
அக்குன்றம் வெங்கதிரோன் அணைவதன்முன் தருவீரேல்
கைக்கொண்டு போயொலித்துக் கொடுவாரும்கடி" தென்றார். 119**

(இ - ள்.) நான் தரித்திருக்கின்ற இந்தக் கந்தைத் துணியானது அதிக அழுக்கடைந்து தரிப்பதற்குத் திகுதியற்றதாயிருந்தாலும் உடம்பில் வீசுகின்ற குளிர் காற்றுக்குப் பயந்து இதனைக் கைவிடாமல் வைத்துக் கொண்டிருக்கின்றேன்; ஆதலால், நீர் மேற்கடலிலுள்ள அஸ்தமயகிரியில் சூரியன் அடைவதற்கு முன்னே கொடுப்பீராயின் இதனைக் கையில் எடுத்துக் கொண்டு போய் வெளுக்க வொலித்து விரைவில் கொண்டு வாருமென்று சொன்னார். எ-று.

**"தந்தருளும் இக்கந்தை தாழாதே ஒலித்துமக்கின்(று)
அந்திபடு வதன்முன்னந் தருகின்றேன்" எனஅவரும்
"கந்தைஇது ஒலித்துணக்கிக் கடிதின்றே தாரீரேல்
இந்தவுடற் கிடர்செய்தீர்" என்றுகொடுத் தேகினார். 120**

(இ - ள்.) (திருக்குறிப்புத் தொண்ட நாயனார் இவ்வாறு அருளிச் செய்த சிவபெருமானாகிய அடியவரைப் பார்த்து) தேவரீர் இக்கந்தையைக் கொடுத்தருளும்; அடியேன் பொழுது போக்காமல் வெளுத்து இன்று அந்திவேளையாவதற்கு முன்னமே தருகின்றேனென்று சொல்ல, அடியவர் வேடங் கொண்டு வந்த அக்கடவுளும், கந்தையாகிய இத்துணியை

வெண்மையாக்கி உலர்த்தி உலர்த்தி விரைவில் இத்தினத் திலேயே, கொடுக்காமற் போவீராயின் இந்த உடலுக்கு நீர் துன்பஞ் செய்தவராவீரென்று கொடுத்துவிட்டுப் போனார். எ-று.

**குறித்தபொழு தேஒலித்துக் கொடுப்பதற்குக் கொடுபோந்து**
**வெறித்தடநீர்த் துறையின்கண் மாசெறிந்து மிகப்புழுக்கிப்**
**பிறித்தொலிக்கப் புகும்அளவில் பெரும்பகல் போய்ப் பின்பகலாய்**
**மறிக்கரத்தார் திருவருளால் மழைஎழுந்து பொழிந்திடுமால். 121**

(இ - ள்.) (சிவபெருமானாகிய அடியவர்) குறித்த பொழுதிலேயே வெளுத்துக் கொடுக்கும்படி வாங்கிக் கொண்டு போய் மலர்களின் வாசனை பொருந்திய (ஆடையொலிக்கும்) ஒரு தடாகத்தின் நீர்த்துறையில் அழுக்கு நீங்கும் படி தோய்த்து பின்பு வெள்ளாவியில்லைத்துப் புழுக்கி, அவ்வழுக்கைப் பிரித்து ஒலிக்கப் போன பொழுது உச்சிப் பகலானது ஒழிந்து அந்திவேளைபோலத் தோன்ற, மானைத்தரித்த திருக்கரத்தினை யுடைய சிவபெருமானது கிருபையினால் மேகங்கள் திரண் டெழுந்து மழைபொழிந்தன. எ-று.

**திசைமயங்க வெளியடைத்த செறிமுகிலின் குழாமிடைந்து**
**மிசைசொரியும் புனல்தாரை விழிநுழையா வகைமிடைய**
**அசையுடைய மனத்தன்பர் அறிவுமறந் தருந்தவர்பால்**
**இசைவுநினைந் தழிந்(து) 'இனியான் என்செய்கேன்' எனநின்றார். 122**

(இ - ள்.) திக்குகள் தெரியாமல் மங்கும்படி ஆகாயத்தின் இடைவெளியை மூடி நெருங்கிய மேகக்கூட்டங்கள் ஒன்றாகச் சேர்ந்து மேலிடத்திலிருந்து சொரிகின்ற நீர்த்தாரைகள் கட்பொறிகள் நுழைந்து செல்வ தற்கிடமில்லாமல் நெருங்கி விழுந்து கொண்டிருக்க, (அப்பொழுது அந்திவேளைக்கு முன்னமே கந்தையைத் தோய்த்து உலர்த்திக் கொடுக்கிறே னென்று சொல்லிய சங்கதி எவ்வாறாகுமோ வென்று) வருத்தப் பட்டுக் கொண்டிருக்கின்ற மனத்தினையுடைய திருக்குறிப்பத் தொண்ட நாயனார் தமது உணர்வுமயங்கி அரியதவமுனிவர் வேடங் கொண்டு வந்த சிவபெருமானிடத்தில் தாம் வாக்குத்தத் தஞ் செய்ததை நினைந்து மனம்புழுங்கி இனி இதற்கு நான் என்ன செய்வேனென்று வருத்தமுற்று நின்றார். எ-று.

**"ஓவாதே பொழியுமழை ஒருகால்விட் டொழியும்" எனக்**
**காவாலி திருத்தொண்டர் தனிநின்றார்; விடக்காணார்;**
**மேவார்போற் கங்குல்வர "மெய்குளிரும் விழுத்தவர்பால்**
**ஆ! ஆ! என் குற்றேவல் அழிந்தவா" என விழுந்தார். 123**

(இ - ள்.) சிவபெருமானுக்கு அன்பராகிய திருக்குறிப்புத் தொண்ட நாயனார் இடைவிடாமல் பெய்கின்ற மழையானது ஒருதரம் விட்டுவிடுமென்று தனியே யோசித்துக் கொண்டு நின்றார்; மழைவிடாததைக் கண்டு பகைவரைப் போல இராக் காலம் வந்தால் குளிரினால் திருமேனி நடுங்குகின்ற சிறந்த தவத்தினையுடைய அப்பெரியவரிடத்தில் அடியேன் செய்ய விரும்பிய சிறிய பணிவிடையானது ஐயோ! அழிந்து போயிற்றே யென்று பூமியில் மயங்கிவிழுந்தார். எ-று.

***"விழுந்தமழை ஒழியாது மெய்த்தவர்சொல் லியஎல்லை***
***கழிந்தது; முன் பொலித்துமனைக் காற்றேற்க அறிந்திலேன்***
***செழுந்தவர்தந் திருமேனி குளிர்காணுந் தீங்கிழைத்த***
***தொழும்பனேற் கினியிதுவே செயல்" என்று துணிந்தெழுவார். 124***

(இ - ள்.) பெய்கின்ற மழையானது விடாதிருக்கின்றது. உண்மையாகிய தவத்தினையுடைய அவ்வடியவர் (ஆடையை வெளுத்துக் கொடுக்கும்படி) சொல்லிய மாலைப் பொழுதும் நீங்கிவிட்டது. முன்னமே இவ்வாடையை வெளுத்து வீட்டில் காற்றையேற்றி உலர்த்திக் கொடுக்கவும் அறியவில்லை சிறந்த தவத்தையுடைய அப்பெரியவரது திருமேனியானது குளிரினால் வருந்தும்படி குற்றஞ் செய்த அடியேனுக்கு இனிமேல் செய்ய வேண்டிய செய்கை இதுவேயென்று துணிவுகொண்டு எழுந்தார். எ-று.

***"கந்தைபுடைத் திடஎற்றுங் கற்பாறை மிசைத்தலையைச்***
***சிந்தஎடுத் தெற்றுவன்" என் றணைந்துசெழும் பாறைமிசைத்***
***தந்தலையைப் புடைத்தெற்ற அப்பாறை தன்மருங்கு***
***வந்தெழுந்து பிடித்ததணி வளைத்தழும்பர் மலர்ச்செங்கை. 125***

(இ - ள்.) கந்தைகளைத் தோய்ப்பதற்குக் கருவியாயிருக்கின்ற கற்பாறையின் மேல் என்னுடைய தலையைச் சிதறும் படியாக மோதிக் கொள்வேனென்று போய்ச் செழிய துறைக்கல்லின் மேல் தம்முடைய சிரசினை உறுதியாக மோதியடித்துக் கொள்ள, அப்பொழுது அந்தத் துறைக்கல்லி னிடத்திலிருந்து (காமாட்சியம்மையாரின்) அழகியவளைத் தழும்பினையணிந்த திருவேகம்பநாதருடைய தாமரை மலர் போன்ற சிவந்த கையானது தோன்றி அவரைப் பிடித்துக் கொண்டது. எ-று.

***வானிறைந்த புனல்மழைபோய் மலர்மழையா யிடமருங்கு***
***தேனிறைந்த மலரிதழித் திருமுடியார் பொருவிடையின்***
***மேனிறைந்த துணைவியொடும் வெளிநின்றார்; மெய்த்தொண்டர்***
***தானிறைந்த அன்புருகக் கைதொழுது தனிநின்றார். 126***

(இ - ள்.) ஆகாயத்திலிருந்து நிறைந்து விழுகின்ற நீர்மழை நீங்கித் தேவர்கள் பொழிகின்ற கற்பகமலர் மழையாய்ச் சொரிய, தேன்ததும்பிய கொன்றை மலர் மாலையைத் தரித்த திருமுடியையுடைய சிவபெருமான் போர் செய்கின்ற ரிஷபவாகனத்தின்மேல் விளங்குகின்ற தமது தேவியாராகிய பார்வதியாரோடும் வெளிப்பட்டருளினார், அப்பொழுது மெய்யன்பராகிய திருக்குறிப்புத் தொண்ட நாயனார் தமது திருவுள்ளத்தில் நிறைந்த பேரன்பானது அதிகரிக்கும்படி கைகளைக் கூப்பி வணங்கித் தனியே நின்றார். எ-று.

***முன்னவரை நேர்நோக்கி முக்கண்ணர் "மூவுலகும்***
***நின்னிலைமை அறிவித்தோம்; நீயும்இனி நீடியநம்***
***மன்னுலகு பிரியாது வைகுவாய்" எனஅருளி***
***அந்நிலையே எழுந்தருளி அணிஏகாம் பரம்அணைந்தார். 127***

(இ - ள்.) சோமசூரியாக்கினி யென்னும் மூன்று கண்களை யுடைய சிவபெருமான் தமக்கு முன்னே நிற்கின்ற திருக்குறிப்புத் தொண்ட நாயனாரை நேராகப்பார்த்தருளி உன்னுடைய அன்பின் நிலைமையை சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்றுலகங்களிலும் விளங்கும்படிச் செய்தோம், (அதுவன்றியும்) நீயும் இனிஎன்றும் அழியாத நமது சிவலோகத்தில் எம்மை நீங்காதிருப்பாயாக வென்று கிருபை செய்து, அப் பொழுதே மறைந்து எழுந்தருளி அழகிய திருவேகாம்பரத்தை யடைந்தருளினார். எ-று.

***சீர்நிலவு திருக்குறிப்புத் தொண்டர்திருத் தொழில் போற்றிப்***
***பார்குலவத் தந்தைதாள் அறஎறிந்தார் பரிசுரைக்கேன்;***
***பேரருளின் மெய்த்தொண்டர் "பித்தன்" எனப் பிதற்றுதலால்***
***ஆருலகில் இதனுண்மை அறிந்துரைக்க இசைந்தெழுவார்? 128***

(இ - ள்.) சிறப்புப் பொருந்திய திருக்குறிப்புத்தொண்ட நாயனாருடைய திருத்தொண்டின் சிறப்பைத் துதித்து, உலகத்தாரறியத் தமது தந்தையாகிய எச்சதத்தனுடைய தாள்கள் அறும்படி மழுவினால் துணித்த சண்டேசுர நாயனாருடைய சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கினேன், (தந்தை தாளெறிதல் குற்றமன்றோவெனில்) பேரருளினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமான் தம்மை யாட்கொள்ள வருங்கால் பித்தனென்று கூறியதனால் உலகத்தில் யாவர் தாம் இதனுடைய உண்மையை அறிந்து சொல்வதற்குச் சம்மதித்து எழுவார்கள். (ஒருவருமில்லை.) எ-று.

**திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணம் முற்றிற்று.**



# 26. சண்டேசுர நாயனார் புராணம்

***பூந்தண் பொன்னி எந்நாளும் பொய்யா தளிக்கும் புனல்நாட்டு***
***வாய்ந்த மண்ணித் தென்கரையில் மன்ன முன்னாள் வரைகிழிய***
***ஏந்தும் அயில்வேல் நிலைகாட்டி இமையோர்இகல்வெம் பகைகடக்கும்***
***சேந்தன் அளித்த திருமறையோர் மூதூர் செல்வச் சேய்ஞலூர்.*** 1

(இ - ள்.) பொலிவினையும் குளிர்ச்சியையுமுடைய காவிரி நதியானது எக்காலத்திலும் மாறாமல் நீரைத்தருகின்ற சோழ வளநாட்டில் சிறப்புப் பொருந்திய மண்ணியாற்றின் தென்கரை யில் நிலைபெறும்படி, ஆதிகாலத்தில் கிரவுஞ்ச கிரியானது இருகூறாகப் பிளவுபடக் கையிற் பிடித்த கூர்மையாகிய வேலாயுதத்தின் வலிமையைக் காண்பித்துத் தேவர்களுடைய பெரும் பகைவராகிய சூரபதுமன் முதலிய அசுரர்களைக் கொன்றருளிய சுப்பிரமணியக்கடவுள் உண்டாக்கிய பழமை யாகிய ஊரானது (யாதெனின்) சிறந்த வேதியர்கள் வாழ்ந் திருக்கும் செல்வமிகுந்த திருச்சேய்ஞலூராம். எ-று.

***செம்மை வெண்ணீற் றொருமையினார்; இரண்டு பிறப்பின் சிறப்பினார்***
***மும்மைத் தழலோம் பியநெறியார்; நான்கு வேதம் முறைபயின்றார்;***
***தம்மை ஐந்து புலனும்பின் செல்லும் தகையார்; அறுதொழிலின்***
***மெய்ம்மை ஒழுக்கம் ஏழுலகம் போற்றும் மறையோர் விளங்குவது.*** 2

(இ - ள்.) செம்மையாகிய திருவெண்ணீறுதரிக்கும் ஒருமைப்பட்ட அன்பையுடையவர்களும், சன்மத்தினாலும் கன்மத்தினாலுமாகிய இரண்டு பிறப்பின் சிறப்பினையுடையவர் களும், மூன்றக்கினிகளை வளர்க்கும் வைதிக நெறியையுடையவர் களும், நான்கு வேதங்களையும் கிரமமாக ஓதியுணர்ந்தருவர் களும், ஐம்புலன்களும் அவைகள் போம் வழியில் போகாமல் தங்கள் கருத்தின் படியே செலுத்துந் தகுதியையுடையவர்களும், அறுவகைத் தொழிலோடுகூடிய மெய்ம்மையாகிய ஒழுக்கத்தை ஏழுலகத்தாரும் புகழத்தக்கவர்களுமாகிய மறையவர்கள் விளங்கி யிருப்பது (அந்தத் திருச்சேய்ஞலூர்.) - எ-று.

***கோதில் மான்தோல் புரிமுந்நூல் குலவு மார்பிற் குழைக்குடுமி***
***ஓது கிடைசூழ் சிறுவர்களும் உதவும் பெருமை ஆசானும்***
***போதின் விளங்குந் தாரகையும் மதியும் போலப் புணர்மடங்கள்***
***மீது முழங்கு முகிலொதுங்க வேத ஒலிகள் முழங்குவன.*** 3

(இ - ள்.) குற்றமற்ற மான்றோலைப்பிணித்த முப்புரியாகிய பூணூலைத் தரித்து விளக்குகின்ற மார்பினையும், மிருதுவாகிய குடுமியையுமுடைய கூட்டமாகச் சேர்ந்து வேதமோதுகின்ற சிறுவர்களும், அவ்வேதத்தை ஓதுவிக்கின்ற பெருமை பொருந்திய ஆசாரியனும், இராக்காலத்தில் விளங்குகின்ற நக்ஷத்திரங்களையும், சந்திரனையும் போலச் சேர்ந்திருப்பதற்கிடமாகிய பலமடங்களின் மேலிடத்தில் மேகங்கள் முழங்கியொதுங்கக், கீழிடத்தில் வேதகோஷங்கள் முழங்குகின்றன. எ-று.

***யாகம் நிலவும் சாலைதொறும் மறையோர் ஈந்த அவியுணவின்***
***பாகம் நுகர வருமாலும் அயனும் ஊரும் படர்சிறைப்புள்***
***மாகம் இகந்து வந்திருக்கும் சேக்கை எனவும் வானவர்கோன்***
***நாகம் அணையும் கந்தெனவும் நாட்டும் யூப ஈட்டமுள.*** 4

(இ - ள்.) விளங்குகின்ற யாகசாலைகளிலெல்லாம் பிராமணர்கள் கொடுக்கின்ற அவிப்பாகத்தை உண்ணவருகின்ற விஷ்ணுவினாலும் பிரமனாலும் நடத்தப்படுகின்ற படர்ந்த சிறகினையுடைய கருடனும் அன்னமும் ஆகாயத்திலிருந்து வந்து தங்குகின்ற கூண்டுபோலவும், தேவேந்திரனுடைய ஐராவதமென்னும் வெள்ளை யானையைக் கட்டுந் தறிபோலவும் நாட்டியிருக்கின்ற யூபஸ்தம்பங்கள் அநேகம் உண்டு (அந்தத் திருச்சேய்ஞலூரில்.) எ-று.

***தீம்பா லொழுகப் பொழுதுதொறும் ஓம தேனுச் செல்வனவும்***
***தாம்பா டியசா மங்கணிப்போர் சமிதை இடக்கொண் டணைவனவும்***
***பூம்பா சடைநீர்த் தடம்மூழ்கி மறையோர் மகளிர் புகுவனவும்***
***ஆம்பான் மையினில் விளங்குவன அணிநீள் மறுகு பலவுமுள.*** 5

(இ - ள்.) மதுரமாகிய பால் ஒழுகும்படி காலங்கள் தோறும் ஓமத்திற்குப் பால் கொடுக்கும் பசுக்கள் போவனவும், தாங்கள் ஓதிய வேதங்களை உருவோட்டுகின்ற பிரமசாரிகள் ஓமத்தீயில் இடும்படியாகச் சமித்துக்கள் கொண்டு வருகின்றனவும், மலர்களையும் பசிய இலைகளையுடைய நீர் நிறைந்த தடாகங்களில் முழுகிப் பிராமண ஸ்திரீகள் புகுவனவுமாகிய தன்மையோடு விளங்கும் அழகிய நீண்ட வீதிகள் (அந்த ஊரில்) பல இருக்கின்றன. -எ-று.

***வாழ்பொற் பதிமற் றதன்மருங்கு மண்ணித் திரைகள் வயல்வரம்பின்***
***தாழ்வில் தரளம் சொரிகுலைப்பால் சமைத்த யாகத் தடஞ்சாலை***
***சூழ்வைப் பிடங்கள் நெருங்கியுள தொடங்கு சடங்கு முடித்தேறும்***
***வேள்வித் தலைவர் பெருந்தேர்கள் விண்ணோர் ஏறும் விமானங்கள்.*** 6

(இ - ள்.) இத்தன்மையாகிய பிரமாணர்கள் வாழ்கின்ற அழகினையுடைய அந்தத் திருச்சேய்ஞலூரில் வயல்வரம்பின் பள்ளத்தில் முத்துக்களை வீசுகின்ற அலைகளையுடைய மண்ணியாற்றின் கரையில் ஏற்படுத்திய விசாலமாகிய யாகசாலைகளைச் சூழ்ந்த இடங்களில், தாங்கள் செய்யத் தொடங்கிய யாகச் சடங்குகளைச் செய்து முடித்து, யாகத் தலைவர்கள் ஏறுகின்ற பெரியதேர்களும், தேவர்கள் ஏறுகின்ற விமானங்களும் மிகுதியாக நெருங்கியிருக்கின்றன. எ-று.

***மடையில் கழுநீர் செழுநீர்சூழ் வயலில் சாலிக் கதிர்க்கற்றைப்***
***புடையில் சுரும்பு மிடைகமுகு புனலில் பரம்பு பூம்பாளை***
***அடையில் பயிலுந் தாமரைநீள் அலரில் துயிலுங் கயல்கள்வழி***
***நடையில் படர்மென் கொடிமௌவல் நனையில் திகழுஞ் சினைக்காஞ்சி. 7***

(இ - ள்.) நீர் ஓடுகின்ற மடைகளில் செங்கழுநீரும், செழித்த நீர்சூழ்ந்த வயல்களில் நெற்கதிர்களின் கூட்டமும், அதன் பக்கங்களில் வண்டுகள் வாசனை பற்றி மொய்க்கும் கமுக மரங்களும், நீரில் பரவியிருக்கின்ற கமுகமரத்தின் பூம்பாளை களும், இலைகளையுடைய நீண்ட தாமரை மலர்களில் நித்திரை செய்கின்ற கெண்டைமீன்களும், நடக்கும் வழிகளில் படர்ந்த மிருதுவாகிய கொடிகளையுடைய முல்லைகளும், அரும்பு களால் விளங்கும் கினைகளையுடைய காஞ்சிமரங்களும் (அவ்வூரில் மிகுதியாக இருக்கின்றன. ) எ-று.

***சென்னி அபயன் குலோத்துங்கச் சோழன் தில்லைத் திருவெல்லை***
***பொன்னின் மயமாக் கியவளர் போரே(று) என்றும் புவிகாக்கும்***
***மன்னர் பெருமான் அநபாயன் வருந்தொல் மரபின் முடிசூட்டுந்***
***தன்மை நிலவு பதிஐந்தின் ஒன்றாய் நீடும் தகைத்தவ்வூர். 8***

(இ - ள்.) அபய குலசேகர சோழனும், குலோத்துங்கச் சோழனும், ஸ்ரீ சிதம்பரத்தின் திருவெல்லையைப் பொன் தகட்டினால் வேய்ந்த அச்சோழ வமிசத்திற் பிறந்து, போர் செய்கினற் ஆண்சிங்கம் போன்று, தன் காலமுழுவதும் உலகத் தைக் காக்கும் அரசர் பெருமானாகிய அநபாயச் சோழனும் அவதரித்த பழமையான மரபினராகிய சோழராசாக்கள் முடிசூட்டிக் கொண்டு அரசாட்சி செய்தற்கு இடமாகிய சிறந்த ஐந்து நகரங்களில் ஒன்றாக விளங்குந் தன்மையையுடையது; அந்தத் திருச்சேய்ஞலூர். - எ-று.

**பண்ணின் பயனா நல்லிசையும் பாலின்பயனா மின்சுவையுங்**
**கண்ணின் பயனாம் பெருகு(ஒ)ளியும் கருத்தின் பயனா மெழுத்தஞ்சும்**
**விண்ணின் பயனாம் பொழிபழையும் வேதப் பயனாஞ் சைவமும்போல்**
**மண்ணின் பயனா மப்பதியின் வளத்தின் பெருமை வரம்புடைத்தோ.**
**9**

(இ - ள்.) இராகங்களுக்குப் பயனாகிய நல்ல இசையும், பாலினுக்குப் பயனாகிய இனியசுவையும், கண்களுக்குப் பயனாகிய மிகுந்த ஒளியும், நினைப்பிற்குப் பயனாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரமும், ஆகாயத்திற்குப் பயனாகிய பொழிகின்ற மேகமும், வேதத்திற்குப் பயனாகிய சைவசமயமும் போல, உலகத்திற்குப் பயனாயமைந்திருக்கின்ற அந்தத் திருச்சேய்ஞ லூரின் வளத்தின் பெருமையானது ஒரு அளவினையுடையதோ? (அன்று) -எ-று.

**பெருமை பிறங்கும் அப்பதியின் மறையோர் தம்முள் பெருமனைவாழ்**
**தருமம் நிலவு காசிபகோத் திரத்துத் தலைமை சால்மரபில்**
**அருமை மணியும் அளித்ததுவே நஞ்சும் அளிக்கும் அரவுபோல்**
**இருமை வினைக்கும் ஒருவடிவாம் எச்ச தத்தன் உளனானான். 10**

(இ - ள்.) பெருமைவிளங்கிய அந்தத் திருச்சேய்ஞலூரில் வாழ்கின்ற பிராமணர்களுக்குள் சிறந்த இல்வாழ்க்கைக்கு வேண்டிய தருமங்களை வழுவாமல் செய்து கொண்டு வரும் காசிப கோத்திரத்தில் தலைமையாகிய குடியில் கிடைத்தற்கரிய மாணிக்கத்தையும் பிறர்க்குக் கொடுத்துப் பின் விஷத்தையும் கொடுக்கும் பாம்புபோல, நல்வினை தீவினையென்னும் இரண்டினையுஞ் செய்வதற்கு ஒரே வடிவு கொண்ட எச்சதத்த னென்பவன் ஒரு வனிருந்தான். -எ-று.

**மற்றை மறையோன் திருமனைவி வாய்ந்த மரபின் வந்துதித்தாள்**
**சுற்றம் விரும்பும் இல்வாழ்க்கைத் தொழிலாள் உலகில் துணைப்புதல்வர்**
**பெற்று விளங்குந் தவஞ்செய்தாள் பெறும்பே றெல்லைப் பயன்பெறுவாள்;**
**பற்றை எறியும் பற்றுவரச் சார்பா யுள்ள பவித்திரையாம். 11**

(இ - ள்.) மேற் சொல்லிய தன்மையைப் பெற்ற எச்சதத்தனுடைய மனைவியானவள் நல்ல மரபில் பிறந்தவள். சுற்றத்தார் விரும்பத்தக்க இல்வாழ்க்கையைக் குறைவின்றி நடத்துகின்ற நற்செய்கையை யுடையவள். உலகத்தில் தமக்குத்

துணையாய்ச் சண்டேசுர நாயனாரைப் புத்திரராகப் பெறுதற் குரிய சிறந்த தவத்தைச் செய்தவள். பெற வேண்டிய வீடு பேற்றின் முடிவாகிய பயனைப் பெறத்தக்கவள் உலகப்பற்றை நீக்குதற்குக் கருவியாகிய சிவநேசமானது வருதற்குச் சார்பான குணத்தினை யுடைய பவித்திரையென்பவ ளிருந்தாள். -எ-று.

***நன்றி புரியும் அவர்தம் பால் நன்மை மறையின் துறைவிளங்க***
***என்றும் மறையோர் குலம்பெருக ஏழு புவனங் களும்உய்ய***
***மன்றில் நடஞ்செய் பவர்சைவ வாய்மை வளர மாதவத்தோர்***
***வென்றி விளங்க வந்துதயம் செய்தார் விசார சருமனார். 12***

(இ - ள்.) நன்மையைச் செய்து வருகின்ற எச்சதத்தன் - பவித்திரை என்பவர்களினிடமாகச் சிறந்த வேதவொழுக்கங் குறைவின்றி விளங்கவும், எந்நாளும் பிராமணர்களுடைய குலம் விருத்தியடையவும், ஏழுலகத்திலுள்ளவர்களும் கடைத்தேறவும், பொன்னம்பலத்தில் ஆநந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற சிவபெருமானுடைய சைவசமயமானது வளர்ந்தோங்கவும், மகத்தாகிய தவத்தினையுடைய பெரியோர்களின் தபோமகிமை நிறைந்து விளங்கவும் விசாரசருமர் என்னும்புத்திரர் திருவவதாரஞ் செய்தருளினார். எ-று.

***ஐந்து வருடம் அவர்க்கணைய அங்கம் ஆறும் உடன்நிறைந்த***
***சந்த மறைகள் உட்படமுன் தலைவர் மொழிந்த ஆகமங்கள்***
***முந்தை அறிவின் தொடர்ச்சியினால் முகைக்கு மலரின் வாசம்போல்***
***சிந்தை மலர உடன்மலரும் செவ்வி உணர்வு சிறந்ததால். 13***

(இ - ள்.) அவ்விசாரசருமருக்கு ஐந்தாம் வயது வந்தவுடனே வேதாங்கங்களாறும் நிறைந்தஸ்வரங்களையுடைய நான்கு வேதங்களும் உட்படச் சிவபெருமான் அருளிச் செய்த ஆகமங் களும் பூர்வ சன்மத்தி லுண்டாகிய அறிவின் சம்பந்தத்தினால், அரும்பாயிருக்கும் மலரில் அடங்கியிருக்கின்ற மணம் (அலருங் காலத்தில் விளங்குவது) போலச் சித்திவிருத்தியானது விகசித்த வுடனே தாமேயறிந்து கொள்ளுகின்ற உயர்ந்த அறிவானது அவர்க்கு உண்டாயிற்று. -எ-று.

***நிகழும் முறைமை ஆண்டேழும் நிரப்பும் பருவம் வந்தெய்தப்***
***புகழும் பெருமை உபநயனப் பொருவில் சடங்கு முடித்தறிவின்***
***இகழு நெறிய அல்லாத எல்லாம் இயைந்த எனினும்தம்***
***திகழு மரபின் ஓதுவிக்கும் செய்கை பயந்தார் செய்வித்தார். 14***

(இ - ள்.) இவ்வாறு நடக்கின்ற முறைமைப்படியே அவர்க்கு ஏழுவயது நிரம்பினவுடனே நூல்களால் புகழ்ந்து சொல்லப் பட்ட பெருமையினையுடைய ஒப்பற்ற உபநயனச்சடங்கைச் செய்து முடித்து, அவரது அறிவினால் நிந்திப்பதற்கிடமில்லாத எல்லாக் கலைகளும் அறிந்திருந்தாலும், தங்கள் குலாசாரப்படி உபநயனஞ் செய்தபின்பு வேதமோதுவிக்கின்ற முறைமையான தொழிலைத் தாய்தந்தையர்கள் அவருக்குச் செய்வித்தார்கள். எ-று.

***குலவு மறையும் பலகலையும் கொளுத்து வதன்முன் கொண்டமைத்த***
***நிலவும் உணர்வின் திறங்கண்டு நிறுவும் மறையோர் அதிசயித்தார்;***
***"அலகில் கலையின் பொருட்கெல்லை ஆடுங் கழலே" எனக்கொண்ட***
***செலவு மிகுந்த சிந்தையினில் தெளித்தார் சிறிய பெருந்தகையார். 15***

(இ - ள்.) விளங்குகின்ற வேதங்களையும், பலகலைஞானங் களையும் ஓதுவிப்பதற்கு முன்னமே அப்பொருள்களைத் தாமே அறிந்து கொண்டு அமைந்து விளங்குகின்ற அவரது அறிவின் திறத்தைக் கண்டு, அவரை ஓதுந்தொழிலில் நிறுத்தும் பிராம ணர்கள் ஆச்சரியமடைந்தார்கள். அளவில்லாத எல்லா நூல்களி லும் கூறும் பொருள்களுக்கெல்லாம் முடிந்த பொருள் சிவ பெருமானுடைய திருவடியேயென்று விசாலமாகிய தமது சித்தத்தில் தெளித்து கொண்டார்; உருவத்தால் சிறியவரா யினும் உணர்வினால் பெருந்தகைமையை யுடையவராகிய விசாரசருமர். எ-று.

***"நடமே புரியுஞ் சேவடியார் நம்மை உடையார்" எனும்மெய்ம்மை***
***உடனே தோன்றும் உணர்வின்கண் ஒழியா தூறும் வழியன்பின்***
***கடனே இயல்பாய் முற்றிவருங் காதல் மேன்மேல் எழுங்கருத்தின்***
***திடம்நேர் நிற்குஞ் செம்மலார் திகழு நாளில் ஆங்கொருநாள். 16***

(இ - ள்.) ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுகின்ற திருவடியையுடைய சிவபெருமான் நம்மை அடிமையாக வுடையவரென்று அறிவினிடமாக ஒழியாமல் வளர்கின்ற உண்மையாகிய அன்பினால் செய்ய வேண்டிய அடிமைத்திறம் முதலாகிய கடமைகளை இயல்பாகவே செய்து கொண்டு வருகின்ற ஆசையானது மேன்மேலும் அதிகரிக்கின்ற திருவுள்ளக்கருத்தின் உறுதிப்பாட்டில் நிலைபெற்று நிற்கும் விசாரசருமனார் இவ்வாறு விளங்கியிருக்கும் நாள்களில் ஒரு நாள். எ-று.

***ஓது கிடையி னுடன்போவார் ஊர்ஆன் நிரையி னுடன்புக்க***
***போது மற்றங் கொருபுனிற்றா போற்றும் அவன்மேல் மருப்போச்ச***
***யாதும் ஒன்றுங் கூசாதே எடுத்த கோல்கொண் டவன்புடைப்ப***
***மீது சென்று மிகும்பரிவால் வெகுண்டு விலக்கி மெய்யுணர்ந்து. 17***

(இ - ள்.) வேதமோதுகின்ற பிராமணச் சிறுவர்களுடனே போகின்ற விசாரசருமர் ஊரிலுள்ளவர்களின் பசுமந்தையோடு கூடப் போனபொழுது, அவ்விடத்தில் ஒரு கன்று போட்ட பசுவானது தன்னை மேய்க்கின்ற இடையனைக் கொம்பால் முட்ட, அவன் மனத்தில் சிறிதும் அச்சமில்லாமல் தன் கையில் பிடித்திருக்கின்ற கோலினால் அந்தப் பசுவையடித்தான். அப்பொழுது விசாரசருமர் அவ்விடையனிடத்திற் சென்று, அப்பசுவின் மேல் வைத்திருக்கின்ற அன்பினால் அவனைக் கோபித்து, அதனை அடிப்பதை விலக்கிப் பசுவிற்குள்ள மகிமையை யுணர்ந்து. - எ-று.

***பாவுங் கலைகள் ஆகமநூல் பரப்பின் தொகுதிப் பான்மையினால்***
***மேவும் பெருமை அருமறைகள் மூல மாக விளங்குலகில்***
***யாவுந் தெளிந்த பொருள்நிலையே எய்த உணர்ந்த உள்ளத்தால்***
***ஆவின் பெருமை உள்ளபடி அறிந்தார் ஆயற் கருள்செய்வார். 18***

(இ - ள்.) பரவிய மிருதி புராணம் முதலிய கலைகளும், பலவாக விரிந்திருக்கின்ற சைவாகமங்களின் தொகுதியும், பகுதியினால் பெருமை பொருந்திய அரிய வேதங்களும் ஆகிய இவைகள் மூலமாக நிலைபெற்று விளங்கும் உலகத்தில், எல்லாப் பொருளியல்புகளையும் ஒருங்கேயுணர்ந்திருக்கின்ற மனத்தினால் பசுவினது பெருமையை உள்ளபடியே யறிந்த விசாரசருமர் அவ்விடையனுக்கு அருளிச் செய்கின்றார். எ-று.

***"தங்கும் அகில யோனிகட்கும் மேலாம் பெருமைத் தகைமையன;***
***பொங்கு புனித தீர்த்தங்கள் எல்லாம் என்றும் பொருந்துவன;***
***துங்க அமரர் திருமுனிவர் கணங்கள் சூழ்ந்து பிரியாத***
***அங்கம் அனைத்துந் தாமுடைய அல்ல வோ?நல் ஆனினங்கள். 19***

(இ - ள்.) உலகத்தில் வாழ்கின்ற எல்லா யோனிகளுக்கும் மேலாக விளங்குந் தகுதிகளையுடையனவும், நீர் பெருகுகின்ற பரிசுத்தமாகிய கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களெல்லாம் எந்நாளும், பொருந்தியிருப்பனவும், உயர்வாகிய தேவகணங்களும் முனிவர்கணங்களும் சூழ்ந்து பிரியாமலிருக்கும் எல்லா உறுப்புக்களையும் தம்மிடத்தில் உடையனவுமாயிருக்கின்றன வல்லவோ? நல்ல பசுக் கூட்டங்கள். -எ-று.

***ஆய சிறப்பி னாற்பெற்ற அன்றே மன்றுள் நடம்புரியும்***
***நாயனார்க்கு வளர்மதியும் நதியும் நகுவெண் டலைத்தொடையும்***
***மேய வேணித் திருமுடிமேல் விரும்பி ஆடி அருளதற்குத்***
***தூய திருமஞ் சனம்ஐந்தும் அளிக்கும் உரிமைச் சுரபிகள்தாம். 20***

(இ - ள்.) கனகசபையில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுகின்ற ஸ்ரீநடராசப் பெருமானுக்கு வளர்கின்ற இளம்பிறையும், கங்கையும், சிரிக்கின்ற வெண்டலைமாலையும் பொருந்திய சடையையுடைய திருமுடியின்மேல் விரும்பி அபிஷேகஞ் செய்வதற்குப் பரிசுத்தம் பொருந்திய திருமஞ்சனப் பொருள்கள் ஐந்தையும் கொடுக்கின்ற உரிமையையுடைய பசுக்கள் தமக்குரிய சிறப்பினால் பெற்றனவல்லவோ? - எ-று.

***சீல முடைய கோக்குலங்கள் சிறக்குந் தகைமைத் தேவருடன்***
***கால முழுதும் உலகனைத்துங் காக்கும் முதற்கா ரணராகும்***
***நீலகண்டர் செய்யசடை நிருத்தர் சாத்து நீறுதரும்***
***மூலம் அவதா ரஞ்செய்யும் மூர்த்தம் என்றால் முடிவென்னோ? 21***

(இ - ள்.) எக்காலமும், பரிசுத்தம் பொருந்திய பசுக் கூட்டங்கள், சிறந்த பெருமையையுடைய திருமால் பிரமன் முதலிய தேவர்களோடு, எல்லா வுலகங்களையும் காக்கின்ற முதற் காரணராயிருக்கும், காளகண்டத்தையும் சிவந்த சடையை யுமுடைய சிவபெருமான் திருமேனியில் தரித்தருளும் விபூதி யுண்டாவதற்கு மூலமாயிருக்கும் திருச்சாணம் தோன்றுவதற்குக் காரணமாயிருக்கின்றனவென்றால், இதைவிட வுயர்ந்த பொருள் வேறே என்ன இருக்கின்றது. -எ-று.

***உள்ளுந் தகைமை இனிப்பிறவே றுளவே! உழைமான் மறிக்கன்று***
***துள்ளுங் கரத்தார் அணிபணியின் சுடர்சூழ் மணிகள் சுரநதிநீர்***
***தெள்ளுஞ் சடையார் தேவர்கள்தம் பிராட்டி யுடனே சேரமிசைக்***
***கொள்ளுஞ் சினமால் விடைத்தேவர் குலமன் றோ?இச் சுரபிகுலம். 22***

(இ - ள்.) இந்தப் பசுக்ககூட்டங்கள், மான்கன்று துள்ளிக் கொண்டிருக்கும் திருக்கரத்தினையுடையவரும், தரித்திருக்கும் பாம்புகளின் ஒளிவீசும் மாணிக்கங்களைக் கங்கை நீரானது அலையால் கொழிக்கின்ற சடையினையுடையவருமாகிய சிவபெருமான், உமாதேவியாரோடு ஏறி நடத்துகின்ற கோபத் தினையுடைய பெரிய விடைத்தேவரது பத்தினிகளாகிய பசுக் களின் குலமல்லவோ? ஆதலால் இப்பசுக்களின் பெருமையைக் குறித்துச் சொல்ல வேண்டிய சிறப்புக்கள் வேறென்ன இருக்கின் றன.; (ஒன்றுமில்லை.) - எ-று.

***என்றின் னனவே பலவும்நினைந்(து) "இதத்தின் வழியே மேய்த்திந்தக்
கன்று பயில்ஆன் நிரைகாக்கும் இதன்மேல் இல்லை கடன்; இதுவே
மன்றுள் ஆடுஞ் சேவடிகள் வழுத்து நெறியா வதும்" என்று
நின்ற ஆயன் தனைநோக்கி "நிரைமேய்ப் பொழிக நீ" என்பார். 23***

(இ - ள்.) இவ்விதமாகப் பசுக்களுக்கு இருக்கும் பல உயர்வுகளையும் நினைந்து, அவைகளின் இஷ்டப்படியே மேய்த்து, இந்தக் கன்றையுடைய பசுக்ககூட்டத்தைக் காப்பதைக் காட்டிலும் சிறந்தது ஒன்றுமில்லை. இப்பசுக்களைக் காத்தலே கனகசபையில் திருநடனஞ் செய்தருளுகின்ற சிவபெருமானுடைய திருவடிகளை வணங்குவதற்குரிய மார்க்கமாவதும் என்று, அங்குநிற்கின்ற இடையனைப்பார்த்து, இனி நீ பசுக்களை மேய்க்க வேண்டிய தில்லையென்று சொல்கின்றவராயினார். எ-று

***"யானே இனிஇந் நிரைமேய்ப்பன்" என்றார்; அஞ்சி இடைமகனும்
தானோர் இறைஞ்சி விட்டகன்றான்; தாமும் மறையோர் இசைவினால்
ஆனே நெருங்கும் பேராயம் அளிப்பா ராகிப் பைங்கூழ்க்கு
வானே என்ன நிரைகாக்க வந்தார் தெய்வ மறைச்சிறுவர். 24***

(இ - ள்.) இனிமேல், நானே இப்பசுக்களை மேய்ப்பேனென்று சொன்னார். அதனைக் கேட்ட இடையனும் தான் செய்த குற்றத்திற்குப்பயந்து, அவர்க்கு எதிராக வந்து வணங்கி நீங்கிப் போயினான். பின், தெய்வத்தன்மை பொருந்திய பிராமணச் சிறுவராகிய விசாரசருமர் பசுக்களுக்குரிய பிராமணர்களின் சம்மதியின் மேல் பசுக்கள் நெருங்கியிருக்கும் பெரிய மந்தையைக் காப்பாற்றுகின்றவராகிப் பயிர்களுக்கு மேகம் போலப் பசுக்களை மேய்க்கும்படி வந்தார். எ-று.

***கோலும் கயிறும் கொண்டுகுழைக் குடுமி அலையக் குலவுமான்
தோலும் நூலும் சிறுமார்பில் துவள அரைக்கோ வணஞ்சுடரப்
பாலும் பயனும் பெருகவரும் பசுக்கள் மேய்க்கும் பான்மையினால்
சாலும் புல்லின் அவைவேண்டுந் தனையும் மிசையுந் தலைச்சென்று. 25***

(இ - ள்.) பசுமேய்குங் கோலையும், அணைகயிற்றையும் கையில் எடுத்துக் கொண்டு குடுமிமுடியானது அலையவும், விளங்குகின்ற மான்றோலோடு பூணூலானது சிறிய மார்பினிடத்தில் அசையவும், இடையில் தரித்த கோவணம் பிரகாசிக்கவும், பாலும் அதனாலுண்டாகிய பயனும் பெருகும்படி வரும் பசுக்களை மேய்க்க வேண்டுமென்னும் விருப்பத்தினால் மிகுந்த புற்களில் அப்பசுக்கள் வேண்டுமளவும் மேயத்தக்க இடத்தில் ஓட்டிக் கொண்டு போய். - எ-று.

***பதவு காலங் களில்மேய்த்தும் பறித்தும் அளித்தும் பரிவகற்றி***
***இதம்உண் துறையுள் நற்றண்ணீர் ஊட்டி அச்சம் எதிர்நீக்கி***
***அதர்நல் லனமுன் செலநீழல் அமர்வித்தமுத மதுரப்பால்***
***உதவும் பொழுது பிழையாமல் உடையோர் இல்லந் தொறும்உய்த்தார். 26***

(இ - ள்.) பசும்புல் தரையில் பசுக்களை மேய்க்க வேண்டிய காலங்களில் மேய்த்தும், மேய்க்கக் கூடாத இடத்திலிருக்கின்ற புல்லினைப்பறித்து அவைகள் உண்ணும்படி கொடுத்தும், அவைகளின் துன்பத்தை நீக்கியும், இனிமையாக நீருண்ணத்தக்க துறையிலே நல்ல நீரை உண்பித்தும், வேற்றுமிருகங்களால் அவைகளுக்கு அச்சமுண்டாகாமல் எதிர் நின்று காத்தும், நல்லவழியிலே போகும்படி செய்து, வெயிலில் நிழலிருக்கு மிடத்தில் ஓட்டியும், மதுரமாகிய பால் கொடுக்குங்காலத்தில் அப்பசுக்கள் தப்பிப் போகாமல் அவைகளுக்குரிய பிராமணர் களின் வீடுகள் தோறும் ஓட்டிக் கொண்டு போய் விடுகின்றவரா யிருந்தார். எ- று.

***மண்ணிக் கரையின் வளர்புறவின் மாடும் படுகர் மருங்கினிலும்***
***தண்ணித் திலநீர் மருதத்தண் டலைசூழ் குலையின் சார்பினிலும்***
***எண்ணிற் பெருகு நிரைமேய்த்துச் சமிதை யுடன்மேல் எரிகொண்டு***
***நண்ணிக் கங்குல் முன்புகுந்தும் நன்னாள் பலவாம் அந்நாளில். 27***

(இ - ள்.) மண்ணியாற்றின் கரைப்புறத்திலுள்ள குறுங் காட்டிலும், அவ்வாற்றின் நீர்நிற்கின்ற பள்ளங்களிலும், குளிர்ந்த முத்துக்களையுடைய நீர்வளம் பொருந்திய மருதநிலத்தைச் சேர்ந்த சோலைசூழ்ந்த கரையோரங்களிலும் அளவில்லாத பசுக்களை மேய்த்து, சமித்துக்களையும், அரணிக்கோல்களையும் எடுத்துக் கொண்டு ஊரில் வந்து, அஸ்தமித்தவுடனே வீட்டிற்குச் செல்கின்ற நல்ல நாள்கள் பலகழிகின்ற நாள்களில். எ-று.

***ஆய நிரையின் குலமெல்லாம் அழகின் விளங்கி மிகப்பல்கி***
***மேய இனிய புல்லுணவும் விரும்பு புனலும் ஆர்தலினால்***
***ஏய மனங்கொள் பெருமகிழ்ச்சி எய்தி இரவும் நண்பகலும்***
***தூய தீம்பால் மடிபெருகிச் சொரிய முலைகள் சுரந்தனவால். 28***

(இ - ள்.) மேய்தற்கினிய புல்லாகிய உணவையும், நல்ல நீரையும் உண்ணுதலினால், அப்பசுக்கூட்டங்களெல்லாம் அழகிட்டுவிளங்கி மிகுதியாகப் பெருகி மனதில் பொருந்திய

மிகுந்த மகிழ்ச்சியையடைந்து, இரவிலும், பகலிலும், பரிசுத்தம் பொருந்திய மதுரமாகிய பாலானது மடியினின்றும் பெருகிச் சொரியும்படி முலைகளைச் சுரந்தன. - எ-று.

***பூணுந் தொழில்வேள் ஆனினங்கள் அணைந்த மகிழ்ச்சி அளவின்றி***
***மனைக்கண் கன்று பிரிந்தாலும் மருவுஞ் சிறிய மறைக்கன்று***
***தனைக்கண் டருகு சார்ந்துருகித் தாயாந் தன்மை நிலைமையவாய்க்***
***கனைத்துச் சுரந்து முலைக்கண்கள் கறவா மேபால் பொழிந்தனவால். 29***

(இ - ள்.) பிராமணர்கள் நியமமாகக் கொண்டொழுகுந் தொழிலாகிய யாகச்சடங்குகளைச் செய்தற்கேதுவாக ஔபாசனத்துக்குப் பால் கொடுக்கும் பசுக்கள், காணத்தக்க பொலிவோடு முன் கறப்பதைப் பார்க்கிலும் அநேகம் பங்கு பாலைக்கறக்கின்றனவாய்த் தோன்றுகின்ற படியால், பசுக் களைப் பாதுகாக்கின்ற தகுதியாகிய அன்போடு இந்த விசார சருமரென்னும் பிரமசாரியானவர் மேய்ப்பதற்கு உடன்பட்ட பின்பு செழித்திருக்கின்றனவென்று, பிராமணர்களெல்லாம் மனமகிழ்ச்சியடைந்தார்கள். -எ-று.

***அனைத்துத் திறத்தும் ஆனினங்கள் அணைந்த மகிழ்ச்சி அளவின்றி***
***மனைக்கண் கன்று பிரிந்தாலும் மருவுஞ் சிறிய மறைக்கன்று***
***தனைக்கண் டருகு சார்ந்துருகித் தாயாந் தன்மை நிலைமையவாய்க்***
***கனைத்துச் சுரந்து முலைக்கண்கள் கறவா மேபால் பொழிந்தனவால். 30***

(இ - ள்.) பலவகை உபசாரங்களினாலும் அப்பசுக்கூட் டங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு ஓரளவில்லாமல், வீட்டில் கட்டியிருக்கும் கன்றுகள் ஒருவேளை பிரிந்திருந்தாலும் (அதனால் வருந்தாமல்,) தங்களை அன்போடு மேய்க்கின்ற பிராமணச்சிறுவராகிய கன்றினைக் கண்டு, அவரருகில் சென்று மனமுருகி, தாய்க்கு உண்டாகிய அன்பு போலக்கனைந்து மடிசுரந்து, முலைக்கண்களிலிருந்து ஒருவரும் கறவாமலிருக்கத் தாமே பாலைப் பொழிந்தன. - எ-று.

***தம்மை அணைந்து ஆன்முலைப்பால் தாமே பொழியக் கண்டுவந்து***
***செம்மை நெறியே உறுமனத்தில் திருமஞ் சனமாங் குறிப்புணர்ந்தே***
***எம்மை யுடைய வள்ளலார் எய்த நினைந்து தெளிந்ததனில்***
***மெய்ம்மைச் சிவனார் பூசனையை விரும்பும் வேட்கை விரைந்தெழலும். 31***

(இ - ள்.) விசாரசருமர் தம்மையடைந்த பசுக்கள் முலையினின்றும் தாமே பாலைச் சொரியக்கண்டு, அதனால் களிப்படைந்து, நன்மையாகிய சிவபத்திமார்க்கத்தில் செல்கின்ற தமது மனதில், இது சிவபெருமானது திருமஞ்சனத்திற்கு தகுதியாயிருக்குமென்னுங் குறிப்பையறிந்து, எம்மை யடிமையாகவுடைய அக்கடவுள் வரும்படி நினைந்து மனந்தெளிந்து, மெய்மையாகிய சிவபூசையைச் செய்ய விரும்புகின்ற ஆசையானது உண்டாகவும். எ -று.

**அங்கண்முன்னை அர்ச்சனையின் அளவின் தொடர்ச்சி விளையாட்டாப்**
**பொங்கும் அன்பால் மண்ணிமணற் புளினக் குறையில் ஆத்தியின்கீழ்ச்**
**செங்கண் விடையார் திருமேனி மணலால் ஆக்கிச் சிவாலயமும்**
**துங்க நீடு கோபுரமும் சுற்றா லயமும் வகுத்தமைத்தார். 32**

(இ - ள்.) அவ்வாறு சிவபெருமானைப் பூசை செய்ய வேண்டுமென்னும் ஆசையுண்டாகவும், முற்பிறப்பிற் செய்த, பூசாபலத்தின் தொடர்ச்சியே ஒருவிளையாட்டாக அதிகரிக்கும் அன்பினால், மண்ணியாற்றின் கரையிலிருக்கும் மணற் குன்றுகளையுடைய ஒருதிட்டில், திருவாத்திமரத்தின் கீழே, சிவந்த கண்களையுடைய ரிஷபத்தை வாகனமாகக் கொண்டருளிய சிவபெருமானது இலிங்கத் திருமேனியை மணலால் சமைத்து, அக்கடவுளுக்குத் திருக்கோயிலையும், உயர்ந்த கோபுரத்தையும், திருமதிலையும் அம்மணலினால் வகுத்துச் செய்தார். - எ-று.

**ஆத்தி மலரும் செழுந்தளிரும் முதலா அருகு வளர்புறவில்**
**பூத்த மலர்கள் தாந்தெரிந்து புனிதர் சடிலத் திருமுடிமேல்**
**சாத்த லாகுந் திருப்பள்ளித் தாமம் பலவுந் தாங்கொய்து**
**கோத்த இலைப்பூங் கூடையினிற் கொணர்ந்து மணந்தங் கிடவைத்தார். 33**

(இ - ள்.) திருவாத்திமலரும், செழுமையாகிய துளிர்களும் முதலாக அருகில் வளர்ந்த காட்டில் பூத்த பலவகை மலர்களையும் நோக்கி, அவற்றுள், சிவபெருமானது சடைமுடியின்மேல் சாத்துவதற்குத் தகுதியாயிருக்கின்ற பலவகை மலர்களையும் பறித்து, இணைத்துத்தைத்த இலையாகிய திருப்பூங்கூடையில் எடுத்துக் கொண்டு வந்து வாசனை வீசும் படி வைத்தார். - எ-று.

***நல்ல நவகும் பங்கள்பெற நாடிக் கொண்டு நாணற்பூங்***
***கொல்லை யிடத்தும் குறைமறைவும் மேவுங் கோக்கள் உடன்கூட***
***ஒல்லை அணைந்து பாலாக்கள் ஒன்றுக் கொருகா லாகஎதிர்***
***செல்ல அவையும் கனைத்துமுலை தீண்டச் செழும்பால் பொழிந்தனவால். 34***

(இ - ள்.) நன்மையாகிய புதிய குடங்களைத் தேடிச் சம்பாதித்துக் கொண்டு வந்து, நாணற்செடிகள் முளைத்திருக்கின்ற அழகிய கொல்லைகளிலும், மறைவாயிருக்கின்ற ஆற்றிடைக்குறைகளிலும் போகின்ற பசுக்களோடு கூட விரைவாகப் போய்ப் பாலுள்ள பசுக்கள் ஒவ்வொன்றுக்கு ஒரு தரமாகக் கறக்கும்படி தொட்ட பொழுதே, அவைகள் கனைத்து மதுரமாகிய பாலைச் சொரிந்தன. - எ-று.

***கொண்டு மடுத்த குடநிறையக் கொணர்ந்து விரும்புங் கொள்கையினால்***
***அண்டர் பெருமான் வெண்மணல்ஆ லயத்துள் அவைமுன் தாபித்து***
***வண்டு மருவுந் திருப்பள்ளித் தாமங் கொண்டு வரன்முறையே***
***பண்டைப் பரிவால் அருச்சித்துப் பாலின் திருமஞ் சனம்ஆட்டி. 35***

(இ - ள்.) பால்கறந்து குடங்கள் நிறைந்தவுடனே எடுத்துக் கொண்டு வந்து, விரும்பிய குணத்தோடு தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானை ஸ்தாபித்திருக்கும் வெண்மையாகிய மணலால் அமைத்த ஆலயத்தின் ஒரு புறத்தில் வைத்து, வண்டுகள் மொய்க்கின்ற மலர்களையெடுத்துக் கொண்டு, முற்பிறப்பின் வாசனையினால் தோன்றிய அன்புடனே விதிப்படி அருச்சித்து, பாலாகிய திருமஞ்சனத்தை அபிஷேகஞ் செய்து. - எ-று.

***மீள மீள இவ்வண்ணம் வெண்பால் சொரிமஞ் சனம்ஆட்ட***
***ஆள உடையார் தம்முடைய அன்பர் அன்பின் பாலுளதாய்***
***மூள அமர்ந்த நயப்பாடு முதிர்ந்த பற்று முற்றச்சூழ்***
***கோளம் அதனில் உள்நிறைந்து குறித்த பூசை கொள்கின்றார். 36***

(இ - ள்.) அடிக்கடி இவ்விதமாக வெண்மை பொருந்திய பாலைச் சொரிந்து அபிஷேகஞ் செய்ய, அடியார்களை ஆளுதற்குரியவராகிய சிவபெருமான் தமது அன்பராகிய விசாரசருமருடைய அன்பிற் கலந்து அதிகரிக்கும் படி பொருந்திய பூசைத் தொண்டில் முதிர்ந்த பேரன்பானது முற்றும் பொருட்டு, விளங்குகின்ற சிவலிங்கத்தில் கலந்து நின்று, அவர் கருதிச் செய்கின்ற பூசையை ஏற்றுக் கொண்டார். - எ-று.

**பெருமை பிறங்குஞ் சேய்ஞலூர்ப் பிள்ளை யார்தம் உள்ளத்தில்
ஒருமை நினைவால் உம்பர்பிரான் உவக்கும் பூசை உறுப்பான
திருமஞ் சனமே முதலவற்றில் தேடா தனஅன் பினில்நிரப்பி
வரும்அந் நெறியே அர்ச்சனைசெய் தருளி வணங்கி மகிழ்கின்றார். 37**

(இ - ள்.) பெருமை பொருந்திய திருச்சேய்ஞலூரில் அவதரித்தருளிய விசாரசருமனார், தமது திருவுள்ளத்தில் ஒருமைப்பட்ட அன்பினால், தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் விரும்பத்தக்க பூசையின் அங்கமாயிருக்கின்ற திருமஞ்சனமுதலாகிய பொருள்களில் தாம் சம்பாதிக்காத பிறபொருள்களை மானசிகமாக அன்பினால் பாவித்து நிரப்பி, தாம் செய்து வருகின்ற விதிப்படியே பூசைசெய்து வணங்கி மகிழ்ச்சியடைந்தார். - எ-று.

**இறையோன் அடிக்கீழ் மறையவனார் எடுத்துத் திருமஞ் சனம்ஆட்டும்
நிறைபூ சனைக்குக் குடங்கள்பால் நிரம்பச் சொரிந்து நிரைக்குலங்கள்
குறைபா டின்றி மடிபெருகக் குவிந்த முலைப்பால் குறைவின்றி
மறையோர் மனையின் முன்புதரும் வளங்கள் பொலிய வைகுமால். 38**

(இ - ள்.) சிவபெருமானுடைய திருவடிகளில் விசாரசருமர் தமது கையால் எடுத்து அபிஷேகஞ் செய்யும் நிறைந்த பூசைக்குப் பசுக்கூட்டங்கள் குடங்களில் நிறையும்படி பாலைச் சுரந்து கொடுத்தும், குறைவில்லாமல் மடியானது பெருகும் படி குவிந்திருக்கும் முலைகளினின்றும் பாலைக் குறையாமல் பிராமணர்களின் வீடுகளில் முன்போலக் கொடுக்குந் தன்மையில் சிறந்து இருக்கும். - எ-று.

**செயலிப் படியே பலநாளுஞ் சிறந்த பூசை செய்வதற்கு
முயல்வுற் றதுவே திருவிளையாட் டாக முந்நூல் அணிமார்பர்
இயல்பில் புரியும் மற்றிதனைக் கண்டித் திறத்தை அறியாத
அயல்மற் றொருவன் அப்பதியில் அந்த ணாளர்க் கறிவித்தான். 39**

(இ - ள்.) முப்புரியாகிய பூணூலையணிந்த மார்பினையுடைய விசாரசருமர் அநேகநாளாக இவ்விதமான முறைமைப் படியே சிறப்பாகிய பூசையைச் செய்யத் தொடங்கி, அதுவே ஓர் விளையாட்டாக நடத்துவதைப் பார்த்து இதன் உண்மையை அறியாத ஒரு அயலான் அவ்வூரில்வாழ்கின்ற பிராமணர்களுக்குக் (கோபமுண்டாகும்படி- விரோதமாகத்) தெரிவித்தான். எ-று.

***அச்சொற் கேட்ட அருமறையோர் "ஆயன் அறியான் என்றவற்றின்***
***இச்சை வழியே யான்மேய்ப்பேன் என்றெம் பசுக்கள் தமைக்கறந்து***
***பொச்சம் ஒழுகு மாணவகன் பொல்லாங் குரைக்க அவன்தாதை***
***எச்ச தத்தன் தனையழைமின்" என்றார் அவையில் இருந்தார்கள். 40***

(இ - ள்.) அயலான் சொல்லிய அந்தவார்த்தையைக் கேட்ட சபையிலிருந்த அரிய வேதங்களை யுணர்ந்த பிராமணர்கள், இடையனுக்குப் பசுக்களை மேய்க்கத் தெரியாதென்றும், அப்பசுக்களின் கருத்தின்படியே யான் மேய்ப்பேனென்றும் சொல்லி வஞ்சித்து, எம்முடைய பசுக்களின்பாலைக் கறந்து (தன்னிஷ்டப்படியே செலவிட்டு, அப்படிச் செய்யாதவன் போல்) பொய்வேடங்கொண்டு நடிக்கின்ற இந்தப் பிரமசாரி யினுடைய பொல்லாங்கைத் தெரிவிக்க, அவன் தந்தையாகிய எச்சதத்தனை அழையுங்களென்று சொன்னார்கள். - எ-று.

***ஆங்கு மருங்கு நின்றார்கள் அவ்வந் தணன்தன் திருமனையின்***
***பாங்கு சென்று மற்றவனை அழைத்துக்கொண்டு வரப்பரந்த***
***ஓங்கு சபையோர் அவனைப்பார்த்(து) "ஊரா னிரைமேய்த்(து) உன் மகன்செய்***
***தீங்கு தன்னைக் கேள்" என்று புகுந்த பரிசு செப்புவார். 41***

(இ - ள்.) (அப்படிச் சொன்ன பொழுது) அங்கே சபையினருகில் நின்ற எவலாளர்கள் அவ்வெச்சதத்தனுடைய திருமாளிகைக்குப் போய், அவனை அழைத்துக் கொண்டு வந்தார்கள்; மிகுதியாகப் பரவியிருக்கின்ற அச்சபையிலுள்ள வர்கள் அவ்வெச்சதத்தனைப் பார்த்து, ஊராருடைய பசுக்களை மேய்கின்றேனென்று சொல்லி மேய்த்து, உன் மகன் செய்த தீங்கைக் கேளென்று நடந்த செய்கையைச் சொல்லத் தொடங்கினார்கள். - எ-று.

***"அந்தண் மறையோர் ஆகுதிக்குக் கறக்கும் பசுக்களா னவெலாம்***
***சிந்தை மகிழ்ந்து பரிவினால் திரளக் கொடுபோய் மேய்ப்பான்போல்,***
***கந்தம் மலிபூம் புனல்மண்ணி மணலிற் கறந்து பாலுகுத்து,***
***வந்த பரிசே செய்கின்றான் என்றான்" என்று வாய்மொழிந்தார். 42***

(இ - ள்.) பிராமணர்கள் ஓமத்தின் ஆகுதிக்குப் பால் கறக்கின்ற பசுக்களையெல்லாம் மலமகிழ்ந்து அன்போடு மேய்க்கிறவன் போலச் சேர்த்துக் கொண்டு போய், வாசனை வீசுகின்ற மலர்கள் பொருந்திய நீரையுடைய மண்ணியாற்றின்

மணலில் பாலைக்கறந்து வீணாகச் சொரிந்து, தன் மனம்வந்தபடி செய்கின்றானென்று ஒருவன் வந்து சொன்னதாகத் தங்கள் கருத்தைச் சொன்னார்கள். - எ-று.

***மறையோர் மொழியக் கேட்டஞ்சிச் "சிறுமா ணவகன் செய்தஇது***
***இறையும் நான்முன் பறிந்திலேன்; இதற்கு முன்பு புகுந்ததனை,***
***நிறையும் பெருமை அந்தணர்காள்! பொறுக்க வேண்டும் நீங்கள்எனக்,***
***குறைகொண் டிறைஞ்சி" "இனிப்புகுதிற் குற்றம் எனதே யாம்" என்றான்.***
***43***

(இ - ள்.) (எச்சதத்தன் தன்பிள்ளைசெய்த குற்றத்தைக் குறித்துப்) பிராமணர்கள் சொல்லக் கேள்விப்பட்டுப் பயங்கொண்டு, சிறுபிள்ளையாகிய என்குமாரன் செய்த இக்குற்றத்தை இதற்கு முன்பு நான் கொஞ்சமும் அறியேன். நீங்கள் எனக்குத் தெரிவிப்பதற்கு முன்னே நடந்தசங்கதியைக் குறித்துப் பெருமை பொருந்திய மறையவர்களே! நீங்கள் மன்னிக்க வேண்டுமென்று அவர்களைக் குறையிரந்து வணங்கி, இனிமேல் அவன் இவ்வாறு செய்வானாயின் அக்குற்றம் யான்செய்ததே யாகுமென்று சொன்னான். - எ-று.

***அந்த ணாளர் தமைவிடைகொண் டந்தி தொழுது மனைபுகுந்து,***
***"வந்த பழியொன்(று)" எனநினைந்தே மகனார் தமக்கு வாய்நேரான்,***
***"இந்த நிலைமை அறிவேன்"என் றிரவு கழிந்து நிரைமேய்க்க,***
***மைந்த னார்தாம் போயினபின் மறைந்து சென்றான் மறைமுதியோன். 44***

(இ - ள்.) வேதங்களையுணர்ந்த முதியோனாகிய எச்சதத்தன் இவ்விதமாகச் சொல்லி, அச்சபையிலிருந்த பிராமணர்களிடத்தில் விடை பெற்றுக் கொண்டு மாலைக் காலத்தில் செய்ய வேண்டிய அனுஷ்டானத்தை முடித்துத் தன் வீட்டிற்கு வந்து, இப்புத்திரனால் நமக்குவந்த பழி இது ஒன்றென்று நினைத்து, அவர்க்கு இச்செய்தியைத் தெரிவிக் காமல், இவன் செய்யும் இச்செயலை யான் சோதிக்கவேண்டு மென்றிருந்து, அன்றிரவு கழிந்து விசாரசருமர் பசுக்களை மேய்க்கப் போன பின்பு, அவர்க்குத் தெரியாமல் மறைவாக அவர்பின்னே போயினான். - எ-று.

***சென்ற மறையோன் திருமகனார் சிறந்த ஊர்ஆன் நிரைகொடு போய்,***
***மன்றல் மருவும் புறவின்கண் மேய்ப்பார் மண்ணி மணற்குறையில்,***
***அன்று திரளக் கொடுசென்ற அதனை அறிந்து மறைந்தப்பால்,***
***நின்ற குரவின் மிசையேறி நிகழ்வ தறிய ஒளித்திருந்தான். 45***

(இ - ள்.) அவ்வாறு மறைந்து பின்னே சென்ற எச்சதத்தன், தனது செல்வப்புத்திரராகிய விசாரசருமர் சிறப்புப் பொருந்திய அவ்வூரிலுள்ள பசுக்கூட்டங்களை ஓட்டிக் கொண்டு போய் மலர்களின் வாசனை நிறைந்த சிறுகாட்டில் மேய்க்கின்றவர், மண்ணியாற்றிலுள்ள மணற்றிட்டில் அன்றைக்குத் திரளாக ஓட்டிக் கொண்டு போனதைப் பார்த்து, மறைவாக அருகிலிருந்த ஒரு குராமரத்தில் ஏறி, அங்கே நடப்பதை அறியும்படி ஒளித்துக் கொண்டிருந்தான். - எ-று.

***அன்பு புரியும் பிரமசா ரிகளும் மூழ்கி அரனார்க்கு,***
***முன்பு போல மணற்கோயில் ஆக்கி முகைமென் மலர்கொய்து,***
***பின்பு வரும்ஆன் முலைபொழிபால் பெருகுங் குடங்கள் பேணுமிடந்,***
***தன்பாற் கொணர்ந்து தாபித்துப் பிறவும் வேண்டு வனசமைத்தார். 46***

(இ - ள்.) சிவபெருமானிடத்திலேயே எப்பொழுதும் அன்பைச் செலுத்துகின்ற பிரமாசாரியாகிய விசாரசருமரும், மண்ணியாற்றில் ஸ்நானஞ் செய்து, சிவபெருமானுக்குத் தாம் முன்பு செய்தது போல மணலினால் திருக்கோயிலும், சிவலிங்க முஞ்செய்து, மலர்கின்ற மிருதுவாகிய மலர்களைப் பறித்துக் கொண்டு வந்து வைத்து, பின்பு பசுக்கள் மடியினின்றும் பொழிந்த பால்நிறைந்த குடங்களைவைக்க வேண்டிய இடத்தில் கொண்டு வந்து ஸ்தாபித்து, பூசைக்கு வேண்டுவனவாகிய பிறபொருள்களையும் சித்தப்படுத்தினார். - எ-று.

***நின்ற விதியின் விளையாட்டால் நிறைந்த அரும்பூ சனைதொடங்கி***
***ஒன்றும் உள்ளத் துண்மையினால் உடைய நாதன் திருமுடிமேல்,***
***மன்றல் விரவுந் திருப்பள்ளித் தாமஞ் சாத்தி மஞ்சனமா,***
***நன்று நிறைதீம் பாற்குடங்கள் எடுத்து நயப்புற் றாட்டுதலும். 47***

(இ - ள்.) சைவாகமத்தில் நிலைபெற்ற விதிப்படியே விளையாட்டாக நிறைந்த அருமையாகிய பூசனையைச் செய்யத் தொடங்கி, தமது மனதில் பொருந்திய உண்மையாகிய அன்போடு தம்மை அடிமையாகவுடைய சிவபெருமானது திருமுடியின்மேல் வாசனை பொருந்திய மலர்களை எடுத்துச் சாத்தி, திருமஞ் சனமாக நன்றாக நிறைந்த மதுரமான பாற்குடங்களையெடுத்து விருப்பத்தோடு அபிஷேகஞ் செய்த வளவில். - எ-று.

**பரவ மேன்மேல் எழும்பரிவும் பழைய பான்மை மிகும்பண்பும்,**
**விரவ மேதக் கவர்தம்பால் மேவும் பெருமை வெளிப்படுப்பான்,**
**அரவமேவுஞ் சடைமுடியார் அருளாம் என்ன அறிவழிந்து,**
**குரவ மேவு முதுமறையோன் கோப மேவும் படிகண்டான். 48**

(இ - ள்.) வணங்குதலால் மேலும் மேலும் அதிகரித்தெழு கின்ற அன்பும், முற்பிறப்பின் வாசனையினால் உண்டாகிய முறைமையும் பொருந்த, மேன்மையை யுடைய விசாரசருமரிடத் தில் பொருந்திய பெருமையை யாவர்க்கும் வெளிப்படுத்தும் பொருட்டு, சர்ப்பத்தையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருள் வெளிப்பட்டது போல, குராமரத் தில் ஏறியிருந்த கிழப்பிராமணனாகிய எச்சதத்தன் புத்தி மயங்கிக் கோபமுண்டாகும்படி பார்த்தான். - எ-று.

**கண்ட போதே விரைந்திழிந்து கடிது சென்று கைத்தண்டு,**
**கொண்டு மகனார் திருமுதுகில் புடைத்துக் கொடிதாம் மொழிகூறத்,**
**தொண்டு புரியுஞ் சிறியபெருந் தோன்ற லார்தம் பெருமான்மேல்,**
**மண்டு காதல் அருச்சனையின் வைத்தார் மற்றொன் றறிந்திலரால். 49**

(இ - ள்.) எச்சதத்தன் அவர் செய்கையைப் பார்த்த பொழுதே குராமரத்தினின்றும் விரைவாக இறங்கி ஓடி, கையில் வைத்திருக்குங் கோலினால் தன் புத்திரராகிய விசாரசரும ருடைய முதுகில் அடித்துக் கொடிய வார்த்தைகளைச் சொல்ல, பூசைத் தொண்டு செய்து கொண்டிருக்கின்ற சிவபெருமான் விஷயத்தில் அதிகரித்திருக்கின்ற பேரன்பு பொருந்திய மனதைப் பூசிக்கும் முறைமையில் செலுத்தியிருக்கின்ற படியால், எச்சதத்தன் அடித்தல் முதலிய வேறொன்றையும் அறியாத வராயிருந்தார். - எ-று.

**மேலாம் பெரியோர் பலகாலும் வெகுண்டோன் அடிக்க வேறுணரார்,**
**பாலார் திருமஞ் சனம்ஆட்டும் பணியிற் சலியாதது கண்டு,**
**மாலா மறையோன் மிகச்செயிர்த்து வைத்த திருமஞ்சனக் குடப்பால்,**
**காலால் இடறிச் சிந்தினான் கையாற் கடைமைத் தலைநின்றான். 50**

(இ - ள்.) எச்சதத்தன் பின்னுங் கோபமுடையவனாகிப் பலதரம் கோலினால் அடிக்கவும், திருவருட் செல்வராகிய விசாரசருமர் (தாம் பூசைசெய்தலே யன்றி அவன் அடித்தலாலுண்டாகிய வருத்தம்) ஒன்றுந் தோன்றாதவராய்ப் பாலினாலாகிய திருமஞ்சனத்தை அபிஷேகஞ் செய்யும்

திருத்தொண்டில் தவறாமலிருப்பதைக்கண்டு, அஞ்ஞானத்தை யுடைய அவ்வெச்சதத்தன் மிகுந்த கோபங் கொண்டு, அருகில் வைத்திருக்கின்ற திருமஞ்சனக் குடத்திலிருந்தபாலைத் தன் காலினால் உதைத்துக் கவிழ்த்தான். - எ-று.

***சிந்தும் பொழுதில் அதுநோக்குஞ் சிறுவர் இறையில் தீயோனைத்,***
***தந்தை எனவே அறிந்தவன்தன் தாள்கள் சிந்தும் தகுதியினால்,***
***முந்தை மருங்கு கிடந்தகோல் எடுத்தார்க் கதுவே முறைமையினால்,***
***வந்து மழுவா யிடஎறிந்தார்; மண்மேல் வீழ்ந்தான் மறையோனும்.*** **51**

(இ - ள்.) திருமஞ்சனக் குடத்திலிருந்த பாலைச் சிந்தின பொழுது, அதைப் பார்த்த விசாரசருமர் அந்த நிமிஷத்திலேயே கொடியவனாகிய எச்சதத்தனைத் தந்தையென்றறிந்து கொண்டு, அவன் கால்களைத் துணிக்க வேண்டுமென்னுங் கருத்துள்ள வராய்த் தமக்கு முன் அருகில் கிடந்த ஒரு கோலை எடுத்த பொழுது, அக்கோலே அவர் கருத்தின் படி முழுப்படையாய்க் கிடக்க, அதனால் அவன் கால்களைவெட்டினார். அப்பொழுது எச்சதத்தனும் நிலத்தில் விழுந்து இறந்தான். - எ-று.

***எறிந்த அதுவே அர்ச்சனையில் இடையூ றகற்றும் படையாக,***
***மறிந்த தாதை இருதாளும் துணித்த மைந்தர் பூசனையில்,***
***அறிந்த இடையூ றகற்றினராய் முன்போல் அருச்சித் திடப்புகலும்,***
***செறிந்த சடைநீள் முடியாரும் தேவி யோடும் விடையேறி.*** **52**

(இ - ள்.) எறியப்பட்ட அம்மழுப்படையே சிவபூசை காலத்தில் உண்டாகிய விக்கினத்தை ஒழிக்கின்ற ஆயுதமாக இருக்க, தடை செய்த தமது தந்தையாகிய எச்சதத்தனுடைய இரண்டு கால்களையும் வெட்டிய விசாரசருமர் தாம் செய்யும் சிபூசையில் சம்பவித்த வியாகுலத்தை நீக்கினவராய் முன்போலப் பூசை செய்யத்தொடங்கவும், நெருங்கிய சடையினால் நீண்ட திருமுடியினையுடைய சிவபெருமானும் உமாதேவியாரோடும் ரிஷபவாகனத்தில் எழுந்தருளி. - எ-று.

***பூத கணங்கள் புடைசூழப் புராண முனிவர் புத்தேளிர்***
***வேத மொழிகள் எடுத்தேத்த விமல மூர்த்தி திருவுள்ளம்***
***காதல் கூர வெளிப்படலும் கண்டு தொழுது மனங்களித்துப்***
***பாத மலர்கள் மேல்விழுந்தார் பத்தி முதிர்ந்த பாலகனார்.*** **53**

(இ - ள்.) பூதக்கூட்டங்கள் பக்கத்தில் சூழவும், பழமையாகிய முனிவர்களும், தேவர்களும் வேதவாக்கியங்களால் புகழ்ந்து

துதிக்கவும், மலரகிதராகிய சிவபெருமான் திருவுள்ளத்தில் கருணை மிகுதியாகக் காட்சி கொடுத்தருளவும், முதிர்ந்த அன்பினையுடைய சிறுவராகிய விசாரசருமர் தரிசித்துக் கைகூப்பித்தொழுது மனதில் களிப்புற்று, அப்பெருமானது தாமரை மலர் போன்ற திருவடிகளில் விழுந்து சாஷ்டாங்கமாக வணங்கினார். - எ-று.

***தொடுத்த இதழி சூழ்சடையார் துணைத்தாள் நிழற்கீழ் விழுந்தவரை,***
***எடுத்து நோக்கி "நம்பொருட்டால் ஈன்ற தாதை விழஎறிந்தாய்;***
***அடுத்த தாதை இனிஉனக்கு நாம்" என் றருள்செய்(து) அணைத்தருளி***
***மடுத்த கருணை யால்தடவி உச்சி மோந்து மகிழ்ந்தருள. 54***

(இ - ள்.) தொடுக்கப்பட்ட கொன்றைமலர்மாலையைத் தரித்த சடைமுடியையுடைய சிவபெருமான் தமது இரண்டு திருவடிகளில் வீழ்ந்து வணங்கின விசாரசருமரைத் திருக்கரத்தினால் எடுத்துக் கிருபாநோக்கஞ் செய்து, எமக்காகவே, உன்னைப் பெற்ற தகப்பன் இறக்கும்படி அவனுடைய கால்களை வெட்டினாய்; ஆதலால், இனிமேல் நாமே உனக்குரிய தந்தை யாயினோமென்று அருளிச் செய்து, (திருமார்பில்) அணைத்து, நிறைந்த கருணையினால் உடலைத் தடவி, அரவது உச்சியை மோந்து மகிழ்ந்தருளவும் எ- று.

***செங்கண் விடையார் திருமலர்க்கை தீண்டப் பெற்ற சிறுவனார்***
***அங்கண் மாயை யாக்கையின்மேல் அளவின் றுயர்ந்த சிவமயமாய்ப்***
***பொங்கி எழுந்த திருவருளின் மூழ்கிப் பூமேல் அயன்முதலாம்***
***துங்க அமரர் துதிசெய்யச் சூழ்ந்த ஒளியில் தோன்றினார். 55***

(இ - ள்.) சிவந்த கண்களையுடைய ரிஷபத்தை வாகனமாகக் கொண்டருளிய சிவபெருமான் அழகிய தாமரை மலர் போன்ற திருக்கைகளால் தீண்டும்படி பெற்றுக் கொண்ட விசாரசருமர் அவ்விடத்தில் மாயாகாரியமாகிய தேகத்தின் மேல் அளவின்றி உயர்ந்த சிவசொரூபத்தையடைந்து, அதிகரித்தெழுந்த திருவருளாகிய வெள்ளத்தில் முழுகினவராய்த் தாமரை மலரில் வாழும் பிரமன் முதலாகிய உயர்ந்த தேவர்கள் துதிக்கும்படி பரவிய ஒளியோடு விளங்கினார். - எ-று.

***அண்டர் பிரானுந் தொண்டர்தமக் கதிப னாக்கி "அனைத்துநாம்***
***உண்ட கலமும் உடுப்பனவும்சூடு வனவும்உனக்காகச்***
***சண்டீ சனுமாம் பதந்தந்தோம்" என்றங் கவர்பொற் றடமுடிக்குத்***
***துண்ட மதிசேர் சடைக்கொன்றை மாலை வாங்கிச் சூட்டினார். 56***

(இ - ள்.) தேவர்களுக்கு நாயகராகிய சிவபெருமானும் அவரைத் திருத்தொண்டர்களுக்குத் தலைவராகச் செய்து, நாம் ஏற்றுக் கொண்ட அமுதும், பரிவட்டமும், தரிக்கப்பட்ட மாலை முதலியனவும் ஆகிய எல்லாம் உனக்கே கிடைக்கும்படி சண்டீ சர்பதத்தையும் கொடுத்தோம் என்று அருளிச் செய்து, அவ் விசாரசருமருடைய அழகிய திருமுடியின்மேல், இளம்பிறையை யணிந்த தமது சடைமுடியிலுள்ள கொன்றைமலர் மாலையை யெடுத்துச் சூட்டியருளினார். - எ-று.

***எல்லா உலகும் ஆர்ப்பெடுப்ப எங்கும் மலர்மா ரிகள்பொழியப்***
***பல்லா யிரவர் கணநாதர் பாடி ஆடிக் களிபயிலச்***
***சொல்லார் மறைகள் துதிசெய்யச் சூழ்பல் லியங்கள் எழச்சைவ***
***நல்லா றோங்க நாயகமாம் நங்கள் பெருமான் தொழுதணைந்தார். 57***

(இ - ள்.) சர்வலோகத்திலுள்ளவர்களும் மகிழ்ச்சியினால் அரகரவென்று ஆரவாரிக்கவும், தேவர்கள் எவ்விடத்திலும் புஷ்பவருஷங்கள் பொழியவும், அநேகமாயிரம் சிவகண நாதர்கள் புகழ்ந்து பாடி ஆனந்தக் கூத்தாடிக் களிப்படையவும், சிறந்த வேதங்கள் துதிசெய்யும், நாற்புறத்திலுஞ் சூழ்ந்த பலவாத்தியங்கள் முழங்கவும், நன்மை பொருந்திய சைவசமய மானது நிலைபெற்றோங்கவும், நமது தலைவராகிய சண்டேசுர நாயானார் சிவபெருமானைத் தொழுது சிவலோகத்தை யடைந்தார். - எ-று.

***ஞாலம் அறியப் பிழைபுரிந்து நம்பர் அருளால் நான்மறையின்***
***சீலந் திகழுஞ் சேய்ஞலூர்ப் பிள்ளை யார்தந் திருக்கையில்***
***கோல மழுவால் ஏறுண்டு குற்றம் நீங்கிச் சுற்றமுடன்***
***மூல முதல்வர் சிவலோகம் எய்தப் பெற்றான் முதுமறையோன். 58***

(இ - ள்.) முதிர்ந்த வேதியனாகிய எச்சதத்தன் உலகத்தார் அறியும் படி சிவபூசைக்கு இடையூறாகிய குற்றத்தைச் செய்து, சிவபெருமானது திருவருளினால் நான்கு வேதங்களிலும் சொல்லப்பட்ட நல்லொழுக்கமானது விளங்கப் பெற்ற திருச்சேய்ஞலூரில் அவதரித்தருளிய சண்டேசுர நாயனாரது திருக்கரத்தில் தாங்கிய அழகிய மழுப்படையினால் வெட்டுப் பட்டு, தான் முன்பு செய்த குற்றத்தினின்று நீங்கித் தன் சுற்றத் தாரோடு மூலகாரணராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கயிலையை யடைந்தான். - எ-று.

(இ-ள்.) உயர்ந்த இரத்தினங்கள் பதித்த பல்லக்கில் மிருதுவாகிய நடையையுடைய மயில்போன்ற புனிதவதியாரைத் தாமரை மலராகிய ஆசனத்தில் வீற்றிருக்கும் ஒப்பற்ற சீதேவியைப் போல ஏற்றிக் கொண்டு, அழகிய இடுதிரையை விடுத்து, ஆசைபொருந்திய சுற்றத்தார்களும் இனிய சொற்களையுடைய சிலமாதர்களும் சூழ்ந்துவரப் பிரயாணத்தில் வெகுதூரம் நீங்கிப் போனார்கள். -எ-று.

***சிலபகல் கடந்து சென்று செந்தமிழ்த் திருநா டெய்தி***
***மலர்புகழ்ப் பரம தத்தன் மாநகர் மருங்கு வந்து***
***குலமுதல் மனைவி யாரைக் கொண்டுவந் தணைந்த தன்மை***
***தொலைவில்சீர்க் கணவ னார்க்குச் சொல்லிமுன் செல்லவிட்டார். 43***

(இ-ள்.) இடையில் சிலநாள்கள் கழியப்போய்ச் செந்தமிழ் வழங்கும் பாண்டி நாட்டையடைந்து, பரவிய கீர்த்தியையுடைய பரமதத்தன் வாசஞ்செய்யும் பெரியபட்டணத்துக்குச் சமீபத்தில் வந்து, குலத்துக்கு முதல்மனைவியாகிய புனிதவதியாரை அழைத்துக் கொண்டு வந்த தன்மையைக் கெடாத சிறப்பினையுடைய கணவனாகிய பரமதத்தனுக்கு முன்னேபோய்த் தெரிவிக்கும்படி சொல்லியனுப்பினார்கள். -எ-று.

***வந்தவர் அணைந்த மாற்றங் கேட்டலும் வணிகன் தானும்***
***சிந்தையில் அச்சம் எய்திச் "செழுமணம் பின்பு செய்த***
***பைந்தொடி தனையுங் கொண்டு பயந்தபெண் மகவினோடு***
***முந்துறச் செல்வேன்" என்று மொய்குழ லவர்பால் வந்தான். 44***

(இ-ள்.) தனது மனைவியார் வந்து சேர்ந்தாரென்னும் செய்தியைக் கேட்டவுடனே பரமதத்தனும் மனதில் அச்சமடைந்து, இரண்டாவது செழுமையாகக் கலியாணஞ்செய்து கொண்ட மனைவியையும் தான் அவளிடமாகப் பெற்ற பெண் குழந்தையையும் அழைத்துக் கொண்டு சீக்கிரம் போவேனென்று நெருங்கிய கூந்தலையுடைய புனிதவதியாரிடத்தில் வந்தான். -எ-று.

***தானும்அம் மனைவி யோடும் தளர்நடை மகவி னோடும்***
***மானிளம் பிணைபோல் நின்ற மனைவியார் அடியில் தாழ்ந்தே***
***"யான்உம தருளால் வாழ்வேன்; இவ்விளங் குழவி தானும்***
***பான்மையால் உமது நாமம்" என்றுமுன் பணிந்து வீழ்ந்தான். 45***

(இ-ள்.) அப்பரமதத்தனும் தன்னுடைய இரண்டாவது மனைவியோடும் தளர்ந்த நடையையுடைய பெண் குழந்தையோடும் இளமைபொருந்திய பெண் மான் போல் நின்ற முதல்மனைவியாராகிய புனிதவதியாருடைய திருவடிகளில் வணங்கி, அடியேன் உம்முடைய கருணையினாலே வாழ்கின்றேன், இந்த இளங்குழந்தைக்கும் முறைமைப்படி உம்முடைய திருநாமத்தையே தரித்திருக்கின்றேனென்று முன்னே சாஷ்டாங்கமாக வணங்கினான். -எ-று.

***கணவர்தாம் வணங்கக் கண்ட காமர்பூங் கொடிய னாரும்***
***அணைவுறுஞ் சுற்றத் தார்பால் அச்சமோ டொதுங்கி நிற்ப***
***உணர்வுறு கிளைஞர் வெள்கி "உன்திரு மனைவி தன்னை***
***மணமலி தாரி னாய்!நீ வணங்குவ தென்கொல்!" என்றார். 46***

(இ-ள்.) நாயகனாகிய பரமதத்தன் தம்மை வணங்கப்பார்த்த அழகிய பூங்கொடி போன்ற புனிதவதியாரும் தம்மோடுகூட வந்த சுற்றத்தார்களிடமாகப் பயத்தோடு ஒதுங்கி நிற்க, விவேகத்தையுடைய சுற்றத்தார்கள் இவன் செய்கைக்கு வெட்கப்பட்டு (அப்பரமதத்தனைப் பார்த்து) வாசனை பொருந்திய மலர்மாலையைத் தரித்த பரமதத்தனே! நீ உன்னுடைய அழகிய மனைவியை வணங்குகிறது என்ன காரணமென்று கேட்டார்கள். -எ-று.

***மற்றவர் தம்மை நோக்கி "மானுடம் இவர்தாம் அல்லர்;***
***நற்பெருந் தெய்வ மாதல் நானறிந் தகன்ற பின்பு***
***பெற்றஇம் மகவு தன்னைப் பேரிட்டேன்; ஆத லாலே***
***பொற்பதம் பணிந்தேன்; நீரும் போற்றுதல் செய்மின்" என்றான். 47***

(இ-ள்.) அவ்வாறு கேட்ட சுற்றத்தார்களைப் பரமதத்தன் பார்த்து, இவர் மானுடப் பெண்ணல்லர்; நல்ல பெரிய தெய்வப் பெண்ணாயிருத்தலை நான் தெரிந்து இவரை விட்டு நீங்கினபின்பு, இரண்டாவது கலியாணஞ் செய்து பெற்ற இப்பெண்குழந்தைக்கு இவர் திருநாமத்தையிட்டு அழைத்தேன்; ஆகையால் இவருடைய அழகிய திருவடிகளை வணங்கினேன்; நீங்களும் இவரைத் தெய்வமாக நினைத்து வணங்குகளென்று சொன்னான். -எ-று.

**என்றலுஞ் சுற்றத் தாரும் "இதுஎன்கொல்!" என்று நின்றார்**
**மன்றலங் குழலி னாரும் வணிகன்வாய் மாற்றங் கேளாக்**
**கொன்றைவார் சடையினார்தங் குரைகழல் போற்றிச் சிந்தை**
**ஒன்றிய நோக்கில் மிக்க உணர்வுகொண் டுரைசெய் கின்றார். 48**

(இ-ள்.) இவ்வாறு பரமதத்தன் சொன்ன பின்பு உறவினர்களும் இது என்ன ஆச்சரியமென்று திகைத்து நின்றார்கள்; வாசனை வீசுகின்ற அழகிய கூந்தலையுடைய புனிதவதியாரும் பரமதத்தனுடைய வாயிற்பிறந்த சொல்லைக்கேட்டு, கொன்றை மலர்மாலையைத் தரித்த நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானது சப்திக்கின்ற சிலம்பையணிந்த திருவடிகளை வணங்கி, மனதில் பொருந்திய அன்போடு பேருணர்ச்சி கொண்டு சொல்லத் தொடங்கினார். -எ-று.

**"ஈங்கிவன் குறித்த கொள்கை இது; இனி இவனுக் காகத்**
**தாங்கிய வனப்பு நின்ற தசைப்பொதி கழித்திங் குன்பால்**
**ஆங்குநின் தாள்கள் போற்றும் பேய்வடி(வு) அடியே னுக்குப்**
**பாங்குற வேண்டும்" என்று பரமர்தாள் பரவி நின்றார். 49**

(இ-ள்.) இப்பரமதத்தன் மனதிற்குறித்த எண்ணம் இவ்வாறிருக்கின்றது; அதனால், இனிமேல் இவன்பொருட்டு சுமந்திருந்த அழகமைந்த மாமிசப் பொதியை இங்கு ஒழித்து, ஸ்ரீகயிலாசகிரியில் உம்மிடத்தில் சூழ்ந்து நிற்கின்ற சிவகணங்கள் போற்றுதற்குரிய பேய்க்கணங்களின் வடிவத்தை அடியேனுக்கு முறைமையாகத் தந்தருளவேண்டுமென்று சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி நின்றார். -எ-று.

**ஆனஅப் பொழுது மன்றுள் ஆடுவார் அருளி னாலே**
**மேனெறி உணர்வு கூர வேண்டிற்றே பெறுவார் மெய்யில்**
**ஊனடை வனப்பை எல்லாம் உதறிஎற் புடம்பே யாக**
**வானமும் மண்ணும் எல்லாம் வணங்குபேய் வடிவம் ஆனார். 50**

(இ-ள்.) புனிதவதியார் அவ்வாறு வேண்டி வணங்கி நின்றபொழுது, கனக சபையில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும் சிவபெருமானுடைய திருவருளினால் மேலான முத்தி நெறியை யடைதற்கேதுவாகிய உணர்ச்சி அதிகரிக்கத் தாம் வேண்டியவாறே பெறுகின்றவராகிய புனிதவதியார் தமது திருமேனியில் மாமிசத்தைப் பற்றியிருந்த அழகையெல்லாம் உதறிவிட்டு எலும்புடம்பாக விண்ணுலகமும் மண்ணுலகமுமாகிய எல்லாவுலகங்களும் வணங்குதற்குரிய பேய் வடிவத்தை யடைந்தார். -எ-று.

***மலர்மழை பொழிந்த தெங்கும்; வானதுந் துபியின் நாதம்***
***உலகெலாம் நிறைந்து விம்ம உம்பரும் முனிவர்தாமும்***
***குலவினர்; கணங்கள் எல்லாங் குணலையிட் டன; முன் நின்ற***
***தொலைவில்பல் சுற்றத் தாரும் தொழுதஞ்சி அகன்று போனார். 51***

(இ-ள்.) எவ்விடத்திலும் கற்பகமலர்மாரி பொழிந்தது; தேவதுந்துபியின் ஒலியானது எவ்விடத்திலும் நிறைந்து சப்திக்கத் தேவர்களும், முனிவர்களும் கொண்டாடினார்கள்; பூதகணங்களெல்லாம் வீராவேசத்தால் கொக்கரித்தன; புனிதவதியாருக்கு முன்னேநின்ற அளவில்லாத பல உறவினர் களும் அவரை வணங்கிப் பயந்து நீங்கிப் போயினார்கள். -எ-று.

***உற்பவித் தெழுந்த ஞானத் தொருமையின் உமைகோன் தன்னை***
***அற்புதத் திருவந் தாதிஅப்பொழு(து) அருளிச் செய்வார்***
***"பொற்புடைச் செய்ய பாத புண்டரீ கங்கள் போற்றும்***
***நற்கணத் தினில்ஒன் றானேன் நான்" என்று நயந்து பாடி. 52***

(இ-ள்.) தம் உள்ளத்தில் தோன்றியெழுந்த சிவஞானத்தின் ஒருமையினால் உமாதேவிநாயகராகிய சிவபெருமானைக் குறித்து "அற்புதத்திருவந்தாதி" என்னும் பிரபந்தத்தை அப்பொழுதே அருளிச் செய்கின்றவராய், அழகு பொருந்திய சிவந்த திருவடித் தாமரைகளைத் துதிக்கின்ற நல்ல அடியார் திருக்கூட்டத்தில் நானும் ஒன்றாய்விட்டேனென்று விரும்பிப் பாடியருளி. -எ-று.

***ஆய்ந்தசீர்இரட்டை மாலை அந்தாதி எடுத்துப் பாடி***
***ஏய்ந்தபே ருணர்வு பொங்க எயிலொரு மூன்றும் முன்னாள்***
***காய்ந்தவர் இருந்த வெள்ளிக் கைலைமால் வரையை நண்ண***
***வாய்ந்தபே ரருள்முன் கூர வழிபடும் வழியால் வந்தார். 53***

(இ-ள்.) ஆராய்ந்த சிறப்பினையுடைய "திருவிரட்டைமணி மாலையை" அந்தாதித் தொடையாக எடுத்துப்பாடி, தம்மிடத் துப் பொருந்திய பேருணர்வானது அதிகரிக்க, முற்காலத்தில் பொன் வெள்ளி இரும்பு என்னும் மூன்று மதில்களையும் எரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்ரீகைலாசகிரியை அடையும் படியாகப் பொருந்திய திருவருளானது முற்பட்டு நடத்த அத்திருவருள் வழித்தாயிருக்கும் முறைமையினால் ஒழுகி வந்தார். -எ-று.

**கண்டவர் வியப்புற் றஞ்சிக் கையகன் றோடுவார்கள்**
**கொண்டதோர் வேடத் தன்மை உள்ளவா கூறக் கேட்டே**
**"அண்டநா யகனார் என்னை அறிவரேல் அறியா வாய்மை**
**எண்டிசை மாக்க ளுக்கியான் எவ்வுரு வாயேன்" என்பார். 54**

(இ-ள்.) பார்த்தவர்கள் அதியப்பட்டு அச்சமடைந்து அவரைவிட்டு ஓடுகின்றவர்களாய்த் தாமடைந்த பேய் வேடத்தின் தன்மையை அவர்கள் உள்ளபடி சொல்ல, அதனைப் புனிதவதியார்கேட்டு, தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் என்னைத் தமது அடிமையென்று அறிவாராகில், இவ்வடிமைத் தன்மையின் நிலைமையை யறியாத எட்டுத் திக்கிலுள்ள மனிதர்களுக்கு யான் இப்பேயுருவன்றி வேறு எவ்வுருவடைந்தும் என்ன பிரயோசனமென்று சொல்லுவார். -எ-று.

**வடதிசைத் தேசம் எல்லாம் மனத்தினுங் கடிது சென்று**
**தொடையவிழ் இதழி மாலைச் சூலபா ணியனார் மேவும்**
**படரொளிக் கைலை வெற்பின் பாங்கணைந் தாங்குக் காலின்**
**நடையினைத் தவிர்ந்து பார்மேல் தலையினால் நடந்து சென்றார். 55**

(இ-ள்.) வடதிசையிலுள்ள கன்னட முதலிய எல்லாத் தேசங்களையும் மனவேகத்திலும் அதிக வேகமாக நடந்து சென்று, கொத்தாகவிரிந்த கொன்றை மாலைத் தரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் பரவிய ஒளியையுடைய ஸ்ரீ கைலாசகிரியின் சமீபமாகப்போய், அவ்விடத்தில் காலால் நடந்து செல்லுதலை யொழிந்து பூமியின்மேல் தலையினால் நடந்துபோயினார், புனிதவதியார். -எ-று.

**தலையினால் நடந்து சென்று சங்கரன் இருந்த வெள்ளி**
**மலையின்மேல் ஏறும்போது மகிழ்ச்சியால் அன்பு பொங்கக்**
**கலையிளந் திங்கட் கண்ணிக் கண்ணுதல் ஒருபா கத்துச்**
**சிலைநுதல் இமய வல்லி திருக்கண்நோக் குற்ற தன்றே. 56**

(இ-ள்.) தலையினால் நடந்துபோய்ச் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கயிலாயமலையின்மேல் ஏறும்போது, மனமகிழ்ச்சியினாலே அன்பானது பொங்கும் படியாகக் கலை பொருந்திய இளம்பிறையை மாலையாகத் தரித்த சிவபெருமானுடைய வாமபாகத்தில் வீற்றிருந்தருளும் வில்லையொத்த புருவத்தையுடைய உமாதேவியாரது திருக்கண்ணோக்கத்திற்குப் புனிதவதியார்தலையினால் நடந்து வந்தது காணப்பட்டது. -எ-று.

**அம்பிகை திருவுள் ளத்தின் அதிசயித் தருளித் தாழ்ந்து**
**தம்பெரு மானை நோக்கித் "தலையினால் நடந்திங் கேறும்**
**எம்பெரு மானோர் எற்பின் யாக்கைஅன் பென்னே!" என்ன**
**நம்பெரு மாட்டிக் கங்கு நாயகன் அருளிச் செய்வான். 57**

(இ-ள்.) உமாதேவியார் திருவுள்ளத்தில் அதிசயமடைந்து, தமது நாயகராகிய சிவபெருமானைப் பார்த்து வணங்கி, எமது பெருமானே! தலையினால் நடந்து இக்கயிலாசகிரியில் ஏறிவருகின்ற ஒரு எலும்புடம்பையுடைய பைசாசத்தினது அன்பின் பெருமை என்னவென்று கேட்க, நமது பெருமாட்டியாராகிய உமாதேவியாருக்கு அவ்விடத்தில் சிவபெருமான் அருளிச் செய்வாராயினார். -எ-று.

**"வரும்இவள் நம்மைப் பேணும் அம்மைகாண்; உமையே! மற்றிப்**
**பெருமைசேர் வடிவம் வேண்டிப் பெற்றனள்" என்று பின்றை**
**அருகுவந் தணைய நோக்கி ""அம்மையே! என்னுஞ் செம்மை**
**ஒருமொழி உலகம் எல்லாம் உய்யவே அருளிச் செய்தார். 58**

(இ-ள்.) உமையவளே! இங்குத் தலையால் நடந்து வருகின்ற இவள் நம்மை விரும்பித் துதிக்கும் புனிதவதியம்மையார்; இந்தப் பெருமை பொருந்திய பேய் வடிவத்தையும் தான்வேண்டியே பெற்றுக் கொண்டாள் என்று அருளிச் செய்து, பின்பு அப்புனிதவதியார் தமக்குச் சமீபமாக வந்து நிற்க, அவரைப் பார்த்து, "அம்மையே" என்று அழைக்கும் செம்மையாகிய ஒரு திருவாக்கை உலகமெல்லாங் கடைத்தேறும்படி அருளிச் செய்தார். -எ-று.

**அங்கணன் "அம்மையே!"என் றருள்செய "அப்பா!" என்று**
**பங்கயச் செம்பொற் பாதம் பணிந்துவீழ்ந் தெழுந்தார் தம்மைச்**
**சங்கவெண் குழையி னாருந் தாமெதிர் நோக்கி "நம்பால்**
**இங்குவேண் டுவதென்"? என்ன இறைஞ்சிநின் றியம்பு கின்றார். 59**

(இ-ள்.) சிவபெருமான் அவரைப் பார்த்து "அம்மையே" என்று அழைத்தருள, அதற்குப் பதிலுத்தரமாக "அப்பா" என்று சொல்லிக் கொண்டே செந்தாமரைமலர் போன்ற அழகிய திருவடிகளில் விழுந்து வணங்கி யெழுந்த அவ்வம்மையாரை வெண்மையாகிய சங்கக்குழையையணிந்த சிவபெருமானும் நேராகப் பார்த்து, நம்மிடத்தில் இங்கு உனக்கு வேண்டிய வரம் என்னவென்று கேட்க, புனிதவதியார் வணங்கி நின்று கொண்டு சொல்லத் தொடங்கினார். -எ-று.

***இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்***
***"பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்***
***மறவாமை வேண்டும்; இன்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி***
***அறவா! நீ ஆடம் போதுன் அடியின்கீழ் இருக்க" என்றார். 60***

(இ-ள்.) அழிவில்லாத பேரின்பமயமாகிய அன்பை வேண்டிப் பின்னும் வேண்டுகின்றார்; இவ்வுலகத்தில் பிறவா திருத்தல் வேண்டும்; இருவினைவசத்தால் மறுபடியும் பிறப் புண்டாயிருப்பினும், தேவரீரை ஒருகாலமும் மறவாதிருத்தல் வேண்டும்; இன்னும் ஒருவரம், தருமசொரூபியாகிய எம் பெருமானே! தேவரீர் ஆனந்தத்தாண்டவஞ் செய்யும்பொழுது அடியேன் மனமகிழ்நது பாடிக்கொண்டு உமது திருவடியின் கீழிருக்கே வேண்டுமென்றார்; புனிதவதியார். -எ-று.

***கூடுமா றருள்கொ டுத்துக் "குலவுதென் றிசையில் என்றும்***
***நீடுவாழ பழன மூதூர் நிலவிய ஆலங் காட்டில்***
***ஆடுமா நடமும் நீகண் டானந்தஞ் சேர்ந்தெப் போதும்***
***பாடுவாய் நம்மை" என்றான் பரவுவார் பற்றாய் நின்றான். 61***

(இ-ள்.) தம்மைத் துதிக்கும் அடியார்களுக்குத் துணையா யிருந்து அருள் புரியும் சிவபெருமான் புனிதவதியார் கேட்ட வரங்கள் பொருந்தும்படி கிருபை செய்து, விளங்குகின்ற தென்றிசையில் நிலைபெற்ற நீடூழி வாழ்கின்ற வயல்கள் சூழ்ந்த பழையனூர்த் திருவாலங்காட்டில் நாம் ஆடியருளும் ஊர்த்த தாண்டவத்தையும் நீ தரிசித்துப் பேரானந்தமடைந்து, எப்பொழுதும் நம்மைப்பாடுவாயாக வென்று அருளிச் செய்தார். -எ-று.

***அப்பரி சருளப் பெற்ற அம்மையுஞ் செம்மை வேத***
***மெய்ப்பொரு ளானார் தம்மை விடைகொண்டு வணங்கிப் போந்து***
***செப்பரும் பெருமை அன்பால் திகழ்திரு வாலங் காடாம்***
***நற்பதி தலையி னாலே நடந்துபுக் கடைந்தார் அன்றே. 62***

(இ-ள்.) அவ்வாறு சிவபெருமான் அருளியவரத்தைப் பெற்ற காரைக்காலம்மையாரும், செம்மையாகிய வேதத்திற் கூறும் உண்மைப் பொருளாகிய ஆண்டவரை நமஸ்கரித்து

அநுமதிபெற்றுக்கொண்டு திரும்பி, சொல்லுதற்கரிய பெருமை யோடு கூடிய அன்பினால் விளங்குகின்ற திருவாலங் காடென் னும் நல்ல திருப்பதியைத் தமது தலையினாலே நடந்துபோய்ச் சேர்ந்தார். -எ-று.

***ஆலங்கா டதனில் அண்ட முறநிமிர்ந் தாடுகின்ற***
***கோலங்காண் பொழுது "கொங்கை திரங்கி"என் றெடுத்துத் தங்கு***
***மூலங்காண் பரியார் தம்மை மூத்தநற் பதிகம் பாடி***
***ஞாலங்கா தலித்துப் போற்றும் நடம்போற்றி நண்ணு நாளில். 63***

(இ-ள்.) திருவாலங்காட்டில் அண்டத்தை அளாவும்படி திருவடியைத் தூக்கி ஊர்த்ததாண்டவஞ் செய்தருளுகின்ற திருக்கோலத்தைத் தரிசித்தபொழுது, "கொங்கைதிரங்கி" என்று முதலில் எடுத்து, அநாதிநித்தியராகிய சிவபெருமானைக் குறித்து, "மூத்ததிருப்பதிகம்" பாடியருளி, உலகத்திலுள்ளவர்கள் விரும்பித் துதிக்கின்ற திருநடனத்தைப் போற்றி செய்திருக்கும் நாளில். -எ-று.

***மட்டவிழ்கொன் றையினார்தம் திருக்கூத்து முன்வணங்கும்***
***இட்டமிகு பெருங்காதல் எழுந்தோங்க வியப்பெய்தி***
***"எட்டிஇல வம்மீகை" எனஎடுத்துத் திருப்பதிகம்***
***"கொட்டமுழ வங்குழகன் ஆடும்" எனப் பாடினார். 64***

(இ-ள்.) தேன்சிந்துசின்ற கொன்றைப் பூமாலையைத் தரித்த சிவபெருமானுடைய திருநடனத்தை முன்னே நின்று தரிசிக்கும் ஆசைமிகுந்த பேரன்பானது மனதில் எழுந்து வளர்ந்தோங்க, அதிசயமடைந்து "எட்டியிலவமீகை" என்று முதலில் எடுத்துத் திருப்பதிகத்தைக் "கொட்டமுழவங் கூளிபாடக் குழகனாடுமே" என்று பாடியருளினார். -எ-று.

***மடுத்தபுனல் வேணியினார் "அம்மை"என மதுரமொழி***
***கொடுத்தருளப் பெற்றாரைக் குலவியதாண் டவத்தில்அவர்***
***எடுத்தருளுஞ் சேவடிக்கீழ் என்றும்இருக் கின்றாரை***
***அடுத்தபெருஞ் சீர்ப்பரவல் ஆரளவா யினதம்மா. 65***

(இ-ள்.) கங்கைநீர் பெருகுகின்ற சடைமுடியையுடைய சிவபெருமான் "அம்மையே" என்று மதுரம்பொருந்திய திருவாக்குக் கொடுத்து அழைக்கப் பெற்றவரும், விளங்குகின்ற ஊர்த்ததாண்டவத்தில் அவ்வெம்பெருமான் தூக்கிய திருவடி நிகற்கீழ் எக்காலத்து மிருக்கப் பெற்றவருமாகிய காரைக் காலம்மையாரை அடுத்த பெரும்புகழைத் துதித்தல் யார் புத்திக்கு அளவுபடும்; (ஒருவர்க்கும் அளவுபடாது). -எ-று.

***ஆதியோ டந்தமில்லான் அருள்நடம் ஆடும்போது***
***கீதமுன் பாடும் அம்மை கிளரொளி மலர்த்தாள் போற்றிச்***
***சீதநீர் வயல்சூழ் திங்க ளூரில்அப் பூதி யாராம்***
***போதமா முனிவர் செய்த திருத்தொண்டு புகல லுற்றேன்.*** ***66***

(இ-ள்.) ஆதியு மந்தமுமில்லாத சிவபெருமான் அருண்மய மாகிய ஊர்த்ததாண்டவஞ் செய்யும்பொழுது அவர்திருமுன்னே நின்று கீதத்தைப்பாடி யருள்கின்ற காரைக்காலம்மையாருடைய விளங்குகின்ற ஒளிபொருந்திய தாமரைமலர் போன்ற திருவடி களைத் துதித்து, குளிர்ந்த நீர்வளம் பொருந்திய வயல்கள் சூழ்ந்த திங்களூரில் வாழும் அப்பூதியடிகணாயனார் என்னும் சிவஞானம் நிறைந்த முனிவரர் செய்த திருத்தொண்டின் சிறப்பைச் சொல்லத் தொடங்கினேன். -எ-று.



# 31. அப்பூதியடிகள் நாயனார் புராணம்

***தாண்டவம் புரிய வல்ல தம்பிரா னாருக் கன்பர்***
***ஈண்டிய புகழின் பாலார் எல்லையில் தவத்தின் மிக்கார்;***
***ஆண்டசீர் அரசன் பாதம் அடைந்தவர் அறியா முன்னே***
***காண்டகு காதல் கூரக் கலந்தஅன் பினராய் உள்ளார்.*** 1

(இ-ள்.) பர்வதராஜபுத்திரியாகிய பார்வதிதேவியாரோடு வீற்றிருந்தருளும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருப் பழனமென்னும் திருப்பதியை வணங்கித் திருத்தொண்டு செய்கின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் ஒருமைப்பட்ட பேரன்பி னால் நம்மை அடிமையாகவுடைய சிவபெருமான் வீற்றிருந் தருளும் மற்றைத் திருப்பதிகளையும் வணங்கவேண்டு மென்னும் விருப்பத்தோடு திங்களூரின் சமீபத்திலுள்ள வழியில் போகின்ற வராய். -எ-று.

***களவுபொய் காமம் கோபம் முதலிய குற்றம் காய்ந்தார்;***
***வளமிகு மனையின் வாழ்க்கை நிலையினார்; மனைப்பால் உள்ள***
***அளவைகள் நிறைகோல் மக்கள் ஆவொடு மேதி மற்றும்***
***உளவெலாம் அரசின் நாமஞ் சாற்றும்அவ் வொழுக லாற்றார்.*** 2

(இ-ள்.) பிறர்பொருளைத் திருடுதல்-பொய்வார்த்தை சொல்லுதல்-பிறர்மனைவியை விரும்புதல்-கோபங்கொள்ளுதல் முதலாகிய மனக்குற்றங்களை யொழித்தவர்; வளம்பொருந்திய இல்லறவாழ்க்கையில் ஒழுகும் நிலைமையை யுடையவர்; தமது வீட்டிலிருக்கின்ற நாழி-மரக்கால் முதலிய முகத்தலளவைக் கருவிகளும், எடுத்தளக்கும் நிறைகோலும், புத்திரர்களும், பசுக்களும், எருமைகளும், மற்றுமுள்ள பொருள்களுமாகிய எல்லாவற்றிற்கும் திருநாவுக்கரசுசுவாமிகளது திருநாமத்தை இட்டுவழங்கும் நல்லொழுக்கநெறியில் நிற்கின்றவர். -எ-று.

***வடிவுதாங் காணா ராயும் மன்னுசீர் வாக்கின் வேந்தர்***
***அடிமையுந் தம்பி ரானார் அருளுங்கேட் டவர்நா மத்தால்***
***படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப் பந்தர்கள் முதலா யுள்ள***
***முடிவிலா அறங்கள் செய்து முறைமையால் வாழும் நாளில்.*** 3

(இ-ள்.) நிலைபெற்ற சிறப்பினையுடைய திருநாவுக்கரசு சுவாமிகளுடைய திருவுருவத்தைக் காணாதவராயிருந்தும், அவர்செய்யும் அடிமைத் திறத்தையும், அவர்க்கு எமது சிவபெருமான் செய்யும் திருவருளின் பிரபாவத்தையும் கேள்விப்பட்டு, (அவரிடத்துவைத்த அன்பினால்) அவருடைய திருநாமத்தினால் உலகத்தில் சிறப்புற்று விளங்கும் திருமடங்கள் - தண்ணீர்ப் பந்தல்கள் முதலிய கெடாத தருமங்களைச் செய்து முறைமையோடு வாழ்ந்து கொண்டிருக்கும் நாளில். -எ-று.

***பொருப்பரையன் மடப்பிடியி னுடன்புணருஞ் சிவக்களிற்றின்***
***திருப்பழனம் பணிந்துபணி செய்திருநா வுக்கரசர்***
***ஒருப்படுகா தலிற்பிறவும் உடையவர்தம் பதிவணங்கும்***
***விருப்பினொடுந் திங்களூர் மருங்குவழி மேவுவார்.*** 4

(இ-ள்.) பர்வதராஜபுத்திரியாகிய பார்வதி தேவியாரோடு வீற்றிருந்தருளும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருப்பழனமென்னுந் திருப்பதியை வணங்கி திருத்தொண்டு செய்கின்ற திருநாவுக்கரசுசுவாமிகள் ஒருமைபட்ட பேரன் பினால் நம்மை அடிமையாகவுடைய சிவபெருமான் வீற்றிருந் தருளும் மற்றைத் திருப்பதிகளையும் வணங்கவேண்டுமென்னும் விருப்பதோடு திங்களூரின் சமீபத்திலுள்ள வழியில் போகின்ற வராய். -எ-று.

***அளவில்சனஞ் செலவொழியா வழிக்கரையில் அருளுடையார்***
***உளமனைய தண்ணளித்தாய் உறுவேனிற் பரிவகற்றிக்***
***குளநிறைந்த நீர்த்தடம் போல் குளிர்தூங்கும் பரப்பினதாய்***
***வளமருவும் நிழல்தருதண் ணீர்ப்பந்தர் வந்தணைந்தார்.*** 5

(இ-ள்.) அளவில்லாத சனங்கள் இடைவிடாமல் போய்க் கொண்டிருக்கும் வழியருகில் காருண்ய புருஷராகிய அப் பூதியடிகணாயனாரது திருவுள்ளம் போன்ற மிகுந்த குளிர்ச்சி யுடையதாய்க் கொடுமை பொருந்திய கோடையால் வரும் வெம்மையையொழித்து, நீர் நிறைந்த தாமரைத் தடாகம்போலக் குளிர்ச்சி மிகுந்திருக்கும் அதிக பரப்பினையுடையதாய் வளம் பொருந்திய நிழலைத் தருகின்ற தண்ணீர்ப் பந்தலில் வந்து சேர்ந்தருளினார்; திருநாவுக்கரசுசுவாமிகள். -எ-று.

***வந்தணைந்த வாகீசர் மந்தமா ருதசீதப்***
***பந்தருடன் அமுதமாந் தண்ணீரும் பார்த்தருளிச்***
***சிந்தைவியப் புறவருவார் திருநாவுக் கரசெனும்பேர்***
***சந்தமுற வரைந்ததனை எம்மருங்குந் தாங்கண்டார். 6***

(இ-ள்.) அங்கு எழுந்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகள் சிறுதென்றல் வீசுகின்ற குளிர்ந்த தண்ணீர்ப்பந்தரோடு அமுதமயமாக விளங்குந் தண்ணீரையும் பார்த்தருளி; மனம் சந்தோஷிக்கும்படி வருகின்றவர் "திருநாவுக்கரசு" என்னும் தமது திருநாமத்தை அழகு பொருந்த எழுதியிருத்தலைத் தாம் எவ்விடத்திலும் பார்த்தருளினார். -எ-று.

***'இப்பந்தர் இப்பெயரிட் டிங்கமைத்தார் யார்' என்றார்க்(கு)***
***அப்பந்தர் அறிந்தார்கள் "ஆண்டஅர செனும் பெயரால்***
***செப்பருஞ்சீர் அப்பூதி அடிகளார் செய்தமைத்தார்;***
***தப்பின்றி எங்குமுள சாலைகுளங் கா"என்றார். 7***

(இ-ள்.) (அங்குள்ளவர்களைப் பார்த்து) இந்தத் தண்ணீர்ப் பந்தருக்கு இத் "திருநாவுக்கரசு" என்னும் பெயரிட்டு அமைத் தவர்கள் யாவரென்று கேட்க, அத்தண்ணீர்ப் பந்தரின் வரலாற்றை யறிந்தவர்களாகிய அவ்வூரிலுள்ளவர்கள் திருநாவுக்கரசு என்னும் திருப்பெயரினால் சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய அப்பூதியடிகணாயனாரென்பவர் நன்றாக எவ்விடத்துமிருக்கின்ற தண்ணீர்ப் பந்தரும், தடாகங்களும் திருநந்தனவனங்களுமாகிய இவைகளைத் செய்து வைத்தா ரென்று சொன்னார்கள். -எ-று.

***என்றுரைக்க அரசுகேட் "டிதற்கென்னோ கருத்"தென்று***
***நின்றவரை நோக்கி "அவர் எவ்விடத்தார்" எனவினவத்***
***"துன்றியநூல் மார்பரும்இத் தொல்பதியார்; மனையின்கண்***
***சென்றனர்இப் பொழுததுவுஞ் சேய்த்தன்று; நணித்" தென்றார். 8***

(இ-ள்.) அவர்கள் இவ்வாறு சொல்ல, அதனைத் திருநாவுக்கரசு சுவாமிகள் கேட்டு, இங்ஙனம் அமைத்திருப் பதற்கு அவர்கருத்து என்னவென்று நினைத்து, அங்கு நின்ற அவ்வூராரைப் பார்த்து, அவர் எவ்விடத்திலிருக்கின்றவர் என்று

கேட்க, அவர்கள் நெருங்கிய பூணூலையணிந்த மார்பினை யுடைய அவ்வப்பூதியடிகணாயனாரும் இந்தப் பழைமையாகிய ஊரிலுள்ளவரே; இப்பொழுதுதான் அவர் தம் வீட்டிற்குச் சென்றார்; அவ்வீடும் தூரமன்று; சமீபத்திலேயே யுள்ளதென்று சொன்னார்கள். -எ-று.

***அங்ககன்று முனிவரும்போய் அப்பூதி அடிகளார்***
***தங்குமனைக் கடத்தலைமுன் சார்வாக உள்ளிருந்த***
***திங்களூர் மறைத்தலைவர் "செழுங்கடையில் வந்தடைந்தார்***
***நங்கள்பிரான் தமர்ஒருவர்" எனக்கேட்டு நண்ணினார். 9***

(இ-ள்.) உடனே திருநாவுக்கரசுசுவாமிகளும் அவ்விடத்தி னின்றும் நீங்கிச் சென்று, அப்பூதியடிகணாயனார் வாசஞ் செய்கின்ற திருமாளிகையின் தலைக்கடை வாசலின் முன்னேசேர, திருமாளிகையினுள்ளே யிருந்த பிராமணகுல சிரேஷ்டராகிய அப்பூதியடிகள் நமது சிவபெருமானுடைய அடியவரொருவர் அழகிய தலைவாயிலில் வந்து நிற்கின்றார் என்று அங்குள்ளவர்கள் சொல்லக்கேட்டு அவ்விடத்து வந்தார். -எ-று.

***கடிதணைந்து வாகீசர் கழல் பணிய மற்றவர்தம்***
***அடிபணியா முன்பணியும் அரசின்எதிர் அந்தணனார்***
***"முடிவில்தவஞ் செய்தேன்கொல்! முன்பொழியுங் கருணைபுரி***
***வடிவுடையீர் என்மனையில் வந்தருளிற் றென்?" என்றார். 10***

(இ-ள்.) விரைவாக வந்து திருநாவுக்கரசுசுவாமிகளுடைய திருவடிகளிலே நமஸ்கரிக்க, அவ்வப்பூதியடிகள் தமது திருவடிகளை வணங்குவதற்குமுன்னமே தாம் வணங்கா நின்ற திருநாவுக்கரசுசுவாமிகளது திருமுன்னே அப்பூதியடிகணா யனார் நின்று, அடியேன் பூர்வத்தில் அளவற்ற பெருந்தவத்சை செய்தேனோ அறியேன்; உயிர்களின்மேல் பொழிகின்ற கருணையே ஒன்றாகத்திரண்ட திருவுருவத்தையுடைய சுவாமீ! தேவரீர் அடியேனுடைய சிறுகுடிசையில் எழுந்தருளியது யாதுகாரணமென்று கேட்டார். -எ-று.

***ஒருகுன்ற வில்லாரைத்திருப்பழனத் துள்ளிறைஞ்சி***
***வருகின்றோம்; வழிக்கரையில் நீர்வைத்த வாய்ந்தவளந்***
***தருகின்ற நிழல்தண்ணீர்ப் பந்தருங்கண் டத்தகைமை***
***புரிகின்ற அறம்பிறவுங் கேட்டணைந்தோம்" எனப் புகல்வார். 11***

(இ-ள்.) (அதற்கு திருநாவுக்கரசுசுவாமிகள்) ஒப்பற்ற மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானைத் திருப்பழனமென்னும் ஸ்தலத்தில் தரிசித்து வணங்கிக்கொண்டு இப்பொழுது வருகின்றோம்; வழியோரத்தில் நீர் வைத்திருக் கின்ற சிறந்த வளம்பொருந்திய நிழலைத் தருகின்ற தண்ணீர்ப் பந்தரையும் பார்த்து, அப்படியே நீர் செய்து வருகின்ற மற்றைத் தருமங்களையுங் கேள்வியுற்று உம்மைக் காணவிரும்பிவந்தோ மென்று சொல்கின்றவராய். -எ-று.

*"ஆறணியுங் சடைமுடியார் அடியார்க்கு நீர்வைத்த*
*ஈறில்பெருந் தண்ணீர்ப்பந் தரில்நும்பேர் எழுதாதே*
*வேறொருபேர் முன்னெழுத வேண்டியகா ரணம்என் கொல்?*
*கூறும்" என எதிர்மொழிந்தார் கோதில்மொழிக் கொற்றவனார்.* 12

(இ-ள்.) கங்கை நதியைத் தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானது அடியார்கள் இளைப்பாறும் பொருட்டு நீர் வைத்திருக்கின்ற முடிவில்லாத பெருமை பொருந்திய தண்ணீர்ப் பந்தரில் உம்முடைய பெயரை எழுதாமல், வேறொரு பெயரை முன்னே எழுதவேண்டிய காரணம் யாதோ? அதனைச் சொல்லு மென்று எதிரில் சொன்னார், குற்றமற்ற திருநாவுக்கரசு சுவாமிகள். -எ-று.

*நின்றமறை யோர்கேளா நிலையழிந்த சிந்தையராய்*
*"நன்றருளிச் செய்திலீர்! நாணில்அமண் பதகருடன்*
*ஒன்றியமன் னவன்சூட்சி திருத்தொண்டின் உறைப்பாலே*
*வென்றவர்தந் திருப்பேரோ வேறொருபேர்?" எனவெகுள்வார்.* 13

(இ-ள்.) (அவர் அவ்வாறு கூறிய வார்த்தையை) அங்குநின்ற அப்பூதியடிகள் கேட்டுத் தமது நிலைமை கலங்கிய மனமுடைய வராய், நீர் நல்லவார்த்தையை அருளிச் செய்திலீர்; சிறிதும் வெட்கமில்லாத பாதகர்களாகிய சமணர்களோடு சேர்ந்திருந்த பல்லவராஜன் செய்த விக்கினங்களைத் தாம் செய்யும் திருத் தொண்டின் வலிமையினாலே ஜயித்த எமது திருநாவுக்கரசு சுவாமிகளது திருப்பெயரோ? வேறொரு பெயரென்று கோபிப் பாராயினார். -எ-று.

*"நம்மையுடை யவர்கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே*
*இம்மையிலும் பிழைப்பதென என்போல்வா ருந்தெளியச்*
*செம்மைபுரி திருநாவுக் கரசர்திருப் பெயர்எழுத*
*வெம்மைமொழி யான்கேட்க விளம்பினீர்" எனவிளம்பி.* 14

(இ-ள்.) நம்மை அடிமையாகவுடைய சிவபெருமானது திருவடிகளில் விரும்பிய திருத்தொண்டு செய்யுங் காரணத்தினால் (மறுமையிலேயன்றி) இம்மையிலும் பிழைக்கலாம் என்று என்போன்ற அறிவிலிகளும் தெளியும் பொருட்டு, நன்மைகளையே செய்கின்ற திருநாவுக்கரசுசுவாமிகளுடைய திருப்பெயரைத் தண்ணீர்ப் பந்தர் - தடாகம் - திருநந்தனவனம் முதலியவைகளில் நான் எழுதி வைக்க, நீர் அதைச் சிறிதும் கவனியாமல் இந்தக் கொடுஞ்சொல்லை நான் கேட்கும்படி பேசினீர் என்று சொல்லி. -எ-று.

***"பொங்குகடற் கல்மிதப்பில் போந்தேறும் அவர்பெருமை***
***அங்கணர்தம் புவனத்தில் அறியாதார் யாருளரே!***
***மங்கலமாந் திருவேடத் துடனின்றிவ் வகைமொழிந்தீர்;***
***எங்குறைவீர்? நீர்தாம்யார்? இயம்பும்" என இயம்பினார். 15***

(இ-ள்.) அலைகள் பொங்குகின்ற கடலில் சமணர்கள் கட்டிப் போட்ட கற்றூணாகிய தெப்பத்தைக் கொண்டு அக்கடலைக் கடந்து கரையேறிய திருநாவுக்கரசுசுவாமிகளது மகிமையை இந்தவுலகத்தில் அறியாதவர்கள் யாரிருக்கின்றார்கள் (ஒருவருமில்லை;) இங்ஙனமாக, மங்களகரமாகிய சிவனடியார் திருவேடத்தோடு எம்முன்னே நின்று இத்தகைய தகாத வார்த்தயைச் சொன்னீர்; நீர் எங்கே இருக்கின்றவர்; உம்முடைய பெயரென்ன எமக்குச் சொல்லுமென்று கேட்டார். -எ-று.

***திருமறையோர் அதுமொழியத் திருநாவுக் கரசர்அவர்***
***பெருமையறிந் துரைசெய்வார் "பிறதுறையி னின்றேற***
***அருள்பெருகு சூலையினால் ஆட்கொள்ள அடைந்துய்ந்த***
***தெருளும்உணர் வில்லாத சிறுமையேன் யான்" என்றார். 16***

(இ-ள்.) சிறந்த பிராமண சிரேஷ்டராகிய அப்பூதியடிகணாயனார் அவ்வாறான வார்த்தைகளைச் சொல்லியருள, திருநாவுக்கரசுசுவாமிகள் அவ்வப்பூதியடிகணாயனாருடைய அன்பின் பெருமையை யறிந்து சொல்லுவார், (அஃது என்னையெனின்) சமணசமயப் படுகுழியினின்றும் கரையேற்றும் பொருட்டுச் சிவபெருமான் தமது கருணைமிகுந்த சூலை நோயினால் தடுத்தாட்கொள்ள அதுகாரணமாக இச்சைவ நெறியையடைந்து கடைத்தேறிய தெளிந்த உணர்ச்சியில்லாத சிறியேன் யான்றான என்று அருளிச் செய்தார். -எ-று.

***அரசறிய உரைசெய்ய அப்பூதி அடிகள்தாங்***
***கரகமல மிசைகுவியக் கண்ணருவி பொழிந்திழிய***
***உரைகுழறி உடம்பெல்லாம் உரோமபுள கம்பொலியத்***
***தரையின்மிசை வீழ்ந்தவர்தஞ் சரணகம லம்பூண்டார். 17***

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் தம்மைத் தெரிந்து கொள்ளும்படி தமது சரித்திரத்தைச் சொல்லியருள, அதனைக்கேட்ட அப்பூதியடிகணாயனர் தாமரைமலர் போன்ற இரண்டு கைகளும் சிரசின்மேலே குவிய, கண்களினின்றும் அருவிபோல ஆனந்தபாஷ்பம் சொரிய, உரைதடுமாறித் தேகமுழுவதும் உரோமஞ் சிலிர்க்கப் பூமியில் விழுந்து அத்திருநாவுக்கரசுசுவாமிகளுடைய ஸ்ரீபாதாரவிந்தங்களைச் சிரசில் சூடிக்கொண்டார். -எ-று.

***மற்றவரை எதிர்வணங்கி வாகீசர் எடுத்தருள***
***அற்றவர்கள் அருநிதியம் பெற்றார்போல் அருமறையோர்***
***முற்றவுளங் களிகூர முன்னின்று கூத்தாடி***
***உற்றவிருப் புடன்சூழ ஓடினார் பாடினார். 18***

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் அப்பூதியடிகணா யனாரை எதிரே வணங்கித் தமது திருக்கரங்களால் எடுத்தருள வும், அரிய செல்வத்தைப் பெற்ற தரித்திரர்களைப்போல அப் பூதியடிகள் மிகுந்த மனக்களிப்படைந்து அவர் திருமுன்னே நின்று ஆனந்தக் கூத்தாடி மனதிற் பொருந்திய விருப்பத்தோடு வலமாக ஓடினார்; தோத்திரங்களைப் பாடினார். -எ-று.

***மூண்டபெரு மகிழ்ச்சியினால் முன்செய்வ தறியாதே***
***ஈண்டமனை அகத்தெய்தி இல்லவர்க்கும் மக்களுக்கும்***
***ஆண்டஅர செழுந்தருளும் ஓகையுரைத் தார்வமுறப்***
***பூண்டபெருஞ் சுற்றமெலாங் கொடுமீளப் புறப்பட்டார். 19***

(இ-ள்.) மனதிலுண்டாகிய சந்தோஷமேலீட்டினால் முன்னே செய்யவேண்டியது இன்னது என்று அறியாமல், விரைவாகத் தமது திருமாளிகையிற் சென்று மனைவியாருக்கும் பிள்ளைகளுக்கும் திருநாவுக்கரசுசுவாமிகள் எழுந்தருளி வந்த சந்தோஷசமாசாரத்தைச் சொல்லிப் பெருங்களிப்புண்டாகத் தம்மைச் சேர்ந்த பெரிய சுற்றத்தார்களையெல்லாம் அழைத்துக் கொண்டு மீண்டுவந்தார். -எ-று.

***மனைவியா ருடன்மக்கள் மற்றுமுள்ள சுற்றத்தோர்***
***அனைவரையுங் கொண்டிறைஞ்சி ஆராத காதலுடன்***
***முனைவரைஉள் ளெழுந்தருளு வித்தவர்தாள் முன்விளக்கும்***
***புனைமலர்நீர் தங்கள்மேல் தெளித்துள்ளும் பூரித்தார். 20***

(இ-ள்.) மனைவியாரும், பிள்ளைகளும், மற்றுமுள்ள சுற்றத்தார்களுமாகிய அனைவரையும் அழைத்து வந்து அவரை வணங்கச் செய்து, நீங்காத பெருமகிழ்ச்சியோடு திருநாவுக்கரசு சுவாமிகளைத் தமது திருமாளிகையினுள்ளே எழுந்தருளும் படிசெய்து, அவர் திருவடிகளை முன்னே விளக்கிய மலரமைந்த காலலம்பக் கொடுக்கும் நீரைத் தங்கள்மேல் தெளித்துக் கொண்டு உள்ளும் கொண்டார்கள். -எ-று.

***ஆசனத்தில் பூசனைகள் அமர்வித்து விருப்பினுடன்***
***வாசநிறை திருநீற்றுக் காப்பேந்தி மனந்தழைப்பத்***
***தேசம்உய்ய வந்தவரைத் திருவமுது செய்விக்கும்***
***நேசம்உற விண்ணப்பஞ் செயஅவரும் அதுநேர்ந்தார். 21***

(இ-ள்.) அவரை ஆசனத்தி லெழுந்தருளப் பண்ணி, விதிப்படி செய்யவேண்டிய அருச்சனைகளைச் செய்து, விருப்பத்தோடு வாசனை நிறைந்த விபூதி மடலை அவர் திருமுன்னே காட்டி, மனமகிழும்படி உலகத்திலுள்ளவர்கள் தீவினையினின்றும் கடைத்தேறும்பொருட்டு அவதரித்தருளிய திருநாவுக்கரசுசுவாமிகளைத் திருவமுது செய்விக்கும்படியான அன்பு அதிகரித்தலால் அவரைப் பிரார்த்திக்க, அவரும் அதற்கு உடன்பட்டருளினார். -எ-று.

***செய்தவர் இசைந்த போது திருமனை யரை நோக்கி***
***"எய்திய பேறு நம்பால் இருந்தவா றென்னே!" என்று***
***"மைதிகழ் மிடற்றி னான்றான் அருளினால் வந்த தென்றே***
***உய்தும்"என் றுவந்து கொண்டு திருவமு தாக்கல் உற்றார். 22***

(இ-ள்.) அருமையாகச் செய்த தவத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்ய உடன்பட்ட பொழுது, அப்பூதியடிகள் தமது மனைவியாரைப் பார்த்து, இவர் இவ்விடத்தில் எழுந்தருளுவதற்கேதுவான தவப்பயன் நம்மிடத்தி லிருந்தவண்ணம் என்ன ஆச்சரியமென்று சொல்லி,

இது காளகண்டத்தையுடைய சிவபெருமானது திருவருளினாலேயே கிடைத்ததென்று நினைத்து, இனி இதனால் நாம் கடைத்தேறுவோமென்று மகிழ்ச்சி யடைந்து, திருவமுது சமைக்கத் தொடங்கினார். -எ-று.

***தூயநற் கறிக ளான அறுவகைச் சுவையால் ஆக்கி***
***ஆயஇன் னமுதும் ஆக்கி அமுதுசெய் தருளத் தங்கள்***
***சேயவர் தம்மில் மூத்த திருநாவுக் கரசை "வாழை***
***மேயபொற் குருத்துக் கொண்டு வா" என விரைந்து விட்டார். 23***

(இ-ள்.) பரிசுத்தமாகிய நல்ல கறியமுதுகளை அறுவகைச் சுவையோடு அமைத்து இனிமைபொருந்திய அன்னத்தையும் சமைத்து, பின் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய் தருளும் பொருட்டுத் தம்முடைய புத்திரர்களில் மூத்த திருநாவுக்கரசு என்னும் புதல்வனை வாழைமரத்தில் பொருந்திய அழகிய குருத்தை அரிந்துகொண்டு வாவென்று அனுப்பினார். -எ-று.

***"நல்லதாய் தந்தைஏவ நான்இது செயப்பெற் றேன்" என்(று)***
***ஒல்லையில் விரைந்து தோட்டத் துள்புக்குப் பெரிய வாழை***
***மல்லலங் குருத்தை யீரும் பொழுதினில் வாள ராஒன்(று)***
***அல்லல்உற் றழுங்கிச் சோர அங்கையில் தீண்டிற் றன்றே. 24***

(இ-ள்.) நற்குணமுடைய தாய் தந்தைகள் அனுப்ப, நான் இப்பணி செய்யப் பெற்றேனென்று, அம்மூத்த திருநாவுக்கரசு விரைந்து போய்த் தோட்டத்தினுள்ளே புகுந்து, பெரிய வாழை மரத்தினது வளம்பொருந்திய அழகிய குருத்தை அரியும் பொழுது ஒளியினையுடைய ஒரு பாம்பானது அப்புதல்வன் துயரமுற்று மயங்கி விழும்படி அவனது அழகிய கையில் கடித்தது. -எ-று.

***கையினிற் கவர்ந்து சுற்றிக் கண்ணெரி காந்து கின்ற***
***வையரா வுதறி வீழ்த்துப் பதைப்புடன் "பாந்தள் பற்றும்***
***வெய்யவே கத்தால் வீழா முன்னம்வே கத்தால் எய்திக்***
***கொய்தஇக் குருத்தைச் சென்று கொடுப்பன்" என் றோடி வந்தான். 25***

(இ-ள்.) கையில் கடித்துச் சுற்றிக்கொண்டு கண்ணினின்றும் கோபத் தீயைச் சொரிகின்ற படத்தையுடைய பாம்பை யுதறிக் கீழே தள்ளி, பதைபதைப்புடனே பாம்பு கடித்த கொடிய வேகத்தினாலே நிலத்தில் வீழுமுன்னே வேகத்தோடு ஓடி அரிந்த இந்த வாழைக்குருத்தைக் கொண்டுபோய்க் கொடுப்பேனென்று ஓடிவந்தான். -எ-று.

***பொருந்திய விடவே கத்திற் போதுவான் வேகம் முந்த***
***வருந்தியே அணையும் போழ்து "மாசுணம் கவர்ந்த திர்க்கும்***
***அருந்தவர் அமுதுசெய்யத் தாழ்க்கயான் அறையேன்" என்று***
***திருந்திய கருத்தினோடு செழுமனை சென்று புக்கான். 26***

(இ-ள்.) தன்னைக்கடித்த பாம்பின் விஷவேகத்தோடு ஓடுகின்ற அம்மூத்த திருநாவுக்கரசு, விஷவேகமானது அதிகரித்தலால் வருந்தி வீட்டையடையும் பொழுது, என்னைப் பாம்பு கடித்ததை, அரிய தவத்தையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்யத் தடைபடும்வண்ணம் ஒருவருக்குஞ் சொல்லமாட்டேனென்று நிச்சயித்த எண்ணத்தோடு வளந்தங்கிய திருமாளிகையில் போய்ப்புகுந்தான். -எ-று.

***எரிவிடம் முறையே ஏறித் தலைக்கொண்ட ஏழாம் வேகம்***
***தெரிவுற எயிறும் கண்ணும் மேனியும் கருகித் தீந்து***
***விரியுரை குழறி ஆவி விடக்கொண்டு மயங்கி வீழ்வான்***
***பரிகலக் குருத்தைத் தாயார் பால்வைத்துப் படிமேல் வீழ்ந்தான். 27***

(இ-ள்.) தீப்போல் எரிகின்ற விஷமானது வரிசையாக ஏறித் தலைக்கொண்ட ஏழாம்வேகமானது தெரியும்படிக்குப் பற்களும், கண்களும், சரீரமும் கருகித் தீந்து, விரிந்த சொற்கள் தடுமாறிப் பிராணன் நீங்கும்படி மயங்கி விழுகின்றவன் தான் அரிந்துகொண்டுவந்த அந்த வாழைக்குருத்தைத் தாயார் கையில் கொடுத்துப் பூமியில் விழுந்தார். -எ-று.

***தளர்ந்துவீழ் மகனைக்கண்டு தாயருந் தந்தை யாரும்***
***உளம்பதைத் துற்று நோக்கி உதிரஞ்சோர் வடிவும் மேனி***
***விளங்கிய குறியும் கண்டு "விடத்தினால் வீந்தான்" என்று***
***துளங்குதல் இன்றித் தொண்டர் அமுதுசெய் வதற்குச் சூழ்வார். 28***

(இ-ள்.) மயங்கி விழுந்த புதல்வனைக் கண்டு அப்பூதியடிகளும் அவர் மனைவியாரும் மனம்பதைத்து நன்றாகப் பார்த்து, உதிரம்சிந்துகின்ற உடம்பையும், அவ்வுடம்பில் விளங்கித்

தோன்றுகின்ற (கருகித் தீய்ந்த) குறியையுங் கண்டு, இவன் பாம்பின் விஷவேகத்தால் இறந்தானென்று அதனால்மனம் வருந்தாமல் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்வதற்கு நினைக்கின்ற வர்கள். -எ-று.

***பெறலரும் புதல்வன் தன்னைப் பாயினுட் பெய்து மூடிப்***
***புறமனை முற்றிற் பாங்கோர் புடையினில் மறைத்து வைத்தே***
***"அறஇது தெரியா வண்ணம் அமுதுசெய் விப்போம்" என்று***
***விறலுடைத் தொண்ட னார்பால் விருப்பொடு விரைந்து வந்தார். 29***

(இ-ள்.) பெறுதற்கரிய மூத்ததிருநாவுக்கரசு என்னும் புதல்வனைப் பாயில் வைத்து மூடி, வீட்டின் புறத்திலுள்ள முற்றத்தின் ஓர் பக்கத்திலே ஒருவருமறியாமல் மறைத்து வைத்துவிட்டு, இச் செயல் முழுவதும் திருநாவுக்கரசுசுவாமிகள் அறியாதபடி, அவருக்குத் திருவமுது செய்விப்போமென்று, அன்பின் வலிமையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளிடத்தில் ஆசையோடு விரைவாக வந்தார். -எ-று.

***கடிதுவந் "தமுது செய்யக் காலந்தாழ்க் கின்ற" தென்றே***
***அடிசிலும் கறியும் எல்லாம் அழகுற அணைய வைத்துப்***
***படியில்சீர்த் தொண்ட னார்முன் பணிந்தெழுந்து "அமுது செய்தெங்***
***குடிமுழு துய்யக் கொள்வீர் என்றவர் கூறக் கேட்டு." 30***

(இ-ள்.) எமது திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்வதற்குக் காலதாமதமாகின்றதென்று விரைவாக வந்து, அன்னமும் பதார்த்தங்களுமாகிய எல்லாவற்றையும் அழகாக ஓரிடத்தில் சூழவைத்து, ஒப்பற்ற சிறப்பினையுடைய திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு முன்னே வணங்கி யெழுந்து, தேவரீர் திருவமுது செய்து எமது குடியிலுள்ள மூவேழ்சுற்றத் தினரும் கடைத்தேறும்படி திருவுள்ளங்கொண்டருள்வீரென்று அப்பூதியடிகள் பிரார்த்திக்க, அதனைத் திருநாவுக்கரசு சுவாமிகள் கேட்டு. -எ-று.

***அருந்தவர் எழுந்து செய் அடியினை விளக்கி வேறோர்***
***திருந்தும்ஆ சனத்தில் ஏறிப் பரிகலந் திருத்து முன்னர்***
***இருந்துவெண் ணீறு சாத்தி இயல்புடை இருவ ருக்கும்***
***பொருந்திய நீறு நல்கிப் புதல்வர்க்கும் அளிக்கும் போழ்தில். 31***

(இ-ள்.) அரிய தவத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் எழுந்து தமது சிவந்த திருவடிகளைச் சுத்திசெய்துகொண்டு

திருத்தமாகிய வேறொரு ஆசனத்தில் எழுந்தளி, அப்பூதியடிகள் பரிகலத்தைத் திருத்துவதற்கு முன்னே அங்கிருந்து விபூதிதரித்து, அவ்வீட்டில் வாழ்கின்ற அப்பூதியடிகணாயனாருக்கும் அவர் மனைவியாருக்கும் மகிமைதங்கிய விபூதியைக் கொடுத்துப் புதல்வர்களுக்கும் கொடுக்கும் சமையத்தில். -எ-று.

***ஆதிநான் மறைநூல் வாய்மை அப்பூதி யாரை நோக்கிக்***
***"காதலர் இவர்க்கு மூத்த சேயையுங் காட்டுகெ ன்ன***
***மேதகு பூதி சாத்த" என்றலும் விளைந்த தன்மை***
***யாதுமொன் றுரையார் "இப்போ திங்கவன் உதவான்" என்றார். 32***

(இ-ள்.) முதன்மையாகிய நான்கு வேதங்களிலும் கூறுகின்ற மெய்ம்மையை யுணர்ந்த அப்பூதியடிகணாயனாரைப் பார்த்து விருப்பத்தோடு இவர்களுக்கு மூத்த புதல்வனையும் மேன்மை பொருந்திய விபூதிசாத்துதற்குக் காட்டுவீராகவென்று அருளிச் செய்யும், அவர் நடந்த செய்திகள் ஒன்றையும் சொல்லாதவராய் இப்பொழுது அப்புதல்வன் இங்கே உதவான் என்று கூறினார். -எ-று.

***அவ்வுரை கேட்ட போதே அங்கணர் அருளால் அன்பர்***
***செவ்விய திருவுள் ளத்தோர் தடுமாற்றஞ் சேர நோக்கி***
***"இவ்வுரை பொறாதென் உள்ளம்; என்செய்தான் இதற்கொன் றுண்டால்***
***மெய்விரித் துரையும்" என்ன விளம்புவார் விதிர்ப்புற் றஞ்சி. 33***

(இ-ள்.) அப்புதல்வன் உதவான் என்று அப்பூதியடிகள் கூறிய வார்த்தையைத் திருநாவுக்கரசுசுவாமிகள் கேட்டவுடனே சிவபெருமானுடைய திருவருளினால் தம்முடைய நல்ல திருவுள்ளத்திலே ஒரு தடுமாற்றந் தோன்ற, அப்பூதியடிகணாய னாரைப் பார்த்து நீர் சொல்லுகின்ற இந்த வார்த்தையை என்னுடைய மனமானது பொறுக்கலாற்றாது; அப்புதல்வன் என்ன செய்தான்; இதற்குச் செய்யத் தக்க தீர்வு ஒன்றிருக் கின்றது; நீர் உண்மையை விரித்துச சொல்லுமென்று கேட்க, அப்பூதியடிகள் தேகம் நடுங்கி அச்சமுற்றுச் சொல்வாராயினார். -எ-று.

***"பெரியவர் அமுது செய்யும் பேறிது பிழைக்க என்னோ***
***வருவ(து)என் றுரையா ரேனும் மாதவர் வினவ வாய்மை***
***தெரிவுற உரைக்க வேண்டுஞ் சீலத்தால் சிந்தை நொந்து***
***பரிவொடு வணங்கி மைந்தர்க் குற்றது பகர்ந்தார் அன்றே. 34***

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுதுசெய்யத் தக்கதாகிய இப்பேற்றை இழக்கும்படி யாதுவருவதோவென்று சொல்லாதொழிந்தாரேனும், சிறந்த தவத்தினையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் கேட்க உண்மையை அவர் அறியும்படி சொல்லவேண்டுமென்னும் ஒழுக்கத்தால் மனம்நொந்து துயரத்தோடு வணங்கி, தமது புதல்வனுக்கு நேர்ந்த கெடுதியை எடுத்துச் சொன்னார். -எ-று.

***நாவினுக் கரசர் கேளா "நன்றுநீர் புரிந்த வண்ணம்!***
***யாவர்இத் தன்மை செய்தார்?" என்றுமுன் எழுந்து சென்றே***
***ஆவிதீர் சவத்தை நோக்கி அண்ணலார் அருளும் வண்ணம்***
***பாவிசைப் பதிகம் பாடிப் பணிவிடம் பாற்று வித்தார். 35***

(இ-ள்.) (அப்புதல்வன் விஷந்தீண்டியிருந்தானென்று அப்பூதியடிகள் கூறிய செய்தியைத்) திருநாவுக்கரசுசுவாமிகள் கேட்டு, அவன் இங்கு உதவானென்று நீர் சொல்லிய வார்த்தை நன்றாயிருக்கின்றது; இத்தன்மையான செய்கையை வேறேயார் செய்தார்களென்று சொல்லிக்கொண்டு முன்னே விரைவாக எழுந்துபோய் உயிர் நீங்கிக்கிடக்கின்ற அந்தச் சவத்தைப் பார்த்து, சிவபெருமான் அச்சவத்திற்கு உயிர் கொடுத்தருளும் வண்ணம் பரவிய இசையினையுடைய "ஒன்றுகொலாம்" என்னும் முதலையுடைய திருப்பதிகம் பாடியருளிப் பாம்பின் விஷத்தைப் போக்குவித்தார். -எ-று.

***தீவிடம் நீங்க உய்ந்த திருமறை யவர்தஞ் சேயும்***
***மேவிய உறக்கம் நீங்கி வரைந்தெழு வானைப் போன்று***
***சேவுகைத் தவர்ஆட் கொண்ட திருநாவுக் கரசர் செய்***
***பூவடி வணங்கக் கண்டு புனிதநீ றளித்தார்அன்றே. 36***

(இ-ள்.) கொடிய பாம்பின் விஷமானது தன்னைவிட்டு நீங்க, அதனால் உயிர் பெற்றெழுந்த அப்பூதியடிகணாயனாருடைய மூத்தகுமாரனும் தான்கொண்ட நித்திரையினின்று நீங்கி விரைவாக எழுகின்றவனைப் போன்று, ரிஷபத்தை வாகனமாகக் கொண்ட சிவபெருமானால் தடுத்தாட்கொள்ளப்பெற்ற திருநாவுக்கரசுசுவாமிகளுடைய சிவந்த தாமரை மலர் போன்ற திருவடிகளை நமஸ்கரிக்க, அவரைப் பார்த்துப் பரிசுத்தம் பொருந்திய விபூதியைக் கொடுத்தருளினார். -எ-று.

**பிரிவுறும் ஆவி பெற்ற பிள்ளையைக் காண்பார் தொண்டின்**
**நெறியினைப் போற்றி வாழ்ந்தார் நின்றஅப் பயந்தார் தாங்கள்**
**"அறிவரும் பெருமை அன்பர் அமுதுசெய் தருளுதற்குச்**
**சிறிதிடை யூறு செய்தான் இவன்" என்று சிந்தை நொந்தார். 37**

(இ-ள்.) பாம்பினால் உடலை விட்டு நீங்கிய உயிரைப் பின்வரப்பெற்ற அம்மூத்த புதல்வனைப் பார்த்த அவ்வூரிலுள்ள வர்கள் அப்பூதியடிகணாயனாருடைய திருத்தொண்டின் முறைமையைத் துதித்து வாழ்ந்தார்கள்; அங்குநின்ற அத்தாய் தந்தையர் தங்களால் அறிதற்கரிய பெருமையையுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் திருவமுது செய்தருளுதற்கு இவன் சிறிது தடைசெய்தானென்று அவன் உயிர் பெற்றதற்குச் சந்தோஷியாமல் மனம்வருந்தினார்கள். -எ-று.

**ஆங்கவர் வாட்டந் தன்னை அறிந்துசொல் அரசர் கூட**
**ஓங்கிய மனையில் எய்தி அமுதுசெய் தருள வுற்ற**
**பாங்கினில் இருப்ப முந்நூல் பயில்மணி மார்பர் தாமும்**
**தாங்கிய மகிழ்ச்சி யோடுந் தகுவன சமைத்துச் சார்வார். 38**

(இ-ள்.) அப்பூதியடிகளும், அவர் மனைவியாரும் அடைந்திருக்கும் மனவருத்தத்தையறிந்து திருநாவுக்கரசு சுவாமிகள் அவர்களோடு உயர்ந்த திருமாளிகைக்கு எழுந் தருளித் திருவமுது செய்தருளுதற்குத் தகுந்த இடத்தில் வீற்றிருப்ப, பூணூலையணிந்த மார்பினையுடைய அப்பூதியடி களும் மனதிற்பொருந்திய பெருமகிழ்ச்சியோடு தகுந்த பொருள்களை எடுத்துக் கொண்டு வந்து. -எ-று.

**புகழ்ந்தகோ மயத்து நீரால் பூமியைப் பொலிய நீவித்**
**திகழ்ந்தவான் சுதையும் போக்கிச் சிறப்புடைத் தீபம் ஏற்றி**
**நிகழ்ந்தஅக் கதலி நீண்ட குருத்தினை விரித்து நீரால்**
**மகிழ்ந்துடன் விளக்கி ஈர்வாய் வலம்பெற மரபின் வைத்தார். 39**

(இ-ள்.) நூல்களில் சிறப்பித்துச் சொல்லப்பட்ட கோமயத் தின் நீரினால் திருவமுதுசெய்யும் இடத்தை நன்றாகமெழுகி, விளங்குகின்ற வெள்ளிய சுண்ணச்சாந்தையும் சதுரமாக இட்டு, மங்களகரமான திருவிளக்கை ஏற்றி, அப்புதல்வன் கொண்டு வந்த வாழையின் நீண்ட பரிகலக் குருத்தை விரித்து, நல்ல நீரினால் மகிழ்ச்சியோடு உடனே அதைச் சுத்திசெய்து, அரிந்த பக்கம் வலத்தில் இருக்கும்படி முறைமையாக இட்டார். -எ-று.

**திருந்திய வாச நன்னீர் அளித்திடத் திருக்கை நீவும்**
**பெருந்தவர் மறையோர் தம்மைப் பிள்ளைக ளுடனே நோக்கி**
**"அரும்புதல் வர்களும் நீரும் அமுதுசெய் வீர்இங்கென்ன**
**விரும்பிய உள்ளத் தோடு மேலவர் ஏவல் செய்வார். 410**

(இ-ள்.) திருத்தமாகிய மணம்பொருந்திய நல்லநீரைக் கொடுக்க, திருவமுது செய்யும் பொருட்டுத் திருக்கரத்தைச் சுத்திசெய்யும் திருநாவுக்கரசுசுவாமிகள் அப்பூதியடிகளை அவர்புத்திரர்களுடனே பார்த்து, அருமையாகிய புதல்வர்களும், நீரும் இவ்விடத்தே திருவமுது செய்வீர்களென்று கட்டளை யிட, விருப்பம் பொருந்திய திருவுள்ளத்தோடு திருநாவுக்கரசு சுவாமிகளுடைய கட்டளையை மறாது செய்கின்றவர்களாய். -எ-று.

**மைந்தரும் மறையோர் தாமும் மருங்கிருந் தமுது செய்யச்**
**சிந்தைமிக் கில்ல மாதர் திருவமு தெடுத்து நல்கக்**
**கொந்தவிழ் கொன்றை வேணிக் கூத்தனார் அடியா ரோடும்**
**அந்தமி ழாளி யார்அங் கமுதுசெய் தருளி னாரே. 41**

(இ-ள்.) புதல்வர்களும், அப்பூதியடிகணாயனாரும் அவருக்குச் சமீபத்திலிருந்து திருவமுது செய்ய, மனைவியார் மனதில் மகிழ்ச்சிமிகுந்து திருவமுது கொண்டுவந்து படைக்க, கொத்தாக மலர்ந்த கொன்றை மாலையையணிந்த சடைமுடி யையுடைய சிவபெருமானது அடியார்களோடு அழகிய தமிழ்த் தலைவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அங்குத் திருவமுது செய்தருளினார். -எ-று.

**மாதவ மறையோர் செல்வ மனையிடை அமுது செய்து**
**காதல்நண் பளித்துப் பன்னாள் கலந்துடன் இருந்த பின்றை**
**மேதகு நாவின் மன்னர் விளங்கிய பழன மூதூர்**
**நாதர்தம் பாதஞ் சேர்ந்து நற்றமிழ்ப் பதிகஞ் செய்வார். 42**

(இ-ள்.) மகத்தாகிய தவத்தையுடைய அப்பூதியடிகணாய னாரது செல்வமிகுந்த திருமாளிகையில் திருவமுது செய்து, அன்போடு கூடிய நேசத்தை அவரிடத்தில் வைத்துப் பலநாள் அவரோடு கூடியிருந்த பின்பு, மேன்மையாகிய பெருங்குணத்தை யுடைய திருநாவுக்கரசுசுவாமிகள் புகழ்விளங்கிய திருப்பழன மென்னும் பழைய திருப்பதியில் சிவபெருமான் திருவடிகளை யடைந்து நல்ல தமிழ்ப் பதிகத்தையருளிச் செய்கின்றவராய். எ-று.

***அப்பூதி அடிக ளார்தம் அடிமையைச் சிறப்பித் தான்ற***
***மெய்ப்பூதி அணிந்தார் தம்மை விரும்பு "சொன்மாலை" வேய்ந்த***
***இப்பூதி பெற்ற நல்லோர் எல்லையில் அன்பால் என்றுஞ்***
***செப்(பு)ஊதி யங்கைக் கொண்டார் திருநாவுக் கரசர் பாதம். 43***

(இ-ள்.) அருள்நிறைந்த மெய்ம்மையாகிய விபூதியைத் தரித்த சிவபெருமானைப் பாடிய திருப்பதிகத்தில் தமது அடிமைத் தன்மையைச் சிறப்பித்துப் பாடப் பெற்றதாகிய இப்பெருஞ் செல்வத்தை யடைந்த நல்லோராகிய அப்பூதியடிகணாயனார் அளவில்லாத பேரன்பினால் எக்காலத்தும் அத்திருநாவுக்கரசு சுவாமிகளுடைய திருவடிகளைத் துதிக்கின்ற பயனை யடைந்தார். -எ-று.

***இவ்வகை அரசின் நாமம் ஏத்திஎப் பொருளும் நாளும்***
***அவ்வருந் தவர்பொற் றாளே எனவுணர்ந்த தடைவார் செல்லுஞ்***
***செவ்விய நெறிய தாகத் திருத்தில்லை மன்றுள் ஆடும்***
***நவ்வியங் கண்ணாள் பங்கர் நற்கழல் நண்ணி னாரே. 44***

(இ-ள்.) இவ்விதமாகத் திருநாவுக்கரசுசுவாமிகளுடைய திருநாமத்தைத் துதித்து, எல்லாப் பொருள்களும் எந்நாளும் அந்தத் தவமுனிவராகிய திருநாவுக்கரசுசுவாமிகளது அழகிய திருவடிகளே யென்று உணர்ந்தொழுகுகின்ற அப்பூதியடிகணா யனார் தாம் ஒழுகிவரும் நன்மார்க்கப்படியே நடந்து, திருத் தில்லையில் கனகசபையிலே ஆனந்தத் தாண்டவஞ் செய் தருளும் சிவகாமவல்லிபாகராகிய சிவபெருமானுடைய ஸ்ரீகுஞ்சிதபாதத்தை யடைந்தார். -எ-று.

***மான்மறிக் கையர் பொற்றாள் வாகீசர் அடைவால் பெற்ற***
***மேன்மைஅப் பூதி யாராம் வேதியர் பாதம் போற்றிக்***
***சான்மலர்க் கமல வாவிக் கழனிசூழ் சாத்த மங்கை***
***நான்மறை நீல நக்கர் திருத்தொழில் நவில லுற்றேன். 45***

(இ-ள்.) மான் கன்றை ஏந்திய திருக்கரதையுடைய சிவபெருமானது அழகிய திருவடிகளைத் திருநாவுக்கரசுசுவாமி களுடைய சார்பினால் பெற்ற மேன்மை பொருந்திய அப் பூதியடிகணாயனாரென்னும் வேதியரது திருவடிகளைத் துதித்து, வாசனை வீசுகின்ற தாமரை மலர்கள் பொருந்திய தடாகங்களும் கழனிகளும் சூழ்ந்த திருச்சாத்தமங்கை யென்னும் ஊரில் அவதரித்த நான்கு வேதங்களையுணர்ந்த திருநீலநக்க நாயனாருடைய திருத்தொண்டைச் சொல்லத் தொடங்கினேன். -எ-று.

❑ ❑ ❑

# ௩௨. திருநீலநக்க நாயனார் புராணம்

*பூத்த பங்கயப் பொகுட்டின்மேற் பொருகயல் உகளுங்*
*காய்த்த செந்நெலின் காடுசூழ் காவிரி நாட்டுச்*
*சாத்த மங்கைஎன் றுலகெலாம் புகழ்வுறுந் தகைத்தால்*
*வாய்த்த மங்கல மறையவர் முதற்பதி வனப்பு.* 1

(இ-ள்.) மலர்ந்த தாமரைப் பொகுட்டின்மேல் மோதுகின்ற கெண்டை மீன்கள் புரள்கின்ற (வயல்களில்) காய்க்கப்பட்ட செந்நெற்றொகுதிகள் மிகுதியாகச் சூழ்ந்த சோழவளநாட்டிலே சிறந்த மங்களகரம் பொருந்திய வேதியர்கள் வாழ்கின்ற முதன்மையாகிய அவ்வூரின் சிறப்பானது திருச்சாத்தமங்கை யென்று உலக முழுமையும் வழங்குகின்ற பெருமையையுடையது. -எ-று.

*நன்மை சாலும்அப் பதியிடை நறுநுதல் மடவார்*
*மென்ம லர்த்தடம் படியமற் றவருடன் விரவி*
*அன்னம் முன்துறை ஆடுவ; பாடுவ சாமம்*
*பன்ம றைக்கிடை யுடன்பயிற் றுவபல பூவை.* 2

(இ-ள்.) நன்மை மிகுந்த அந்தச் சாத்தமங்கையென்னுமூரில் நல்ல நெற்றியையுடைய மாதர்கள் மிருதுவாகிய மலர்களை யுடைய தடாகத்தில் ஸ்நானஞ்செய்ய அம்மாதர்களோடு கலந்து அன்னங்களும் முன்னே அத்துறைகளில் நீராடுவன; பலவேதங்களை அத்தியயனஞ்செய்யும் பிராமணச் சிறுவர் களோடு தாம்கற்ற சாமவேதத்தைப் பல நாகணவாய்ப் பறவைகள் தம் குஞ்சுகளுக்குக் கற்பிக்கின்றன. - எ-று.

*"ஆய்ந்த மெய்ப்பொருள் நீ"றென வளர்க்கும்அக் காப்பில்*
*ஏய்ந்த மூன்றுதீ வளர்த்துளார் இருபிறப் பாளர்;*
*நீந்து நல்லறம் நீர்மையின் வளர்க்கும்அத் தீயை*
*வாய்ந்த கற்புடன் நான்கென வளர்ப்பர்கண் மடவார்.* 3

(இ-ள்.) வேதத்தில் ஆராய்ந்து தேர்ந்த உண்மைப் பொருள் திருவெண்ணீறேயென்று அதனை விருத்திசெய்கின்ற அந்தச் சாத்தமங்கையில் வேதியர்கள் வேதத்தில் சொல்லுகின்ற ஆவகனீயம் - காருகபத்தியம் - தக்கணாக்கினி என்னும் முத்தீயையும் வளர்ப்பார்கள்; நல்ல தருமத்தின் முறைமைப்படியே மிகுதியாக வளர்க்கின்ற அம்முத்தீயைச் சிந்த கற்புடனே நான்கென்று அவ்வேதியர் மாதர்கள் வளர்ப்பார்கள். -எ-று.

***சீலம் உய்த்தஅத் திருமறை யோர்செழு மூதூர்***
***ஞாலம் மிக்கநான் மறைப்பொருள் விளக்கிய நலத்தார்***
***ஆலம் வைத்தகண் டத்தவர் தொண்டராம் அன்பர்***
***"நீல நக்கனார்" என்பவர் நிகழ்ந்துளார் ஆனார்.*** 4

(இ-ள்.) நல்லொழுக்க நெறியில் தம்மைச் செலுத்திய அவ்வேதியர்கள் வாழும் வளந்தங்கிய சாத்த மங்கையில், உலகத்தில் சிறந்தோங்கும் வேதியர்குலத்தை விளங்கும் நன்மையையுடையவரும், விஷத்தையணிந்த கண்டத்தையுடைய சிவபெருமானுக்குத் தொண்டு பூண்டொழுகும் மெய்யன்பரும், திருநீலநக்கநாயனாரென்னுந் திருநாமமுடையவருமாகிய ஒருவர் வாழ்ந்து கொண்டிருந்தார். -எ-று.

***"வேத உள்ளுறை யாவன விரிபுனல் வேணி***
***நாதர் தம்மையும் அவரடி யாரையும் நயந்து***
***பாதம் அர்ச்சனை புரிவதும் பணிவதும்" என்றே***
***காத லால்அவை இரண்டுமே செய்கருத் துடையார்.*** 5

(இ-ள்.) வேதங்களிற் கூறும் உட்பொருளாவன, பரவிய கங்கைநதியைத் தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானையும், அவரது அடியார்களையும் விரும்பிப் பாதபூசை செய்வதும் வணங்குவதுமேயாகுமென்று நினைத்து, மிகுந்த விருப்பத்தோடு அவ்விரண்டையுமே செய்கின்ற கருத்தையுடையவர், அந்தத் திருநீலநக்கநாயனார். -எ-று.

***மெய்த்த ஆகம விதிவழி வேதகா ரணரை***
***நித்தல் பூசனை புரிந்தெழு நியமமுஞ் செய்தே***
***அத்தர் அன்பருக் கமுதுசெய் விப்பது முதலா***
***எத்தி றத்தன பணிகளும் ஏற்றெதிர் செய்வார்.*** 6

(இ-ள்.) உண்மையாகிய சிவாகமவிதியின்படியே, வேதகாரணராகிய சிவபெருமானைத் தினந்தோறும் இடைவிடாது பூசித்துவருகின்ற நியமத்தையுஞ் செய்து வருவதுமல்லாமல், அச்சிவபெருமானுடைய அடியார்களுக்குத் திருவமுது செய்விப்பது முதலாகிய எவ்வகைப்பட்ட திருத்தொண்டு களையும் மேற்கொண்டு செய்கின்றவர். -எ-று.

***ஆய செய்கையில் அமருநாள் ஆதிரை நாளில்***
***மேய பூசனை நியதியை விதியினால் முடித்துத்***
***தூய தொண்டனார் தொல்லைநீ டயவந்தி அமர்ந்த***
***நாய னாரையும் அருச்சனை புரிந்திட நயந்தார்.*** 7

(இ-ள்.) நல்ல குணத்தையுடைய திருநீலநக்கநாயனார் அவ்வாறு சிவபூசை அடியார் பூசைகளைச் செய்தொழுகும் நாளிலே, ஒருநாள் திருவாதிரை நட்சத்திரத்திலே, தாம் செய்தற்குரிய ஆன்மார்த்த பூசா விதிகளை முறைமைப்படி செய்து முடித்து, பழைமையாகிய உயர்ந்த அயவந்தி என்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானையும் அருச்சிக்கும் படி விருப்பங்கொண்டார். -எ-று.

***உறையு ளாகிய மனைநின்றும் ஒருமைஅன் புற்ற***
***முறைமை யால்வரு பூசைக்கும் முற்றவேண் டுவன***
***குறைவ றக்கொண்டு மனைவியார் தம்மொடுங்கூட***
***இறைவர் கோயில்வந் தெய்தினர் எல்லையில் தவத்தோர்.*** 8

(இ-ள்.) அளவற்ற பெருந்தவத்தையுடைய திருநீலநக்கநாயனார், தமது வாசஸ்தானமாகிய திருமாளிகையினின்றும் ஒருமைப் பட்ட அன்புகாரணமாகச் செய்கின்ற பூசைக்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் குறைவில்லாமல் எடுத்துக் கொண்டு தமது பத்தினியாரோடுகூடச் சிவபெருமான் வீற்றிருந்தருளும் அயவந்தியென்னும் ஆலயத்தை வந்தடைந் தார். -எ-று.

***அணைய வந்துபுக் கயவந்தி மேவிய அமுதின்***
***துணைம லர்க்கழல் தொழுதுபூ சனைசெயத் தொடங்கி***
***இணைய நின்றங்கு வேண்டுவ மனைவியார் ஏந்த***
***உணர்வின் மிக்கவர் உயர்ந்தஅர்ச் சனைமுறை உய்த்தார்.*** 9

(இ-ள்.) அத்திருக்கோயிலின் சமீபமாகவந்து உள்ளே நுழைந்து, அயவந்தி என்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் அமுதத்தையொத்த சிவபெருமானது தாமரைமலர் போன்ற இரண்டு திருவடிகளையும் வணங்கிப் பூசை செய்யத் தொடங்கி, அருகில் நின்று கொண்டு அங்குவேண்டிய உபகரணங்களைத் தமது பத்தினியார் எடுத்துக்கொடுக்க, அறிவிற்சிறந்த திருநீலநக்க நாயனார் சிறந்த பூசையை விதிப்படியே செய்தார். -எ-று.

***நீடு பூசனை நிரம்பியும் அன்பினால் நிரம்பார்***
***மாடு சூழ்புடை வலங்கொண்டு வணங்கிமுன் வழுத்தித்***
***தேடு மாமறைப் பொருளினைத் தெளிவுற நோக்கி***
***நாடும் அஞ்செழுத் துணர்வுற இருந்துமுன் நவின்றார். 10***

(இ-ள்.) மிகுந்த சிவபூசையை விதிப்படி செய்தும் அன்புகுறையாதவராய் அருகில் சூழ்ந்துள்ள பிரகாரத்தைப் பிரதக்ஷிணஞ்செய்து, திருமுன்னேநின்று வணங்கித்துதித்து, அறிஞர்களால் தேடப்பட்ட சிறந்த வேதப்பொருளாகிய சிவபெருமானை நன்றாகத் தரிசித்து, விரும்புகின்ற திருவைந் தெழுத்தும் உணர்விலே பொருந்தத் திருமுன்னின்று ஜபித்தார். -எ-று.

***தொலைவில் செய்தவத் தொண்டனார் சுருதியே முதலாங்***
***கலையின் உண்மையாம் எழுத்தஞ்சுஞ் கணிக்கின்ற காலை***
***நிலையின் நின்றுமுன் வழுவிட நீண்டபொன் மேருச்***
***சிலையி னார்திரு மேனிமேல் விழுந்ததோர் சிலம்பி. 11***

(இ-ள்.) அழிவில்லாத தவத்தைச் செய்த திருநீலநக்க நாயனார் வேதமுதலாகிய சகல சாஸ்திரங்களிலும் கூறும் மெய்ப்பொருளாகிய திருவைந்தெழுத்தையும் ஜபிக்கும் பொழுது, ஒரு சிலம்பிப்பூச்சியானது தானிருக்கும்மிடத்தினின் றும் முன்னே வழுவுதலால் நீண்ட பொன் மயமாகிய மேருவைவில்லாகவுடைய சிவபெருமானது திருமேனிமேல் விழுந்தது. -எ-று.

***விழுந்த போதில்அங் கயல்நின்ற மனைவியார் விரைவுற்(று)***
***எழுந்த அச்சமோ டிளங்குழ வியில்விழுஞ் சிலம்பி***
***ஒழிந்து நீங்கிட ஊதிமுன் துமிப்பவர் போலப்***
***பொழிந்த அன்பினால் ஊதிமேல் துமிந்தனர் போக. 12***

(இ-ள்.) அவ்வாறு சிலம்பிப்பூச்சி விழுந்தபொழுது, அங்குச் சமீபத்தில் நின்ற அவரது மனைவியார் விரைந்து மனதிலுண் டாகிய அச்சத்தோடு சிறுகுழந்தைமேல்விழுகின்ற சிலம்பிப் பூச்சியின் விஷமானது நீங்கும்படி ஊதி முன்னே வாய்நீரை உமிழ்பவர் போல அன்பின் மிகுதியினால் அது நீங்கும்படி வாயினால் ஊதித் திருமேனியில் வாய் நீர் உமிழ்ந்தார். -எ-று.

***பதைத்த செய்கையால் மனைவியார் முற்செயப் பந்தஞ்***
***சிதைக்கு மாதவத் திருமறை யவர்கண்டு தங்கண்***
***புதைத்து 'மற்றிது செய்ததென்? பொறியிலாய்!' என்னச்***
***"சுதைச்சி லம்பிலே் விழவூதித் துமிந்தனன்" என்றார். 13***

(இ-ள்.) (சிவபெருமானது திருமேனியின்மேல் சிலம்பி விழுந்தமை பற்றித்) தமது திருவுள்ளம் பதைத்த காரணத்தினால், மனைவியார் முன்னே இவ்வாறு ஊதித்துமிய, அதனைப் பாசபந்தங்களைெயொழிக்கும் மகத்தாகிய தவத்தையுடைய திருநீலைநக்கநாயனார் பார்த்துத் தம்முடைய கண்களை மூடிக்கொண்டு, அறிவில்லாதவளே! நீ இப்படிச் செய்த தென்னை? என்று கேட்க, மனைவியார், வெண்சிலம்பியானது சிவபெருமானுடைய திருமேனியில் விழுந்ததனால் ஊதித் துமிந்தேனென்று சொன்னார். -எ-று.

***மனைவி யார்செய்த அன்பினை மனத்தினிற் கொள்ளார்***
***புனையும் நூல்மணி மார்பர்தம் பூசனைத் திறத்தில்***
***"இனைய செய்கைஇங் கநுசித மாம்" என எண்ணும்***
***நினைவி னால்அவர் தம்மைவிட் டகன்றிட நீப்பார். 14***

(இ-ள்.) பூணூலையணிந்த அழகிய மார்பினையுடைய திருநீலநக்கநாயனார் தமது மனைவியார் சிவபெருமான் விஷயத்தில் செய்த அன்பின் திறத்தைத் சிறிதும் மனதிற்கொள் ளாமல், தாம் செய்யும் சிவபூசையில் இவ்வாறு செய்தது இங்கே அநுசிதமானகாரியமாம் என்று நினைக்கும், நினைவினால் அம்மனைவியாரை விட்டு நீங்கும்படி விலக்குவாராயினார். -எ-று.

***"மின்நெ டுஞ்சடை விமலர்மேல் விழுந்தநூல் சிலம்பி***
***தன்னை வேறொரு பரிசினால் தவிர்ப்பது தவிர***
***முன்அ ணைந்துவந் தூதிவாய் நீர்ப்பட முயன்றாய்;***
***உன்னை யான்இனித் துறந்தனன் ஈங்" கென உரைத்தார். 15***

(இ-ள்.) மின்னலைப்போல விளங்குகின்ற நீண்டசடை முடியையுடைய சிவபெருமானது திருமேனியின்மேல் தவறி விழுந்த நூற்சிலம்பியை வேறொரு வகையால் விலக்குவதல்லாமல் முன்னே விரைந்துவந்து ஊதி வாய்நீரைத் துமிந்தாய்; இங்கே இவ்வநுசிதஞ்செய்த உன்னை யான் இனிமேல் துறந்தேனென்று சொன்னார். -எ-று.

***மற்ற வேலையிற் கதிரவன் மலையிசை மறைந்தான்;***
***உற்ற ஏவலின் மனைவியார் ஒருவழி நீங்க***
***முற்ற வேண்டுவ பழுதுதீர் பூசனை முடித்துக்***
***கற்றை வேணியார் தொண்டருங் கடிமனை புகுந்தார். 16***

(இ-ள்.) அச்சமயத்தில் சூரியன் அஸ்தமனகிரியில் மறைந்தான்; மனைவியார் கணவனாருடைய ஏவலின்படி ஒருவழி மறைவாக ஒதுங்கி நிற்க, செய்யவேண்டிய பிராயச்சித்த பூசையைச் செய்து முடித்துக் கூட்டமாகிய சடைமுடியையுடைய சிவபெருமானடியவராகிய திருநீலநக்கநாயனாரும் காவலையுடைய தமது திருமாளிகைக்குச் சென்றார். -எ-று.

***அஞ்சும் உள்ளமோ டவர்மருங் கணைவுற மாட்டார்***
***நஞ்சம் உண்டவர் கோயிலில் நங்கையார் இருந்தார்;***
***செஞ்சொல் நான்மறைத் திருநீல நக்கர்தாம் இரவு***
***பஞ்சின் மெல்லணைப் பள்ளியிற் பள்ளிகொள் கின்றார். 17***

(இ-ள்.) மனைவியார் அஞ்சுகின்ற உள்ளத்தோடும் தங் கணவனாரிருக்குமிடத்திற் செல்லமாட்டாதவராய், விஷத்தையுண்டருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலில் இருந்தார்; செவ்விய சொற்களையுடைய நான்கு வேதங்களையுமுணர்ந்த திருநீலநக்கநாயனார் அன்றிரவில், பஞ்சாலமைத்த மிருதுவாகிய மெத்தையை யுடைய சயனத்தில் நித்திரை செய்கின்றார். -எ-று.

***பள்ளி கொள்பொழு தயவந்திப் பரமர்தாங் கனவில்***
***வெள்ள நீர்ச்சடை யொடுநின்று மேனியைக் காட்டி***
***"உள்ளம் வைத்தெமை யூதிமுன் துமிந்தபால் ஒழியக்***
***கொள்ளும் இப்புறஞ் சிலம்பியின் கொப்புள்" என்றருள. 18***

